
வெண்மையாக
சலவை செய்யப்
பட்டுள்ளன
பிரகாசமாக
சலவை செய்யப்
பட்டுள்ளன
ஸன்லைட்
சோப்பினால் தான்
துணிகளை
அடித்துத் துவைக்காமலே
வெண்மையாகவும்
பிரகாசமாகவும்
சலவை செய்கிறது!
SUNLIGHT
SOAP
SUNLIGHT SOAP

S. 201-50 TM

# கல்கி பொருளடக்கம்

மலர் 12 | இதழ் 33

1953 மார்ச் 15

நந்தன ஞு பங்குனி 2உ.



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



ஜூபிடர் & மேகலா
கொடுமைகளை ஒழிக்க வாழ்வையே பணயம் வைத்த தியாகியின் வீர வரலாறு!
எம்.ஜி.ராம்சந்தர்
நடிக்கும்:
நாம்
சென்னை ஸ்ரீ கிருஷ்ணா... சித்ரா... ராஜகுமாரி
மற்றும் தென்னாடெங்கும் நடைபெறுகிறது
மு.கருணாநிதி... A.காசிலிங்கம்... C.S.ஜெயராம் ......நெப்டியூன்

கல்கி

மலர் 12 | இதழ் 13

தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

# மூன்று நகரங்கள்

சென்னை இராஜ்ய மெங்கும் சமீபத்தில் நகர சபைத் தேர்தல்கள் நடைபெற்றன. மிகப் பெரும்பாலும் முடிவுகளும் வெளியாகி விட்டன. தேச நன்மையில் கருத்துள்ளவர்களுக்கு அம் முடிவுகள் ஓரளவு திருப்தி அளித்திருக்கும்.

இந்த இராஜ்யத்தில் புதிய ராஜாஜி மந்திரி சபை ஏற்பட்டு வெகு சீக்கிரத்திலேயே நகரசபைத் தேர்தல்கள் வந்து விட்டன. (மற்ற இராஜ்யங்களில் இப்படி நடைபெறவில்லை.) புதிய ஆட்சியினால் ஏற்பட்ட மாறுதல்களை மக்கள் உணர்வதற்கும் அவரவர்களுடைய மனோபாவத்தில் மாறுதல் ஏற்படுவதற்கும் அவசியமான அவகாசம் அளிக்கப்படவில்லை. புது மந்திரி சபை ஏற்பட்டு முழுமையாக ஆறு மாதங்கூட ஆகவில்லை. சீர்குலைந்திருந்த காங்கிரஸ் ஸ்தாபனங்களை நல்லபடியாகச் சீர்திருத்தி அமைத்துக் காங்கிரஸ் வேலைக்குப் புத்துயிர் தரவேண்டிய காரியமும் சரிவர நடைபெறவில்லை. அதற்குள்ளே இந்த நகரசபைத் தேர்தல் அவசரப்பட்டுக் கொண்டு வந்து விட்டது. அவசரக் கோலம் அள்ளித் தெளித்த கதையாகவே பல இடங்களில் காங்கிரஸ் ஸ்தாபனங்கள் நகரசபைத் தேர்தல்களில் ஈடுபட்டன. மற்றும் பல இடங்களில் காங்கிரஸ் ஸ்தாபனங்கள் நகரசபைத் தேர்தல்களில் நேரடியாகக் கலந்து கொள்ளாமலே இருந்து விட்டன.

எல்லா நிலைமைகளையும் சீர் தூக்கி லாபநஷ்டக் கணக்குப் பார்க்கும் போது, பொதுவாக இத்தேர்தல்களில் காங்கிரஸ் கணிசமான வெற்றி அடைந்திருக்கிறது என்றே சொல்ல வேண்டும்.

காங்கிரஸ் அடைந்த வெற்றியைக் காட்டிலும் முக்கியமான அம்சம், காங்கிரஸுக்கு விரோதமான முக்கிய கட்சிகளும் கோஷ்டிகளும் சென்னை இராஜ்யமெங்கும் படுதோல்வி அடைந்திருப்பதாகும்.

இப்படி இரண்டு விதமாகவும் தேர்தல் முடிவுகளை ஆராய்ந்து பார்க்கும்போது இந்த இராஜ்யத்தில் அரசியல் காற்று காங்கிரஸுக்கு அநுகூலமாகத் திரும்பியிருக்கிறது என்று நிச்சயமாகச் சொல்லலாம்.

* * * *

பெரிய நகரங்களுக்குள்ளே கோயமுத்தூரிலும் மதுரையிலும் காங்கிரஸ் மாபெரும் வெற்றி அடைந்திருக்கிறது.

கோயமுத்தூர் எப்போதுமே காங்கிரஸ் பற்றுள்ள நகரம். சென்ற பொதுத் தேர்தலிலும் காங்கிரஸுக்கு அந் நகரில் வெற்றி கிடைத்தது. அதே நிலைமை நீடித்திருக்கிறது. இன்னும் சிறிது அபிவிருத்தியும் அடைந்திருக்கிறது என்று நகரசபைத் தேர்தலின் மூலம் தெரிய வந்திருக்கிறது.

மதுரை நகரில் காங்கிரஸின் வெற்றி மிக மிக முக்கியத்துவம் வாய்ந்ததாகும். சென்ற பொதுத் தேர்தலில் காங்கிரஸின் சரிவு மதுரைமா நகரிலேதான் ஆரம்பமாயிற்று. அந்த நிலைமை இப்போது மாறிவிட்டது என்பது நகரசபைத் தேர்தலில் காங்கிரஸ் அடைந்துள்ள மகத்தான வெற்றியின் மூலம் நிதரிசனமாகிறது. ராஜாஜி முதன் மந்திரியானதும் முதலில் மதுரை மா நகருக்குத்தான் சென்றிருந்தார். அப்போது மதுரை மக்கள் ராஜாஜிக்கு அளித்த வரவேற்பு அதற்கு முன்னாலும் கண்டதில்லை, இனியும் காணப்போவதில்லை என்று சொல்லக்கூடியதாக இருந்தது. மதுரை மக்கள் அப்போது காட்டிய உற்சாகம் நீர்க்குமிழி போன்ற வெளிப் பகட்டான உற்சாகமல்ல வென்பது நகரசபைத் தேர்தலின் மூலம் வெளியாகி யிருக்கிறது.

பொதுஜனங்களுக்கு எவ்வளவு உற்சாகம் இருந்தபோதிலும் அது காரியத்தில் பயன்படுவதற்கு வேண்டிய வழி முறைகளை வகுத்துக் கொடுப்பது காங்கிரஸ் தலைவர்கள் — ஊழியர்களின் கடமையும் உரிமையுமாகும்.

மதுரை நகரின் காங்கிரஸ் கமிட்டி திருத்தி அமைக்கப்பட்டதும், ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர் அந்தக் கமிட்டியின் தலைவராகித் தேர்தலை நடத்தி வைக்கும் பொறுப்பை

எனவே, காலஞ் சென்ற ஸ்டாலினின் பூத உடலைத் தரிசிக்கப் பத்து மைல் தூரத்துக்கு ருஷ்ய மக்கள் கண்ணீரும் கம்பலையுமாகக் காத்து நின்றதைக் குறித்துப் பிரமிப்பு அடைவதற்கில்லை.

இன்று ஸ்டாலினின் புகழ் எட்டுத் திசைகளிலும் எதிரொலிக்கின்றது.

மார்ஷல் ஸ்டாலினுக்கு உலக நாடுகள் யாவும் மரியாதை செலுத்துகின்றன.

* * *

ஸ்டாலினுக்குப் பிறகு அவரது ஸ்தானத்தில் யார் ருஷ்யாவின் பிரதம மந்திரியாக வருவது என்பது பற்றிப் பலத்த போட்டியும் போராட்டமும் ஏற்படும் என்று அமெரிக்கப் பத்திரிகைகள் கூறிய ஜோஸ்யம் பொய்த்து விட்டது.

யாதொரு அசம்பாவிதமுமின்றி, மிகவும் ஒழுங்கான முறையில் ருஷ்யாவில் புதிய மந்திரி சபை அமைக்கப்பட்டிருக்கிறது.

போல்ஷ்விக் கட்சியின் முக்கிய தலைவர்களில் ஒருவரும், ஒரு சமயம் ஸ்டாலினின் அந்தரங்கக் காரியதரிசியாக இருந்தவருமான ஸ்ரீ ஜார்ஜி மாலங்காவ் ருஷ்யாவின் பிரதம மந்திரி பதவியை ஏற்றிருக்கிறார்.

ஏற்கெனவே பத்து வருஷங்களுக்கு மேல் ருஷ்யா சர்க்கார் வெளிநாட்டு மந்திரியாக இருந்த பழம் பெருச்சாளியான ஸ்ரீ மாலடாவ் மறுபடியும் அதே பதவிக்கு வந்துள்ளார்.

ஐம்பத்தொன்று வயதான மாலங்காவ், ஸ்டாலினின் சவ அடக்கத்தின் போது கூறிய வார்த்தைகள், ருஷ்யாவின் எதிர்காலக் கொள்கையை ஐயம்திரிபுக்கு இடமின்றி, இரண்டு அர்த்தத்துக்கு இடமின்றித் தெளிவாக்குகின்றன.

பரஸ்பர நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்ட உலக சமாதானம் தான் ருஷ்ய சர்க்காரின் வெளிநாட்டுக் கொள்கை; வெவ்வேறு முறையான முதலாளித்துவமும் அபேதவாதமும் ஒத்துழைக்க வேண்டும் என்பதே ருஷ்யாவின் கொள்கை என்று மாலங்காவ் கூறியிருக்கிறார்.

அவரது வார்த்தைகள் சர்வ தேச சமாதானத்தில் ஆர்வம் கொண்ட உலக மக்களுக்கு மிகுந்த நம்பிக்கை அளிப்பதாக இருக்கின்றன.

# பூதத்தின் தீராப் பசி

முஸ்லிம் லீகர்கள் பல வருஷங்களுக்கு முன் பயங்கரமான ஒரு பூதத்தைச் சிருஷ்டித்தார்கள். அதன் பெயர்தான் வகுப்பு வெறி!

அந்தப் பூதம் இந்தியாவை இரண்டாகப் பிளந்தது. எத்தனை எத்தனையோ ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் பலி கொண்டது. அவர்களுடைய சொத்துக்களைக் கபளீகரம் செய்தது. அப்படியும் அதன் பசி தீர்ந்தபாடில்லை.

தீராப் பசி படைத்த மேற்படி பூதம் இப்போது வேறு வழியின்றித் தன்னைச் சிருஷ்டித்தவர்களின்மீதே பாய முற்பட்டிருக்கிறது.

முஸ்லிம்களுக்குள்ளேயே ஷியாக்கள், ஸுன்னிகள், வகாபியர்கள், அகமதியர்கள் என்று சில பிரிவினர்கள் உண்டு. ஏற்கெனவே, ஹிந்துக்களைக் காபிர்கள் என்று கூறி வகுப்புத் துவேஷத்தைக் கிளப்பி விட்டார்கள். இப்போது தங்களுக்குள்ளேயே ஒரு பிரிவினரான அகமதியர்களைக் காபிர்கள் என்று கூறிப் பெரும் கலகத்தில் இறங்கி யிருக்கிறார்கள்.

அதன் காரணமாகக் கராச்சி, லாகூர், சயல்கோட் முதலிய பாகிஸ்தானில் உள்ள பல முக்கிய நகரங்களிலும் நெருக்கடியும் கலகங்களும் ஏற்பட்டிருக்கின்றன.

* * *

முஸ்லிம் சமூகத்தைச் சேர்ந்த காதியானி அல்லது அகமதியப் பிரிவைச் சேர்ந்தவர்கள் இஸ்லாம் மத பக்தியில் யாருக்கும் குறைந்தவர்கள் அல்ல. ஆனால் மற்றப் பிரிவினருக்கும் அகமதியர்களுக்கும் ஒரு வேற்றுமை உண்டு. மற்றவர்கள் முகமது நபி ஒருவர்தான் இஸ்லாமின் ஏக தலைவர் என்று கூறுகிறார்கள். அகமதியர்களோ எனில், முகமது நபி நாயகத்தைப் போல் மற்றும் பல மகான்கள் இஸ்லாம் மத கர்த்தாக்களாக இருந்திருக்கிறார்கள் என்ற கொள்கை உடையவர்கள்.

பாகிஸ்தான் வெளிநாட்டு மந்திரி சர் ஜபருல்லா கான் அகமதியர் பிரிவைச் சேர்ந்தவரானதால், ஆத்திரம் கொண்ட பாகிஸ்தானியர் அவர்மீதும் பாய ஆரம்பித்திருக்கிறார்கள்.

கலகக்காரர்கள் போலீசாரையும் போலீஸ் ஸ்டேஷன்களையும் தாக்க முற்பட்டதால் நிலைமை மிதமிஞ்சி விட்டது. லாகூரில் இராணுவச் சட்டம் பிறப்பிக்கும்படியான நிலைமையும் ஏற்பட்டது.

லாகூர் தெருக்களில் பாகிஸ்தான் படைகளும் டாங்கிகளும் காவல் புரிந்து வருகின்றன எனில், நெருக்கடியின் தன்மையை ஊகித்துக் கொள்ளலாம்.

மேற்படி கலக சம்பந்தமாக இதுவரையில் ஆயிரம் பேருக்கு மேல் கைது செய்யப்பட்டுள்ளனர்.

பாகிஸ்தானில் அரசியல் நிர்ணய சபை அமைக்கப்பட்டுப் பல மாதங்கள் ஆகிவிட்டன. ஆனால் இன்னும் அரசியல் திட்டம் உருவாகவில்லை.

பாகிஸ்தான் சர்க்கார் அனுஷ்டித்து வரும் மத அடிப்படை அரசியலை ஜனாப் சுஹ்ரவர்த்தி போன்ற பிரமுகர்கள் கண்டித்து வருகின்றனர்.

மதத்தை அடிப்படையாகக் கொண்ட சர்க்காரை அமைக்கப் பாகிஸ்தான் தலைவர்கள் முற்பட்டிருப்பதாலேயே அங்கு பல பிரச்னைகள் எழுந்திருக்கின்றன. அந்தப் பிரச்னைகளை மழுப்பி மறைப்பதற்காகவே அவர்கள் மதவெறியைத் தூண்டிவிட்டு இந்தியாவுக்கு விரோதமாக இடைவிடாது பிரசாரம் செய்து வருகிறார்கள். அவ்விதம் தூண்டிவிட்ட மதவெறி பூதம் இப்போது அவர்களுக்கே வினையாக முடிந்திருக்கிறது.

* * *

பாகிஸ்தானில் எழுந்துள்ள கலகம் பாரத நாட்டுக்குச் சிறந்த படிப்பினை ஆகும்.

இந்தியாவில் வகுப்பு வாதத்துக்குச் சிறிதும் இடம் கொடுக்கக்கூடாது. அதற்கு இடம் கொடுப்பது ஆபத்தாக முடியும் என்று ஜவாஹர்லால்ஜி முதலிய தலைவர்கள் அடிக்கடி எச்சரித்து வருகிறார்கள்.

வகுப்புவாதம் உள்நாட்டில் ஒற்றுமையைக் குலைத்து, உள்நாட்டுக் கலகங்களையும் சிருஷ்டித்து விடும் என்பதைப் பாகிஸ்தானில் தற்சமயம் நடைபெறும் நிகழ்ச்சிகள் நிரூபிக்கின்றன.

# இசைக்கலையின் தவப் புதல்வர்

ஜனாதிபதி ராஜேந்திர பிரஸாத் அவர்களைத் தலைவராகப் பெற்ற பாரத சுதந்திர சர்க்கார் ஒரு காரியத்தைச் செய்தார்கள்,—அதைத் திருச்செந்தூர் முருகன் "சபாஷ்!" என்று ஆமோதித்து அருளினார் என்றால்,—அது எவ்வளவு விசேஷ நிகழ்ச்சியாக இருக்க வேண்டும்!

பாரத தேசம் முழுவதும் அந்தச் செயலை ஆமோதித்தது என்று சொன்னால் மட்டும் போதாது;—மண்ணுலகமும் விண்ணுலகமும் ஆமோதித்து மகிழ்ந்தது என்றே சொல்ல வேண்டும்.

இந்த ஆண்டில் நமது இந்தியக் குடியரசு சர்க்கார் கர்நாடக சங்கீதக் கலையைக் கௌரவிப்பதற்காகத் தென்னாட்டுச் சங்கீத வித்வான்கள் இருவரைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் சங்கீத கலாநிதி செம்மங்குடி சீனிவாசய்யர் அவர்கள்.

இந்த மகிழ்ச்சிகரமான செய்தி வெளியான சில தினங்களுக்குள்ளே செம்மங்குடி சீனிவாசய்யர் திருச்செந்தூர் முருகப் பெருமானின் சந்நிதானத்தில் சங்கீதக் கச்சேரி நிகழ்த்தினார். முருகப் பெருமானோடு சேர்ந்து ஆயிரக் கணக்கான முருகனடியார்கள் கேட்டு ஆனந்தித்தார்கள். கச்சேரி அமோகமாக அமைந்தது.

இந்தச் சந்தர்ப்பத்தைத் திருநெல்வேலி ஜில்லா சங்கீத ரஸிகர்கள் நன்கு பயன்படுத்திக் கொண்டார்கள். கர்நாடக சங்கீதத்துக்கு இந்திய சர்க்கார் அளித்த சிறப்பைத் தாங்களும் பகிர்ந்து கொண்டு அநுபவிக்க விரும்பினார்கள். செம்மங்குடி சீனிவாசய்யருக்குப் பாராட்டு விழா நடத்த ஏற்பாடு செய்தார்கள். நண்பர் ஸ்ரீ எஸ். என். சோமயாஜுலு எம். எல். ஏ., பேராசிரியர் அ. சீனிவாச ராகவன், ஸ்ரீ எம். ஆர். மேகநாதன் ஆகியவர்களும், திருச்செந்தூர்ப் பிரமுகர்களும், ஆலய டிரஸ்டிகளும் உற்சாகமாக ஒத்துழைத்துப் பாராட்டு விழாவைச் சிறப்பாக நடத்தினார்கள். பாரத அரசாங்கத்தின் ஆஸ்தான வித்வானுக்குப் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார்கள். மலை மலையாகக் குவியும்படி மலர்மாலைகளைச் சூட்டினார்கள். சொன்மாலைகளும் அணிவித்தார்கள்.

* * *

மேற்கூறிய வைபவத்தில் ரஸிகர்களின் சார்பாகச் சொற்பொழிவு நிகழ்த்திய பேராசிரியர் சீனிவாசராகவன் இசைக் கலையின் மகிமையைப்பற்றிய பாரதியாரின் பாடல் வரிகள் சிலவற்றை வெகு பொருத்தமாக எடுத்துச் சொன்னார்.

"எத்தனை கோடி இன்பம் வைத்தாய்! இறைவா!" என்று இவ்வுலகில் உள்ள இயற்கை இன்பங்களைக் குறித்துப் பெருமிதத்துடன் பாடிய பாரதியார், அத்தனைகோடி இன்பங்களிலும் இசை இன்பத்துக்கு இணையானது வேறு எதுவுமில்லை யென்று குயில் பாட்டில் கூறியிருக்கின்றார். பிரம்மதேவனைப் பார்த்து இருமுறை 'அடா' போட்டுப் பாரதியார் பாடியிருப்பதாவது:—

"ஆனாலும் நின்றன் அதிசயங்கள் யாவினுமே
கானாமுதம் படைத்த காட்சி மிக விந்தையடா!
காட்டுநெடு வானம் கடலெல்லாம் விந்தையெனில்
பாட்டினைப்போல் ஆச்சரியம் பாரின்மிசை இல்லையடா!
பூதங்களொத்துப் புதுமைதரும் விந்தையெனில்
நாதங்கள் சேரும் நயத்தினுக்கு நேராமோ?
ஆசைதரும் கோடி அதிசயங்கள் கண்டதிலே
ஓசைதரும் இன்பம் உவமையிலா இன்பமன்றோ!"

குயிலின் கீதத்தைக் கேட்டுவிட்டே பாரதியார் இவ்வளவு பரவசப்பட்டுப் போனார்.

ஆதிகாலத்து மனிதர்கள் இயற்கையில் ஏற்படும் இனிய நாதங்களைக் கேட்டு இசை இன்பத்தை அநுபவித்தார்கள். பட்சி ஜாலங்களின் இன்ப கீதங்களைக் கேட்டு அநுபவித்தார்கள்.

மனித குலத்தின் பண்பாடு வளர வளர, இசையை ஒரு கலையாக வளர்த்து அநுபவிப்பதற்கு மக்கள் கற்றுக் கொண்டார்கள்.

எல்லா நாடுகளிலும் எல்லா இனத்தினரும் தத்தமக்குரிய சங்கீத பாணிகளை வகுத்து வளர்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

அவற்றிலே யெல்லாம் நமது தென் பாரத நாட்டில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக வளர்ந்து சிறந்திருக்கும் கர்நாடக சங்கீதத்துக்கு இணையாக வேறு எதையும் கூற முடியாது.

* * *

பண்பாடு பெற்ற மனிதர்கள் வகுத்துக் கொண்ட சங்கீத பாணிகளைப் பல்வேறு இசைக் கருவிகள் மூலமாகக் கையாண்டு அநுபவித்து மகிழலாம்.

ஆனால் இனிமைபொருந்திய மனிதக் குரல் மூலம் கேட்கும் கான வித்தைக்கு எவ்வளவு உயர்ந்த இசைக் கருவியும் இணையாகமாட்டாது.

மனிதக் குரலில் உள்ள ஜீவ சக்தியை எந்த இசைக் கருவியிலும் எதிர்பார்க்க முடியாதுதானே!

மக்கள் எல்லாருடைய குரலும் கான வித்தைக்கு உகந்ததாக இருப்பதில்லை. "மனிதர் எல்லாரும் சமம்" என்ற கொள்கை மற்ற எல்லாத் துறைகளிலும் பொருந்தினாலும், சங்கீதத் துறைக்



திருச்செந்தூர் முருகன் சந்நிதியில் சங்கீத ரஸிகர்கள் ஸ்ரீ செம்மங்குடி சீனிவாசய்யருக்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்கள்.

குப் பொருந்தாது. பூர்வ ஜன்ம புண்ணியத்தினால் கலை வாணியின் அருள் பெற்றவர்களே இசைக் கலைக்குத் தகுந்த இனிய குரலைப் பெறுகிறார்கள்.

* * *

முற் பிறப்பில் இறைவனுக்குக் குடங் குடமாகத் தேன் அபிஷேகம் செய்தவர்கள் இப்பிறப்பில் இனிய சாரீர சம்பத்தை அடைகிறார்கள் என்று பெரியோர்கள் சொல்வதுண்டு.

சங்கீத கலாநிதி செம்மங்குடி சீனிவாசய்யர் பூர்வஜன்மத்தில் குடங்குடமாகத் தேனபிஷேகம் செய்திருப்பார் என்று சொல்ல முடியாது.

"இரண்டு இரண்டு குடமாக இரண்டு கையிலும் எடுத்துக் கொண்டுபோய் இறைவனுடைய திருமேனியில் தேனைக்கொட்டி அபிஷேகம் செய்திருப்பார்!" என்று நம்பவேண்டியிருக்கிறது.

ஏனெனில், இயற்கையிலேயே இரட்டை நாதம் உள்ள சாரீர சம்பத்தையல்லவா செம்மங்குடி சீனிவாசய்யரிடம் நாம் காண்கிறோம்.

நன்றாகச் சுருதி சேர்க்கப்பட்ட தம்புராவில் ஒரு தந்தியைத் தட்டிப் பாருங்கள்; இனிய நாதம் கிளம்புகிறது. அதே தம்புராவில் இரண்டு தந்திகளைச் சேர்த்தாற்போல் தட்டுங்கள்; அப்போது புறப்படும் இரட்டை நாதம் செவி படைத்தவர்களையெல்லாம் பரவசப்படுத்தும் அல்லவா!

"அத்தகைய இரட்டை நாத சாரீரச் செல்வத்தைச் செம்மங்குடி சீனிவாசய்யருக்குக் கலைவாணி அருளியிருக்கிறாளே! அந்த சம்பத்தைப் பெறுவதற்கு இவர் முற்பிறப்பில் என்ன தவம் செய்தாரோ! அல்லது இசைக்கலை தேவிதான் என்ன தவம் செய்து இவரைப் பெற்றாளோ!"......

இத்தகைய எண்ணங்கள் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்னால் செம்மங்குடி சீனிவாசய்யரின் சங்கீதக் கச்சேரியை முதன் முதலாகக் கேட்ட போது என் மனதில் எழுந்தன.

அந்தக் கச்சேரியில் அவர் அன்று ஆலாபனம் செய்த கரகரப்ரியா, ஷண்முகப்ரியா, நாட்டக் குறிஞ்சி ராகங்களும், 'பக்கலநிலபடி,' 'மரிவேர' 'மானஸ ஸஞ்சரரே' கீர்த்தனங்களும் இன்னும் என் ஞாபகத்தில் இருக்கின்றன.

"செவிகளில் சிங்காரம் செய்து வட்டமிட்டுக் கொண்டிருக்கின்றன" என்று கூறுவது இப்பொழுதெல்லாம் விமரிசன பாஷையின் வெறும் சம்பிரதாயமாகி விட்டது. ஆனால் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்பு முற்றும் உண்மையான அநுபவமாயிருந்தது.

அதற்குப் பிறகு செம்மங்குடியின் அபூர்வமான இரட்டைநாதக் குரலுக்கு ஏதேனும் அபாயம் நேரக்கூடுமோ என்ற கவலையைச் சங்கீத ரஸிகர்கள் பலமுறை அநுபவிக்க நேர்ந்தது. ஆனால் ரஸிகர்களைக் காட்டிலும் கலைத்தேவியே அதிக கவலை கொண்டு அவருடைய இனிய சாரீர சம்பத்தை நமக்குக் காப்பாற்றிக் கொடுத்திருக்கிறாள். இது கர்நாடக சங்கீதமும் சங்கீத ரஸிகர்களும் செய்த பாக்கியமாகும்.

* * *

செம்மங்குடி சீனிவாசய்யர் கச்சேரி செய்யத் தொடங்கி இருபத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன. இந்தக் காலத்தில் சங்கீதத் துறையிலும் வாழ்க்கைத் துறையிலும் அவர் எவ்வளவோ மேன்மைகளை அடைந்து விட்டார். திருவாங்கூர் ஆஸ்தான வித்வான் ஆனார்; சங்கீத வித்வத் சபைக்குத் தலைமை வகித்துச் சங்கீத கலாநிதி ஆனார்; சுவாதித் திருநாள் சங்கீத கலாசாலையின் தலைமைப் பேராசிரியர் பதவியைத் திறமையாக வகித்துப் பெயரும் புகழும் பெற்றார்.

இவ்வளவு மேன்மைகளுக்கும் சிகரம் வைத்தது போன்ற மேன்மையை இப்போது இந்தியாவின் சுதந்திர அரசாங்கத்தார் செம்மங்குடி சீனிவாசய்யருக்கு அளித்திருக்கிறார்கள்.

நாளது மார்ச்சு மாதம் 15-ந் தேதி ஜனாதிபதி ராஜேந்திர பிரஸாதின் முன்னிலையில் செம்மங்குடி கச்சேரி செய்து, முப்பத்தைந்து கோடி இந்திய மக்களின் சார்பில் கௌரவிக்கப்படப் போகிறார். அவர் கச்சேரி செய்யத் தொடங்கி இருபத்தைந்து வருஷம் பூர்த்தியானதற்காக நடத்த வேண்டிய வெள்ளி விழாக் கொண்டாட்டம் அகில இந்தியக் கொண்டாட்டமாகவே நடைபெறப் போகிறது.

இத்தகைய அருமையான சந்தர்ப்பத்தில் "கல்கி" நேயர்களின் சார்பில் நமது மனமார்ந்த வாழ்த்துக்களைச் செம்மங்குடி சீனிவாசய்யருக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

* * *

சங்கீதக் கலையை நாதோபாஸனையாகக் கொண்டு வழிபடும் கலைஞர்களில் செம்மங்குடி சீனிவாசய்யரும் ஒருவர். சோழ நாட்டில் பல நூறு ஆண்டுகளாகவும் பரம்பரையாகவும் வளர்ந்து வந்த கர்நாடக சங்கீதத்துக்கு, இன்று செம்மங்குடி சீனிவாசய்யர் தலைசிறந்த வாரிசு உரிமை பெற்று விளங்குகிறார். பழமையிலிருந்து மாறுபடாத புதிய சங்கீத பாணியைத் தமக்கென்று வகுத்துக் கொண்டார். அவருடைய சங்கீதத்தில் முக்கியமான அம்சம் ராக ஆலாபன முறையாகும். முன்னோர்கள் பழமையாகக் கையாண்டு போஷித்த கன ராகங்களைச் செம்மங்குடி சீனிவாசய்யர் ஆலாபனம் செய்யத் தொடங்கி விட்டாரானால், ஆயிரம் பதினாயிரம் ஜனங்களுக்கு மத்தியில் இருந்தபோதிலும், தாமும் நாதமும் தம்புராவுமாகத் தனித்த ஏகாந்த நிலைக்குப் போய் விடுகிறார். வானத்தில் பறந்து வட்டமிடுகிறார்; வையத்தில் இறங்கியும் சஞ்சரிக்கிறார். கைதேர்ந்த ஆகாச விமானி மேக மண்டலங்களுக்கு மேலே சென்றாலும் கீழே குதித்து இறங்கி வந்தாலும் குறிப்பிட்ட திசையிலே சென்று கொண்டிருப்பது போல், செம்மங்குடி சீனிவாசய்யரும் ராக ஆலாபனங்களில் எப்படி எப்படியெல்லாம் மனோதர்மத்துக்கு இடங்கொடுத்துச் சஞ்சாரம் செய்தாலும் முன்னோர் வகுத்த பாட்டையிலிருந்து எள்ளளவும் அப்பால் இப்பால் செல்வதில்லை.

காயக சிகாமணி ஸ்ரீ முத்தையா பாகவதர் அவர்களுக்கு உதவியாயிருந்தும், பின்னர் தாமாகவும் சுவாதித் திருநாள் கீர்த்தனங்கள் பலவற்றைப் பிரபலப் படுத்திச் செம்மங்குடி சங்கீதத்துக்குச் செய்திருக்கும் தொண்டு அனைவரும் அறிந்தது.

* * *

சங்கீத வட்டாரங்களில் சௌலப்ய குணத்துக்கும் ஈகை தர்மத்துக்கும் பெயர் போனவர் செம்மங்குடி சீனிவாசய்யர். சந்தர்ப்பம் நேரும் போதெல்லாம் தமது குருவாகிய மகாராஜபுரம் விசுவநாதய்யரைப் பாராட்டிப் பேசாமலிருப்பதில்லை. அரியக்குடி ராமானுஜ அய்யங்காரிடம் விசேஷ பக்தி கொண்டவர். முசிரி அண்ணாவிடம் சகோதர வாத்ஸல்யம் கொண்டவர்.

ஆரம்ப நாட்களில் கும்பகோணம் ஸ்ரீ ராஜமாணிக்கம் பிள்ளை தமக்குப் பக்க வாத்தியம்

வாசிக்க முன் வந்ததினால் தாம் அடைந்த நன்மையை அடிக்கடி நன்றியுடன் சொல்லிக் கொள்வார். சங்கீத உலகத்தைச் சேர்ந்த எவருக்கும் தம்மால் இயன்ற உதவியைச் செய்ய அவர் தவறுவதில்லை.

*   *   *

சுதந்திர பாரத சர்க்கார் இரண்டாவது ஆண்டிலேயே செம்மங்குடியைக் கௌரவிக்கத் தீர்மானித்ததில் ஒரு விசேஷப் பொருத்தம் இருக்கிறது. இந்தியா தேசம் சுதந்திரம் அடையும் முயற்சியில் செம்மங்குடியும் அவருடைய சகோதரர்களும் ஈடுபட்டவர்கள். மகாத்மாவினிடம் பரம பக்தி கொண்டவர்கள். கதர் இயக்கம் ஆரம்பமான நாள் முதல், தாங்களே கையினால் நூற்ற நூலைக் கொண்டு நெய்த கதராடை தரித்து வருகிறவர்கள்.

ஸாஹித்யங்களின் பொருளில் விசேஷ கவனம் செலுத்தாத நாட்களிலே கூடச் செம்மங்குடி சீனிவாசய்யர்,

''என்று தணியுமிந்தச் சுதந்திர தாகம்!
என்று மடியும் இந்த அடிமையின் மோகம்!''

என்ற பாரதியார் பாடலை மனமுருகிப் பாடிக் கேட்பவர்களின் மனத்தையும் உருக்கி விடுவார். அப்படிப் பாடிய காலத்திலே, பாரத நாடு சுதந்திரம் அடைந்ததும் ஏற்படும் அரசாங்கத்தார் தம்முடைய சங்கீதத்துக்குக் கௌரவம் அளித்துச் சன்மானம் செய்யப் போகிறார்கள் என்று அவர் எதிர் பார்த்திருக்க மாட்டார். பலனை எதிர் பாராது செய்த நல்ல காரியங்கள்தான் என்றைக்கும் நிரந்தரமான பலனை அளிக்கும் என்பது நாம் கண்கூடாகக் காணும் உண்மை அன்றோ!

எந்த நல்ல காரியத்திலும் திருப்தி அடையாமல் குறைப் படுகிறவர்கள் சிலர் உண்டு. ''செம்மங்குடி வயதில் சிறியவர்தானே! சங்கீத உலகில் இவரை விட மூத்தவருக்கு அல்லவா பரிசு அளித்திருக்க வேண்டும்!'' என்ற புகார் சில மூலைகளில் கிளம்பியதாக அறிந்தேன். யாருக்குப் பரிசு அளித்தாலும் இம்மாதிரி ஆட்சேபம் ஏதாவது சொல்லலாம். வயதிலே மூத்தவரைத் தேர்ந்தெடுத்தால், ''வித்தையிலே பெரியவர் இன்னொருவர் இருக்கிறாரே!'' என்று கூறலாம். வித்தையிலும் வயதிலும் மூத்தவராயிருந்தாலும் ''அவருடைய பாட்டை இப்போது யார் கேட்கிறார்கள்! எங்கேயோ மூலையில் இருந்தவரைத் தேடிப் பிடித்தார்களே!'' என்று ஆட்சேபிக்கலாம்.

இப்படி யெல்லாம் பேசுவது தமிழ் மக்களின் பெருந் தன்மைக்கும் பண்பாட்டுக்கும் உகந்ததன்று; குறுகிய உள்ளத்தின் அறிகுறியாகும்.

நம்மில் ஒருவருக்குக் கிடைத்த கௌரவம் நாம் எல்லாரும் அடைந்தது என்று எண்ணி மகிழ்ச்சியுறும் மனப்பான்மை நம்மிடையே இன்னும் நன்றாகப் பரவி நிலைபெற வேண்டும்.

சென்ற ஆண்டில் ஸ்ரீ அரியக்குடி இராமானுஜ அய்யங்காரைத் தேர்ந்தெடுத்தது எவ்வளவு பொருத்தமோ, அவ்வளவு இவ்வாண்டில் ஸ்ரீ செம்மங்குடி சீனிவாசய்யரைத் தேர்ந்தெடுத்ததும் பொருத்தமாகும். இதன் மூலம் அரியக்குடிக்கும் செம்மங்குடிக்கும் ஏற்படும் சிறப்பைக் காட்டிலும், கர்நாடக சங்கீதத்துக்கு ஏற்படும் சிறப்பே முக்கியமானது. இதை எண்ணிக் கர்நாடக சங்கீதத்தில் பற்றுடைய வித்வான்கள், ரஸிகர்கள் அனைவரும் பெருமிதத்தினால் பூரிப்பார்கள் என்று நம்புகிறேன். —''கர்நாடகம்''

## வானிலும் புவியிலும்



ஸ்டாலின் காலஞ் சென்றது குறித்து ''மரணம் யாரையும் விட்டு விடாது!'' என்று ராஜாஜி கூறினார். வானுலகில் ஸ்டாலினின் ஜன்ம விரோதியான டிராட்ஸ்கி அவரை இப்படி வரவேற்றிருக்கலாம்.

''எல்லாம் வழக்கம் போல் நடைபெறும். ஸ்டாலின் ஸ்தானத்தை இன்னொருவர் சீக்கிரம் பூர்த்தி செய்துவிடுவார்'' என்றும் ராஜாஜி தெரிவித்தார். ஆம்; மாலங்காவ் பூர்த்தி செய்தே விட்டார்.

# பொன்னியின் செல்வன்

கல்கி

மணியம்

## அத்தியாயம் 46

## படகு நகர்ந்தது!

**வ**ந்தியத் தேவன் ஒரு பக்கத்தில் விரைந்து வந்து கொண்டிருந்தான்.

மற்றொரு புறத்தில் மணிமேகலை, "அக்கா! உணவு சித்தமாயிருக்கிறது!" என்று சொல்லிக் கொண்டு நெருங்கி வந்து கொண்டிருந்தாள்.

கரிகாலர் இருபுறமும் பார்த்து விட்டு, "நந்தினி! என்னைக் கடம்பூர் மாளிகைக்கு வரவேண்டாம் என்று தடுக்க வந்தியத் தேவன் மட்டும் முயலவில்லை. ஆழ்வார்க்கடியான் என்னும் வைஷ்ணவனும் அதேமாதிரி செய்தியைக்கொண்டு வந்தானே? என் தந்தையின் உயிர் நண்பரும் என் பக்திக்கு உரியவருமான முதன் மந்திரி அநிருத்தரும் சொல்லி அனுப்பினாரே?" என்றார்.

"முதன் மந்திரி அநிருத்தர்! தங்கள் தந்தையின் பிராண சிநேகிதர்! ஆகையினால் தங்கள் தந்தையின் பிராணனைத் தாமே அபகரிக்கப் பார்க்கிறார். தங்களுடைய பக்திக்கு உரியவர்! ஆகையால் தங்களுக்கு அடுத்த பட்டம் இல்லாமற் செய்யப் பார்க்கிறார்......"

"ஏன்? ஏன்?"

"தாங்கள் வெறிபிடித்தவர் என்றும், தெய்வ பக்தி இல்லாதவர் என்றும் அவருக்கு எண்ணம். தங்கள் தம்பிக்குப் பட்டம் கட்டி வைத்து அவனை வீர வைஷ்ணவனாக்கி இந்தச் சோழ நாட்டையே வைஷ்ணவ நாடாக்கி விட வேண்டுமென்பது அவருடைய விருப்பம். தங்களுடைய தம்பி நடுக் கடலில் காணாமற் போனபோது அவருடைய எண்ணத்திலே மண் விழுந்தது!"

"அதற்காக என்னைக் கடம்பூர் வராமல் தடுக்கவேண்டிய அவசியம் என்ன?"

"அவர்களுடைய அந்தரங்கத்தையெல்லாம் தங்களிடம் நான் சொல்லி விடலாம் அல்லவா?"

"உனக்கு எப்படி அவர்களின் அந்தரங்கம் தெரியும்?"

"ஐயா! அந்த வைஷ்ணவன் ஆழ்வார்க்கடியான் சகோதரி நான் என்பதை மறந்து விட்டீர்கள்......"

"உண்மையாக நீ அவனுக்கு உடன் பிறந்த சகோதரியா? அந்தக் கதையை என்னை நம்பச் சொல்கிறாயா?"

"நானும் அந்தக் கதையை நம்பவில்லை தங்களை நம்புமாறு சொல்லவும் இல்லை. அவனுடைய தந்தையின் வீட்டில் நான் வளர்ந்து வந்தேன். ஆகையால் என்னைச் சகோதரி என்று அழைத்து வந்தான். என்னை ஆண்டாளின் அவதாரம் என்று அந்த வைஷ்ணவன் சொல்வது வழக்கம். ஊர் ஊராக அவனுடன் நான் சென்று ஆழ்வார்களின் பாசுரங்களைப் பாடி வைஷ்ணவ சம்பிரதாயத்தைப் பரப்ப வேண்டும் என்பது அவனுடைய ஆசை."

"புத்த சந்நியாசினிகளைப்போல் உன்னையும் வைஷ்ணவ சந்நியாசினி யாக்க அவன் விரும்பினானோ?" என்று ஆதித்த கரிகாலர் கேட்டார்.

"அப்படி ஒன்றுமில்லை. நான் அவனைக் கலியாணம் செய்து கொண்டு

தம்பதிகளாகப் பாசுரம் பாடிக்கொண்டு ஊர் ஊராகப் போக வேண்டும் என்பது அவன் ஆசை. வைஷ்ணவத்தைப் பிரசாரம் செய்ய நான் பல குழந்தைகளைப் பெற்று அளிக்க வேண்டும் என்பதும் அவன் விருப்பம்......"

"சீச்சீ! அந்தக் குரங்கு மூஞ்சித் திருமலை எங்கே? நீ எங்கே? உன்னை அவன் தனக்கு மனைவியாக்கிக் கொள்ள விரும்பினானா?......"

"ஐயா! என் துரதிர்ஷ்டம் அது! நான் பிறந்த வேளை அப்படி! என்னை நெருங்கி வரும் ஆண் பிள்ளைகள் எல்லாரும் துர் எண்ணத்துடனேயே என்னை நெருங்குகிறார்கள்......"

"கிழவன் பழுவேட்டரையனுடைய புத்தி போன பாட்டில் மற்றவர்களைப் பற்றிச் சொல்வானேன்?"

"கோமகனே! பழுவேட்டரையரைப் பற்றி என் காதில் படத் தூஷணையாக எதுவும் சொல்ல வேண்டாம். அவர் என்னிடம் ஆசை கொண்டார். என்னை உலகமறிய மணந்து கொண்டார். அநாதைப் பெண்ணாயிருந்த என்னை அவருடைய திருமாளிகையில் பட்டத்து ராணியாக்கிப் பெருமைப் படுத்தினார்..."

"ஆனால் உன்னுடைய விருப்பம் என்ன, நந்தினி? நீ அவரை உண்மையிலேயே உன் பதியாகக் கொண்டு பூஜிக்கிறாயா? அப்படியானால்......"

"இல்லை, இல்லை. அவரிடம் நான் அளவில்லா நன்றியுடையவள். ஆனால் அவருடன் நான் மனை வாழ்க்கை நடத்தவில்லை. அவரும் என்னை வற்புறுத்தவில்லை. ஐயா! நான் ஏழைக் குடியில் பிறந்தவள்; பிறந்தவுடனே கைவிடப் பட்டவள். ஆயினும் என்னுடைய நெஞ்சை ஒரே ஒருவருக்குத்தான் அர்ப்பணம் செய்தேன். அதை ஒரு நாளும் மாற்றிக் கொண்டதில்லை......"

"நந்தினி! அந்தப் பாக்கியசாலி யார்? வேண்டாம்; அதைச் சொல்ல வேண்டாம். நீ யார்? உண்மையைச் சொல்! நீ என் தந்தையின் மகள் இல்லாவிடில், என் சகோதரி இல்லாவிடில், ஆழ்வார்க்கடியானுடன் கூடப் பிறந்தவளும் இல்லை என்றால், பிறகு நீ யார்? அதை மட்டும் சொல்லிவிடு, நந்தினி! அதைத் தெரிந்து கொள்ளா விட்டால் எனக்குப் பைத்தியம் உண்மையிலேயே பிடித்து விடும்!" என்றார் கரிகாலர்.

"அதைத் தங்களுக்குத் தெரிவிக்க வேண்டுமென்றுதான் நானும் விரும்புகிறேன். ஆனால் தங்களுடைய தோழரும் என்னுடைய தோழியும் இதோ நெருங்கி வந்து விட்டார்கள். மறுபடியும் சந்தர்ப்பம் வாய்க்கும்போது அவசியம் சொல்லுகிறேன்" என்றாள் நந்தினி.

• • •

மிகச் சமீபத்தில் வந்துவிட்ட வல்லவரையனைப் பார்த்துப் பழுவூர் ராணி, "ஐயா! இது என்ன வெறுங்கையுடனே திரும்பி வந்திருக்கிறீர்கள்? புலியின் தலை எங்கே?" என்று கேட்டாள்.

"தேவி! புலியின் தலையைக் கொண்டு வந்து தங்கள் காலடியில் சமர்ப்பிக்கும் பாக்கியம் எனக்குக் கிட்டவில்லை!" என்றான் வந்தியத் தேவன்.

"ஆகா! இவ்வளவுதானா உமது வீரம்? உமது முன்னோர்களின் வீரத்தைப் பற்றிப் பாட்டுகள் எல்லாம் சொன்னீரே? மூன்று குலத்து வேந்தர்களின் தலைகளைப் பறித்துக் கழனியில் நடவு நட்டார்கள் என்று சொன்னீரே?"

"அது என்ன அப்படிப்பட்ட பாடல்?" என்று கரிகாலர் கேட்டார்.

"ஐயா! நீர் சொல்கிறீரா? நான் சொல்லட்டுமா?" என்று நந்தினி வந்தியத் தேவனைப் பார்த்து வினவினாள்.

"ராணி! அப்படி ஒரு பாடல் சொன்னதாக எனக்கு ஞாபகம் இல்லையே?" என்றான் வந்தியத் தேவன்.

"உமக்கு ஞாபகம் இல்லை. ஆனால் எனக்கு நன்றாய் நினைவு இருக்கிறது. நான் சொல்லுகிறேன் கேளுங்கள், ஐயா!

**சேனை தழையாக்கிச் செங்குருதி நீர் தேக்கி**
**ஆனை மிதித்த அருஞ்சேற்றில்—மானபரன்**
**பாவேந்தர் தம்வேந்தன் வாணன் பறித்து நட்டான்**
**மூவேந்தர் தங்கள் முடி!**

எப்படியிருக்கிறது பாட்டு! கோமகனே! தாங்கள் பாண்டியன் ஒருவனுடைய தலையை மட்டுமே கொண்டீர்கள். இந்த வீரருடைய முன்னோர்கள், சேர சோழ பாண்டியர்களுடைய தலைகளைப் பறித்துக் கொண்டு வந்து கழனியில் நடவு நட்டார்களாம்......!"

கரிகாலருடைய முகத்தில் அருவருப்பும் குரோதமும் தாண்டவம் ஆடின.

"நல்ல உழவு! நல்ல நடவு!" என்று சொல்லி விட்டு அவர் இடி இடி என்று வாய் விட்டுச் சிரித்தார்.

வந்தியத் தேவன் கரிகாலருடைய முகத்தையே ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை. அவன் தட்டுத் தடுமாறி, "தேவி! இத்தகைய பாடல் ஒன்றைத் தங்களிடம் நான் சொல்லவே இல்லையே?" என்றான்.

"அதனால் என்ன? ஏற்கெனவே தெரிந்து கொண்டிராவிட்டால் உமது குலத்தின் பெருமையை இப்போதாவது தெரிந்து கொள்ளும்! அவ்வாறு மூக்குலத்து வேந்தர்களின், முடிகளைப் பறித்து நட்ட வம்சத்தில் பிறந்தவர் கேவலம் காயம் பட்ட புலி ஒன்றின் தலையைக் கொண்டு வர முடியவில்லையே?" என்றாள்.

"தேவி! காயம்பட்ட அந்தப் புலி செத்துத் தொலைந்து போய் விட்டது. செத்த புலியின் தலையை வெட்ட நான் விரும்பவில்லை."

"அது எப்படி? புலி தத்தித் தத்திப் படகில் ஏறியதை நான் பார்த்தேனே?" என்றார்.

"நான்தான் அந்தக் காட்சியைத் தங்களுக்குக் காட்டினேன். படகில் ஏறிப் படுத்துக் கொண்ட பிறகு அது செத்துப் போயிருக்கிறது. பழுவூர் இளைய ராணியின் திருமேனியைக் காயப்படுத்தி விட்டோமே என்ற பச்சாத்தாபத்தினால் அது பிராணனை விட்டு விட்டதோ, என்னமோ?" என்றான் வந்தியத்தேவன்.

கரிகாலரின் முகத்தில் கடு கடுப்புச் சிறிது தணிந்து புன்னகை அரும்பியது.

"ஆனால் அது தண்ணீரிலேயே செத்துப் போயிருக்கலாமே? பட



இல் ஏறிச் சாக வேண்டியதில்லையே?" என்றார் கரிகாலர்.

"என்னைப் போல் அதற்கும் தண்ணீரைக் கண்டால் பிடிப்பதில்லை போலிருக்கிறது. எல்லாச் சாவுகளிலும் தண்ணீரிலே சாவதுதான் எனக்குப் பயமளிக்கிறது!" என்றான் வந்தியத்தேவன்.

"ஆயினும் சற்று முன்னால் தைரியமாகத் தண்ணீரில் குதித்து விட்டீரே? இந்தப் பேதைப் பெண்களின் பேரில் அவ்வளவு கருணை போலிருக்கிறது!"

"தேவி! தண்ணீரைக் காட்டிலும் எனக்குப் பெண்களைக் கண்டால் அதிக பயம் உண்டாகிறது. இளவரசருடைய வற்புறுத்தலுக்காகத்தான் குதித்தேன். உண்மையில் அப்படிக் குதித்திருக்க வேண்டிய அவசியமே இல்லை என்று இப்போது தெரிகிறது!" என்றான் வல்லவரையன்.

"ஆம், ஆம்! நீர் தண்ணீரில் விழுந்து சாவது பற்றித்தான் உமக்குப் பயம். பிறரை மூழ்க அடித்துச் சாகச் செய்வது பற்றி உமக்குப் பயமே இல்லை!" என்றாள் நந்தினி.

இந்தப் பேச்சுக்கள் ஒன்றும் மணிமேகலைக்குப் பிடிக்கவில்லை என்பது அவளுடைய முக பாவத்திலிருந்து நன்கு வெளியாயிற்று.

"அக்கா! சமைத்த உணவு ஆறிப் போய் விடும். வாருங்கள், போகலாம்!" என்றாள்.

நால்வரும் பளிங்கு மண்டபத்தை நோக்கி நடந்தார்கள். அப்போது இடையிடையே மணிமேகலை வந்தியத்தேவனை நோக்கினாள். அவனுடைய மனத்தில் ஏதோ சங்கடம் ஏற்பட்டிருக்கிறதென்றும், இளவரசரும் நந்தினியும் அவனுக்கு ஏதோ தொல்லை கொடுக்கிறார்கள் என்றும் அவள் தன் உள்ளுணர்ச்சியால் அறிந்தாள். "யார் தங்களுக்கு எதிரி யானாலும் நான் தங்களுடைய கட்சியில் இருப்பேன்; கவலைப்பட வேண்டாம்!" என்று நயன பாஷையின் மூலம் வந்தியத்தேவனுக்கு ஆறுதல் கூற முயன்றாள். ஆனால் வந்தியத்தேவனோ அவள் பக்கம் திரும்பிப் பார்க்கவே இல்லை. அவன் கவலைக் கடலில் அடியோடு மூழ்கிப் போனவனாகக் காணப்பட்டான்.

• • •

நந்தினி தேவியின் வஞ்சக வார்த்தைகளும் வந்தியத்தேவன் மீது அவள் சுமத்திய பயங்கரமான பழியும் இந்தக் கதையைத் தொடர்ந்து படித்து வரும் நேயர்களுக்கு அருவருப்பை அளித்திருக்கக் கூடியது இயல்பேயாகும்.

எனினும், நாம் அறிந்துள்ள வரையில் அவளுடைய பிறப்பையும் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் நினைவு கூர்ந்தால் அவ்வளவாக வியப்பு அடைய மாட்டோம்.

மனிதர்களின் குணாதிசயங்கள் பரம்பரை காரணமாக இரத்தத்தில் ஊறியுள்ள இயல்புகளினால் அமைகின்றன; சூழ்நிலையினாலும் பழக்க வழக்கங்களினாலும் வாழ்க்கை அநுபவங்களினாலும் மாறுதலடைகின்றன.

ஊமையும் செவிடுமான மந்தாகினி காட்டிலே பெரும்பாலும்



வாழ்ந்திருந்தவள். வன விலங்குகளிட மிருந்து தப்பித்துக் கொள்ள அவள் எவ்வளவோ ஜாக்கிரதையா யிருக்கவேண்டி யிருந்தது. தான் உயிர் தப்புவதற்காகச் சில சமயம் அந்த மிருகங்களைக் கொடூரமாகக் கொல்ல வேண்டியும் நேர்ந்தது.

வெகு காலம் வரையில் பால்போல் தூய்மையாக இருந்த அவள் உள்ளத்தில் ஒரு சமயம் அன்பு என்னும் அமுத ஊற்றுச் சுரந்தது. விரைவில், அந்த ஊற்று வறண்டு அவளுடைய நெஞ்சத்தை வறண்ட பாலைவனம் ஆக்கியது. விதியின் விளையாட்டு அவளை ஒரு பெரிய ஏமாற்றத்துக்கு உள்ளாக்கி விட்டது. அதனால் ஏற்பட்ட அதிர்ச்சி அவளுடைய புத்தியே பேதலித்துப் போகும்படி செய்துவிட்டது. எனினும், நாளடைவில் அவளுடைய நெஞ்சின் காயம் ஆறியது. அன்பாகிய அமுத ஊற்று மீண்டும் சுரந்தது. சுந்தர சோழரின் மீது கொண்ட காதலையெல்லாம் அவருடைய அருமைப் புதல்வனாகிய அருள்மொழிச் செல்வனிடம் பிள்ளைப் பிரேமையாக மாற்றிக் கொண்டாள்.

மந்தாகினியின் புதல்வியாகிய நந்தினியிடம் தாயின் குணாதிசயங்கள் பல இயற்கையில் தோன்றி யிருந்தன. ஆனால் தாயை உலகம் வஞ்சித்ததைக் காட்டிலும் மகளை அதிகமாக வஞ்சித்தது. பெற்ற தாயினாலும் கைவிடப் பட்டாள். பிறர் வீட்டில் வளர்ந்தாள். காட்டு மிருகங்களினால் அன்னைக்கு ஏற்பட்ட தொல்லைகளைக் காட்டிலும் நாட்டு மனிதர்களால் மகள் அதிக கொடுமைகளுக்கு உள்ளானாள். இளம் பிராயத்தில் அரச குலத்தினரால் அவமதிக்கப்பட்டதெல்லாம் அவளுடைய நெஞ்சில் வைரம் பாய்ந்து நிலைத்து விஷத்தினும் கொடிய துவேஷமாக மாறியது. துவேஷத்துக்கு மாற்று அளிக்கக்கூடிய அன்பு என்னும் அமுதம் அவளுக்குக் கிட்டவில்லை. அவள் யார் யாரிடம் அன்பு வைத்தாளோ அவர்கள் ஒன்று அவளை அலட்சியம் செய்து புறக்கணித்தார்கள்; அல்லது துரதிர்ஷ்டத்துக்கு உள்ளாகி மாண்டு போனார்கள். அவளை அவமதித்தவர்களும் அவளால் வெறுக்கப் பட்டவர்களும் மேன்மையுடன் வாழ்ந்தார்கள். ஒரு பெண்ணின் உள்ளத்தை நஞ்சினும் கொடிய தாக்குவதற்கு வேறு என்ன காரணங்கள் வேண்டும்? தன்னை வஞ்சித்தவர்களையும் அவமதித்தவர்களையும் பழி வாங்குவதைத் தவிர அவளுடைய உள்ளத்தில் வேறு எதற்கும் இடம் இருக்கவில்லை. அதற்கு வேண்டிய சூழ்ச்சித் திறன்கள் அன்னையின் கர்ப்பத்தில் இருந்த நாளிலேயே அவளுடைய இரத்தத்தில் சேர்ந்திருந்தன. வாழ்க்கையில் அவள்பட்ட அல்லல்களும் ஏமாற்றங்களும் பயங்கர அநுபவங்களும் அவளுடைய உள்ளத்திலிருந்து இரக்கம், அன்பு முதலிய மிருதுவான பண்புகளை அடியோடு துடைத்து இரும்பினும் கல்லினும் கடினமாக்கி யிருந்தன.

இக் கதையில் இனி வரப் போகும் நிகழ்ச்சிகளை நன்கு அறிந்து கொள்வதற்கு இந்தக் குணாதிசய விளக்கத்தை இங்கே குறிப்பிடுவது அவசியம் என்று கருதி எழுதினோம்.

* * *

உணவருந்தும் வேளையிலும் அவர்களுக்குள் உற்சாகமான பேச்சு எதுவும் நடைபெறவில்லை. நந்தினியும், கரிகாலரும், வந்தியத்தேவனும் அவரவர்களுடைய கவலையிலே ஆழ்ந்திருந்தார்கள். இதனால் மணிமேகலைக்குத்தான் மிக்க ஆதங்கமா யிருந்தது. பழுவூர் ராணியுடன் உல்லாசமாகப் பேசி உற்சாகமாகப் பொழுது போக்கும் எண்ணத்துடன் அவள் அன்று நீர் விளையாடலுக்கும் வன போஜனத்துக்கும் ஏற்பாடு செய்திருந்தாள். இளவரசரும் வந்தியத்தேவனும் எதிர்பாராமல் வந்து சேர்ந்து கொண்டவுடன் அவளுடைய உற்சாகம் அதிகமாயிற்று. ஆனால் அதற்குப் பிறகு மற்ற மூவரும் பேசிய வார்த்தைகளும் நடந்து கொண்ட விதமும் அவளுக்குச் சிறிதும் திருப்தி அளிக்கவில்லை. நந்தினியையும் வந்தியத்தேவனையும் சேர்த்துப் பார்த்த போது ஏற்பட்ட வேதனையை அவளுடைய குழந்தை உள்ளம் உடனே மறந்து விட்டது. அதைப் பற்றித் தவறாக எண்ணி அசூயைக்கு இடங்கொடுத்தது தன்னுடைய தவறு என்று எண்ணித் தேறினாள். அதற்குப் பிறகு மற்ற மூன்று பேரும் கலகலப்பில்லாமல் சிடு சிடு என்று முகத்தை வைத்துக் கொண்டிருந்ததும் கபடமாகப் பேசி வந்ததும் அவளுக்கு விளங்கவும் இல்லை; பிடிக்கவும் இல்லை.

எனவே, உணவருந்திச் சிறிது நேரம் ஆனதும் மணிமேகலை "அக்கா! நாம் திரும்பிப் பிரயாணப்படலாமா? படகைக் கொண்டு வரச் சொல்லட்டுமா? இவர்கள் இருவரும் நம்முடன் வருகிறார்களா? அல்லது குதிரைமீது வந்த வழியே போகிறார்களா?" என்று கேட்டாள்.

அப்போதுதான் கரிகாலர் சிந்தனை உலகத்திலிருந்து வெளி உலகத்துக்கு வந்தார். "ஆ! ஆ! இந்தப் பெண்ணின் யாழிசையைக் கேட்காமல் திரும்புவதா? ஒரு நாளும் முடியாது. நந்தினி! மறந்து விட்டாயா, என்ன? மணிமேகலை! எங்களை ஏமாற்றி விடாதே!" என்றார்.

"அதை நான் மறக்கவில்லை. தங்களையும் தங்கள் சிநேகிதரையும் பார்த்தால் கானத்தைக் கேட்கக் கூடியவர்களாகத் தோன்றவில்லை. முள்ளின்மேல் நிற்பது போல் நிற்கிறீர்கள். ஆயினும் பாதகமில்லை. மணிமேகலை! எங்கே! யாழை எடுத்துக் கொண்டு வா!" என்றாள்.

"எதற்காக, அக்கா! விரும்பாதவர்களின் முன்னால், எதற்காக என்னை யாழ் வாசிக்கச் சொல்கிறீர்கள்?" என்று மணிமேகலை சிறிது கிராக்கி செய்தாள்.

"இல்லை, இல்லை! இளவரசர் தான் கேட்பதாகச் சொல்லுகிறாரே? அவருடைய நண்பருக்குப் பாட்டுப் பிடிக்காவிட்டால் காதைப் பொத்திக் கொள்ளட்டும்" என்றாள் நந்தினி.

"கடவுளே! அப்படியொன்றும் நான் இசைக் கலையின் விரோதி அல்ல! கோடிக் கரையில் பூங்குழலி என்னும் ஓடக் காரப் பெண்,

'அலைகடலும் ஓய்ந்திருக்க
அகக்கடல்தான் பொங்குவதேன்?'

என்று ஒரு பாட்டுப் பாடினாள். அதை நினைத்தால் இப்போதும் எனக்கு உடம்பு சிலிர்க்கிறது!" என்றான் வந்தியத்தேவன்.

"சில பேருக்குச் சிலருடைய பாட்டுத் தான் பிடிக்கும். என்னுடைய பாட்டு உங்களுக்குப் பிடிக்குமோ என்னமோ?" என்றாள் மணிமேகலை.

"பிடிக்காமற் போனால், யார் விடுகிறார்கள்? அதற்கு நான் ஆயிற்று; நீ யாழை எடுத்துக் கொண்டு வா!" என்றார் கரிகாலர்.

மணிமேகலை யாழை எடுத்துக்கொண்டு வந்தாள். பளிங்கு மண்டபத்தின் படிக்கட்டில் மேற்படியிலே உட்கார்ந்து கொண்டாள். நரம்புகளை முறுக்கிச் சுருதி கூட்டினாள். ஏழு தந்திகள் கொண்ட யாழ் அது. ஒவ்வொரு தந்தியிலும் பாதி வரையில் ஒரு ஸ்வரமும் அதற்கு மேலே இன்னொரு ஸ்வரமும் பேசக் கூடியது.

சிறிது நேரம் யாழை மட்டும் வாசித்து இன்னிசையைப் பொழிந்தாள். கரிகாலரும் வந்தியத்தேவனும் உண்மையிலேயே மற்றக் கவலைகளை யெல்லாம் மறந்து விட்டார்கள். யாழின் இசையில் உள்ளத்தைப் பறி கொடுத்துப் பரவச மானார்கள்.

பின்னர், மணிமேகலை யாழிசையுடன் குரலிசையையும் சேர்த்துப் பாடினாள். அப்பர், சம்பந்தர், சுந்தரரின் தெய்வீக மான பாசுரங்களைப் பாடினாள்.

சிறிது நேரமானதும் இளவரசர், "மணிமேகலை! உன்னுடைய கானம் அற்புதமாயிருக்கிறது. ஆனால் எல்லாம் பக்திமயமான பாடல்களையே பாடி வருகிறாய். அவ்வளவாக நான் பக்தியில் ஈடுபட்டவனல்ல. சிவ பக்தியை யெல்லாம் மதுராந்தகனுக்கே உரிமையாக்கி விட்டேன். ஏதாவது காதல் பாட்டுப் பாடு!" என்று சொன்னார்.

மணிமேகலையின் அழகிய கன்னங்கள் நாணத்தினால் குழிந்தன. சிறிது தயக்கம் காட்டினாள்.

"பெண்ணே! ஏன் தயங்குகிறாய்? இங்கே நீ காதல் பாட்டுப் பாடினால் 'என்னை உத்தேசித்துப் பாடுகிறாய்' என்று நான் எண்ணிக் கொள்ள மாட்டேன். என் சிநேகிதனும் எண்ணிக் கொள்ள மாட்டான். ஆகையால் தயக்கமின்றிப் பாடு!" என்றார் கரிகாலர்.

"அப்படி யாராவது எண்ணிக் கொண்டால் மணிமேகலை அதற்காகக் கவலைப் படவும் மாட்டாள்!" என்றாள் நந்தினி.

"போங்கள், அக்கா! இரண்டு புருஷர்கள் இருக்குமிடத்தில் இப்படிப் பரிகாசம் செய்யலாமா?" என்றாள் மணிமேகலை.

"இவர்கள் புருஷர்கள் என்று நீ நினைப்பதுதான் பிசகு. ஒரு செத்த புலியின் தலையைக் கொண்டுவர முடியாதவர்களை ஆண் பிள்ளைகள் என்று சொல்ல முடியுமா? முற்காலத்தில் தமிழ் நாட்டு வீர புருஷர்கள் உயிருடன் புலியைப் பிடித்து அதன் வாயைப் பிளந்து பற்களைப் பிடுங்கிக் கொண்டு வந்து தங்கள் நாயகிகளுக்கு ஆபரணமாகச் சூட்டுவார்களாம்! அந்தக் காலமெல்லாம் போய் விட்டது! போனால் போகட்டும்! நீ பாடு! அன்றைக்கு என்னிடம் பாடிக் காட்டினாயே? அந்த அழகான பாட்டைப் பாடு!" என்றாள் நந்தினி.

மணிமேகலை யாழ் வாசித்துக் கொண்டு பின் வரும் கீதத்தைப் பாடினாள். அது என்னமோ, இத்தனை நேரம் பாடியதைக் காட்டிலும் இந்தப் பாட்டில் அவள் குரல் இணையற்ற இனிமையுடன் அமுத வெள்ளத்தைப் பொழிந்தது:—

"இனியபுனல் அருவி தவழ்
இன்பமலைச் சாரலிலே
கனிகுலவும் மரநிழலில்
கரம்பிடித்து உகந்ததெல்லாம்
கனவு தானோடி—சகியே
நினைவு தானோடி!

* *

புன்னைமரச் சோலையிலே
பொன்னொளிரும் மாலையிலே
என்னைவரச் சொல்லிஅவர்
கன்னல்மொழி பகர்ந்ததெல்லாம்
சொப்பனந் தானோடி—அந்த
அற்புதம் பொய்யோடி?

* *

கட்டுக்காவல் தான்கடந்து
கள்ளரைப்போல் மெள்ள வந்து
மட்டிலாத காதலுடன்
கட்டி முத்தம் தந்ததெல்லாம்
நிகழ்ந்ததுண்டோடி—நாங்கள்
மகிழ்ந்த துண்டோடி!"

இவ்வாறு மேலும் மேலும் பல கண்ணிகளை மணிமேகலை வெவ்வேறு பண்களில் அமைத்துப் பாடி வந்தாள். அந்தக் கான வெள்ளத்தில் மற்ற மூவரும் மூழ்கிப் போனார்கள். பல காரணங்களினால் நெஞ்சைக் கல்லிலும் இரும்பிலும் கடினமாக்கிக் கொண்டிருந்த நந்தினியின் கண்களிலும் கண்ணீர் ததும்பியது. ஆதித்த கரிகாலர் இந்த உலகத்தை அடியோடு மறந்து விட்டார். வந்தியத் தேவன் அடிக்கடி திடுக்கிட்டு விழித்துக் கொண்டவன் போல் மணிமேகலையை நோக்கினான். அப்போதெல்லாம் அவள் தன்னையே பார்த்துக் கொண்டிருந்தது கண்டு அந்த வீரனுடைய உள்ளம் மேலும் திடுக்கிட்டது. "ஐயோ! இந்தப் பெண்ணுக்கு நாம் என்ன தீங்கு செய்துவிட்டோம்?" என்று அவன் நெஞ்சம் பதை பதைத்தது.

கான வெள்ளத்திலும் உணர்ச்சி வெள்ளத்திலும் மூழ்கியிருந்தவர்கள் வரவரக் காற்று கடுமையாகிக் கொண்டு வருவதைக் கவனிக்கவில்லை. ஏரியில் முதலில் சிறிய சிறிய அலைகள் கிளம்பி விழுந்ததையும் வரவர அவை பெரிதாகி வந்ததையும் கவனிக்கவில்லை. காற்று கடும் புயலாக மாறிக் காட்டு மரம் ஒன்றை அடியோடு பெயர்த்துத் தள்ளிய போதுதான் நால்வரும் விழித்துக் கொண்டு சுற்று முற்றும் பார்த்தார்கள். கடுமையான புயல் காற்று அடிப்பதையும் ஏரி கொந்தளித்துப் பேரலைகள் 'ஓ' என்ற இரைச்சலுடன் எழுந்து விழுவதையும் பார்த்தார்கள்.

திடீரென்று நந்தினி. "ஐயோ! படகு எங்கே?" என்று அலறினாள்.

கட்டிப் போட்டிருந்த இடத்தில் படகைக் காணவில்லை. உற்றுப் பார்த்த போது வெகு தூரத்தில் படகு அலைகளால் மொத்துண்டு நகர்ந்து நகர்ந்து போய்க் கொண்டிருந்தது.

"ஐயோ! இப்போது என்ன செய்வது?" என்று நந்தினி அலறினாள்.

"உங்கள் இருவருக்கும் குதிரை ஏறத் தெரிந்தால் ஏறிப் போய் விடுங்கள். நாங்கள் சமாளித்துக் கொள்கிறோம்" என்றான் வந்தியத்தேவன்.

"இந்தப் புயல் காற்றில் காட்டு மரங்கள் பெயர்ந்து விழுந்து எங்களைச் சாக அடிப்பதற்கு வழி செய்கிறீர்களா?" என்று நந்தினி கேட்டாள்.

"அதெல்லாம் வேண்டாம். புயலின் வேகம் தணியும் வரையில் இங்கேயே இருந்து விடுவோம். அங்கே போய் என்ன செய்யப் போகிறோம்? சமையலுக்குப் பண்டங்கள் இருக்கின்றன; பாடுவதற்கு மணிமேகலை இருக்கிறாள். இவ்வளவு சந்தோஷமாகச் சமீபத்தில் நான் இருந்ததில்லை!" என்றார் கரிகாலர்.

"இளவரசே! அது சரியல்ல! சம்புவரையரும் கந்தமாறனும் என்ன நினைப்பார்கள்?" என்றான் வல்லவரையன்.

"இவரே புலியைத் தேடிச் சென்றபோது படகை அவிழ்த்து விட்டு விட்டார் போலிருக்கிறது!" என்றாள் நந்தினி.

"அக்கா! ஏன் வீண் பழி சொல்கிறீர்கள்? இவர் வந்தபோது படகு கரையோரமாகத்தானே இருந்தது. யாரும் கவலைப்பட வேண்டாம். என் தந்தை இந்தப் புயல் காற்றைப் பார்த்ததும் நம் துணைக்குப் பெரிய படகுகளை அனுப்பி வைப்பார்!" என்றாள் மணிமேகலை.

அவள் கூறியது சற்று நேரத்துக்கெல்லாம் உண்மையாயிற்று. ஏறக்குறைய கப்பல் என்று சொல்லத் தக்க இரு பெரும் படகுகள் அத்தீவை நோக்கி வந்தன. அவற்றில் ஒன்றில் பெரிய சம்புவரையரே இருந்தார். நாலுபேரும் பத்திரமாய் இருப்பதைக் கண்டு மிக்க மகிழ்ச்சி அடைந்தார்.

அவர்களை ஏற்றிக் கொண்டு அலைகடல் போல் பொங்கிக் கொந்தளித்த ஏரியில் இரண்டு படகுகளும் திரும்பிச் சென்றன. சம்புவரையரைத் தவிர, மற்ற நால்வரின் உள்ளங்களிலும் கடும் புயல் வீசிக் கொந்தளிப்பை உண்டாக்கிக் கொண்டிருந்தது.

---

**"பொன்னியின் செல்வன்" நாலாம் பாகம் முடிவுற்றது.**
**கடைசிப் பகுதியான ஐந்தாம் பாகம் அடுத்த இதழில் தொடரும்.**




மிஸ்டர் சம்பத் வந்தார் என்றோ, விஜயம் செய்தார் என்றோ, எழுந்தருளினார் என்றோ ஒன்றும் திட்டவட்டமாக அவரைப் பற்றிச் சொல்ல முடியாது. அவர் வருவார், எழுந்தருளுவார், விஜயம் செய்வார், திருவாய் மலர்ந்தருளுவார்—பிறகு மறைந் தருளுவார். எங்கும் இருப்பார்; எல்லாமாக இருப்பார்.

அவர் மிஸ்டர் சம்பத்! அவ்வளவுதான் சொல்லலாம். அதற்கு மேல் அவரைப் பற்றிச் சொல்வதற்கு அவராலேயே முடியாது.

மிஸ்டர் சம்பத் தமக்கென்று ஒரு விசேஷ யோக்கியதையோ, தொழிலோ, குணாதிசயமோ வைத்துக் கொள்ளவில்லை. அப்படியெல்லாம் வைத்துக்கொள்ள ஆரம்பித்தால் அவருக்குக் கட்டிவராது! அவருடைய கொள்கை, நோக்கம், கருத்து, அபிப்பிராயம் எல்லாம் 'சமயோசிதம் போல் புரோகிராம் மாற்றப்படும்' என்பதுதான்!

தண்ணீர் தனக்கென்று ஒரு நிறம் வைத்துக் கொள்ளாமல், பாலில் கலந்தால் பாலாகிறது; மருந்தில் கலந்தால் மருந்தாகிறது; சர்க்கரையில் கலந்தால் தித்திக்கிறது; எலுமிச்சம் பழ ரசத்தில் கலந்தால் புளிக்கிறது; பச்சை நிறக் கண்ணாடி டம்ளரில் விட்டால் பச்சையாகிறது; நீல நிறக் கண்ணாடி டம்ளரில் விட்டால் நீலமாகிறது!

மிஸ்டர் சம்பத் இதே வகையைச் சேர்ந்தவர்தான். இதில் மட்டும்தான் தண்ணீர் அவருக்கு உதாரணம் என்பதில்லை. உலகத்திலுள்ள சகல கலைகளும் அவருக்குத் தண்ணீர் பட்ட பாடுதான்!

மிஸ்டர் சம்பத்தைப் பற்றியே இவ்வளவு சொன்னால் அப்புறம் அவர் கதையைப் பற்றி எவ்வளவு நீளம் சொல்ல வேண்டியிருக்குமோ என்று யோசிக்க வேண்டாம். கதையில் விசேஷமாக ஒன்றும் இல்லை: எல்லா விசேஷமும் மிஸ்டர் சம்பத்திடம்தான் இருக்கிறது! கதையைத் தெரிந்து கொண்டு சம்பத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள முயல்வதை விட, சம்பத்தைத் தெரிந்து கொண்டு கதையைத் தெரிந்து கொள்ளுவது சுலபம். இந்தப் படத்தில் அவரன்றி ஓர் அணுவும் அசையவில்லை!

அவர் வலையில் முதலில் சிக்கியவர் அனுமான் விலாஸ் ஹோட்டல் சொந்தக்காரர். அந்த ஹோட்டலில் காப்பி சாப்பிடும் போது நடிகை மாலினியின் படம் மிஸ்டர் சம்பத்தின் கண்களில் படுகிறது! அதே சமயம் அவர் சிந்தனை மாலினியை அறிமுகம் செய்து கொள்ளுவதில் ஈடுபடுகிறது.

அடுத்தபடியாக அவர் வலையில் ஒரு பெரிய மீன் சிக்கிக் கொண்டது. பெயர் மக்கன்லால்! அவர் பிரபல நெய் வியாபாரி. முனிசிபல் தேர்தலில் நிற்க விரும்பிய அவருக்கு மிஸ்டர் சம்பத் நன்றாய்த் தூபம் போட்டு, தேர்தல் பிரசாரத்தில் சிக்க வைக்கிறார்.

மாலினி கலா மந்திரத்தின் நடிகை. அந்த ஸ்தாபனத்தை அதன் டைரக்டரான ஒரு இளைஞர் மிகத் திறமையாகவும் கண்யமாகவும் நடத்தி வருகிறார். நடனக் கலையிலும் நடிப்பிலும் மாலினி முன்னேற்றம் அடைந்து புகழ் பெறுவதில் அந்த இளம் டைரக்டர் மிகவும் அக்கறையுடன் இருக்கிறார். நெய் வியாபாரி மக்கன் லாலுக்கு, மிஸ்டர் சம்பத் சரியானபடி 'குல்லாப் போடுகிறார்!' "நண்பர்கள் பாங்கி" என்று ஒரு பெரிய ஸ்தாபனத்தைத் துவங்கி நடத்தச் செய்கிறார். இதற்குச் சாதகமாக மிஸ் மாலினியையும் இழுத்துப் போடுகிறார். மாலினிக்குக் கலா மந்திரத்தில் சிரத்தை குறைகிறது. கலா மந்திரத்தின் டைரக்டர் மாலினியை இது விஷயமாகக் கண்டிக்கிறார். மாலினி சம்பத்தின் யோசனைப்படி "மாலினி தேவி தியேட்ரிகல் கம்பெனி" என்று ஒரு புதிய நடன, நாடகக் கலைக் கூடத்தை நிறுவுகிறாள்.

இதுவரையில் சுகமாகப் போய்க் கொண்டிருந்த கதையில் கஷ்டம் ஆரம்பிக்கிறது. கஷ்டம் கதைக்குச் சுவாரஸ்யத்தையும், பாத்திரங்களுக்குப் புகழையும் தேடித்தருகிறது.

மாலினியாக நடிக்கும் பத்மினியின் நடிப்பில் விசேஷ மெருகு ஏறி விடுகிறது. அதிலிருந்து கதையிலும் விறுவிறுப்பு ஏறுகிறது.





"நண்பர்கள் பாங்கி" முறிகிறது: மக்கள் லால் மண்ணை அள்ளிப் போட்டுக் கொள்ளுகிறார். அந்த மண் தம் தலையில் விழாமல் சமயோசிதமாக மிஸ்டர் சம்பத் தப்புகிறார். மாலினியின் கலைக்கூடம் கலைந்து விடுகிறது.

இந்தக் கட்டங்களில் பத்மினி நன்றாக நடித்திருக்கிறார். அவர் பார்வையில் இருக்கும் களங்கமற்ற தன்மை, நடிப்பில் இருக்கும் கவர்ச்சி எல்லாமாகச் சேர்ந்து அவரைப் படத்தின் பிரதான நடிகையின் ஸ்தானத்துக்குக் கொண்டு போய் நிறுத்துகின்றன.

புகழேணியிலிருந்து கீழே யிறங்கி, மனம் முறிந்த நிலையில் இருக்கும் மாலினிக்குக் கலா மந்திர டைரக்டரின் உதவி எதிர்பாராத விதமாகக் கிடைக்கிறது. கடன் தீருகிறது; மகிழ்ச்சி மலர்கிறது; படம் முடிகிறது.

மிஸ்டர் சம்பத் படம் ஜெமினியின் தயாரிப்பு. ஏற்கெனவே பல வருஷங்களுக்கு முன்பு வெளியான தமிழ் "மிஸ் மாலினி" படத்தின் ஹிந்தி வெளியீடு.

இடைவேளை வரையில்தான் படம் பழைய படமாயிருந்தது. இடை வேளைக்குப் பிறகு, படத்தில் பல கவர்ச்சிகரமான மாறுதல்களைப் புகுத்தி யிருக்கிறார்கள்.

ஹிந்தி படமாயிருந்தாலும் பல கர்நாடக மெட்டுக்களைச் சேர்த்திருப்பது மெச்சத் தகுந்தது.

குதுப்மினார், தாஜ்மகால், அசோகர் ஸ்தம்பம், வடநாட்டுக் கோவில் கோபுரம், இவற்றுக்கெல்லாம் மேலாகத் தென்னிந்தியக் கோவில் கோபுரத்தையும் பிரதானமாகப் பின்னணியில் காட்டி, அங்கு பரத நாட்டியத்தையும் காட்டுவது பாராட்டுக்குரியது.

இந்தப் படத்தின் இடையில் ஒரு சம்பவம் தனியாக வருகிறது. கதையோடு அதிகத் தொடர்பில்லாததுதான். ஆனால் புதுமாதிரியாக அமைந்திருக்கிறது.

ஒரு ஏழை மனிதன் தாங்கொணாப் பசியோடு தெருவில் சுருண்டு விழுந்து விடுகிறான். வழியே சென்ற மேடைப் பிரசங்கிகளும், பிரமுகர்களும், அரசாங்கத்தைக் குறை கூறுவதையே தொழிலாகக் கொண்ட வெறும் கபகல வாதிகளும் அந்த ஏழையைப் பார்த்து அநுதாபப் பட்டுவிட்டு நடையைக் கட்டுகிறார்கள். கடைசியில் ஒரு ரிக்‌ஷா வண்டிக்காரன், அந்த வழியோடு வந்தவன், பசியால் வாடிய அந்த மனிதனைப் பார்க்கிறான்; கண்ணீர் விடுகிறான்: அவனை வாரி யெடுத்துத் தன் வண்டியில் போட்டுக் கொண்டு போகிறான். கஷ்டப்படுகிறவர்களுக்குத்தான் பிறர் கஷ்டம் தெரியும்—என்பதை இந்தக் காட்சி நன்கு விளக்குகிறது.

மிஸ்டர் சம்பத்தாக நடிக்கும் ஸ்ரீ மோதிலால் நன்றாய் நடித்திருக்கிறார்.

ஓடும் ரயில் வண்டியில் ஆரம்பமாகும் படம் ஓடும் ரயில் வண்டியிலேயே முடிவடைகிறது. தேசிய மயமாக்கப்பட்ட டிரான்ஸ்போர்ட் பிரச்னையைப் பற்றி மற்றப் பிரயாணிகளிடம், ஓடும் ரயிலில் ஆடிக் கொண்டு நிற்கும் பிரயாணியான மிஸ்டர் சம்பத், வெளுத்து வாங்குகிறார்,

அப்பொழுது டிக்கெட்டுப் பரிசோதகர் வருகிறார். அவரைக் கண்டதும், டிக்கெட்டில்லாப் பிரயாணியான மிஸ்டர் சம்பத்தின் சமயோசித புத்தி வேலை செய்கிறது. ரயில்வே உயர்தர அதிகாரி ஒருவரின் பெயரைச் சமத்காரமாக உபயோகப்படுத்தி, அவருக்கு உத்தியோக உயர்வு வாங்கித் தருவதாகக் கூறி அவரைச் சரிக்கட்டி அனுப்பி விடுகிறார்.

படத்தின் முடிவில் சம்பத்தின் சாயம் வெளுத்த படலத்துக்குப் பிறகு, மீண்டும் ரயில் பிரயாணப் படலம் ஆரம்பமாகிறது. மிஸ்டர் சம்பத் சாமியாராக மாறி, பிரயாணிகளுக்கு அற போதனை செய்கிறார். மீண்டும் பழைய டிக்கெட் பரிசோதகர் வருகிறார். சம்பத் சாமியார் அவருக்கு விபூதிப் பிரசாதம் வழங்கி, "ஆனந்தம் பரமானந்தம்" என்று பாடிப் பரவசப் படுத்துகிறார்.

பல பேர்களுக்கு விபூதிப் பட்டையைக் குழைத்துப் போட்ட மிஸ்டர் சம்பத், தாமும் அதே விபூதிப் பட்டையைப் போட்டுக் கொண்டிருப்பதைப் பார்க்கும் போது, "ஆனந்தம் பரமானந்தம்" என்று நமக்கும் பாடத் தோன்றுகிறது.

பார்ப்பவர்களைக் கண்ணீர் விடச் செய்யும் பலமான சோகம் இந்தப் படத்தில் இல்லை; வீட்டை விட்டு எல்லோரும் வெளியேறி மூலைக்கு ஒருவராக இருந்து கொண்டு தலைவிதியை நினைந்து நொந்து கொள்ளும் வேதனைக் காட்சியும் இல்லை; இயற்கையின் விகார வசப்பட்டு யாரும் இந்தப் படத்தில் வழுக்கி விழுந்து சிரமப்படவில்லை! விபரீதம் இல்லாத சம்பவங்களுடன் சுவாரஸ்யமாகச் செல்லும் "மிஸ்டர் சம்பத்" ஹாஸ்ய ரஸம் மிகுந்து எல்லோரும் ரஸிக்கக் கூடிய முறையில் அமைந்திருக்கிறது.

படம் ஹிந்திப் படமாயிருந்தாலும் ஹிந்தி தெரியாதவர்களும் பார்த்து அநுபவிக்கும்படியான பொழுதுபோக்குப் படம்.

# பேஷான காரியம்

டி. ஜி. என்.

“அப்பா வாங்கி வந்திருக்கும் இந்தப் புடவையைப் பார்த்தீர்களா? எவ்வளவு நன்றாயிருக்கிறது!”

“ஹூம்......ரொம்ப லட்சணமாகத்தான் இருக்கிறது! அந்தப் பணத்தை என்னிடம் கொடுத்திருந்தால் இதை விடப் பேஷான தாக வாங்கி வந்திருப்பேன்.”

“ராமசாமி தான் இன்று மார்க்கெட்டி லிருந்து கறிகாய் வாங்கி வந்தான். அவனுக்கு எப்போதுமே காய் கறி வாங்குவதில் சாமர்த்தியம் உண்டு. கத்திரிக்காய் வாய்க்கு எவ்வளவு ருசியாயிருந்தது!”

“ஹூம்...பெரிய காய் கறி வாங்கி வந்து விட்டான்! போதுமே! அந்தப் பணத்தை எடுத்துக் கொண்டு நான் போயிருந்தால்....”

தினசரி மேற்கண்டபடி கமலாவுக்கும் அவள் கணவன் நடராஜனுக்குமிடையே சம்பாஷணை நடக்கும்.

யாராவது நல்லதாக ஏதாவது வாங்கி வந்து விட்டார்கள் என்று கமலா சொல்ல வேண்டியதுதான்! “ஹூம், அதென்ன பிரமாதம்?” என்று தன் சாமர்த்தியத்தைப் பற்றி ஆரம்பித்து விடுவான் நடராஜன்.

ஒரு நாள் மார்க்கெட்டிலிருந்து சீமைத் தக்காளிப் பழம் வாங்கி வந்தான் நடராஜ வின் மைத்துனன் ராமசாமி. யாரும் அதைப் பற்றி அபிப்பிராயம் கேட்பதற்கு முன்னரே அதில் ஒன்றைக் கையில் எடுத்துப்பார்த்து, “பழமா இது?” என்று ஆரம்பித்தான் நடராஜன்.

ராமசாமி தன் உள்ளத்தில் குமுறிய கோபத்தை உதட்டில் கொண்டு வரவில்லை. நிதானமான குரலிலேயே, “அத்திம்பேரே! நீங்களே போய்ப் பார்த்து இதைவிட நல்ல பழமாக வாங்கி வாருங்களேன்! நான் பத்து ரூபாய் பந்தயம் கட்டுகிறேன்” என்றான்.

“சரி” என்று சொல்லி விட்டுச் சைக் கிளில் பையை மாட்டிக் கொண்டு மார்க் கெட்டுக்குக் கிளம்பினான் நடராஜன்.

அரைமணி நேரம் பொறுத்து, அவன் அருமையாய்ப் பொறுக்கி வாங்கிவந்த தக் காளிப் பழத்தை முறத்தில் கொட்டிக் குப் பையில் கொட்டும்படி வேலைக்காரி முனி யம்மாளிடம் கமலா ரகசியமாய்க் கொடுத்த போது அவள் ‘களுக்’ என்று சிரித்தாள். பின்னர், “ஐயையோ! நான் உரக்கக்கூடச் சிரிக்கக்கூடாதம்மா! மாப்பிள்ளை ஐயா காதில் விழுந்துவிட்டால், தனக்குத்தான் பேஷாகச் சிரிக்கத் தெரியும் என்பாங்க!” என்றாள்.

கடைசியில் நடராஜனே, “எனக்குத்தான் எல்லாம் செய்யத் தெரியும்” என்று சொல் லிக் கொள்வது நின்றுபோகும் நாளும் பிறந் தது. அந்த மாறுதலுக்குக் காரண பூதமான வர் அவன் மாமனார் ராமநாதன்தான்.

“மாப்பிள்ளை! நீங்கள் எந்தக் காரியத் தையும் பேஷானதாகச் செய்யலாம்...ஆனால் ஒரு காரியத்தை நானும் பேஷாகச் செய் தேன் என்பதை உங்களால் மறுக்க முடி யாது” என்றார் ராமநாதன்.

“என்ன அது?” என்று சற்றுக் கோபத்துட னேயே கேட்டான் நடராஜன்.

ராமநாதன் புன்னகையுடன், “கமலாவுக்கு உங்களை மாப்பிள்ளையாகத் தேடிப் பிடித் தேனே! அதைத்தான் சொல்கிறேன்” என் றார் அவர். அன்றுடன் நடராஜன் வாய் அடைத்து விட்டது!



## உபசாரம்

பம்பாய், இந்தியன் மர்ச் சென்ட்ஸ் சேம்பர் காரிய தரிசியான ஸ்ரீ ஏ. வி. ராம லிங்கம் அவர்களுக்கு, பம் பாய் வர்த்தகப் பிரமுகர்கள் ரூ. 61,001 நன்கொடை அளித்து கௌரவித்தார்கள். வர்த்தகர்கள் குழுவுக்கும் மேற்படி சேம்பருக்கும் சென்ற இருபத்தாறு வருஷங் களாக ஸ்ரீ ஏ. வி. ராமலிங் கம் அவர்கள் செய்துள்ள சேவையைப் பாராட்டவே இந்த நன்கொடை அவ ருக்கு அளிக்கப்பட்டது.

பம்பாய் நகரத்தில் பிர சித்திபெற்ற ரிட்ஜ் ஹோட்ட லில் நடந்த இந்தக் கூட் டத்துக்குப் பிரபல வர்த் தகப் பிரமுகர்கள் விஜயம் செய்து, ஸ்ரீ ராமலிங்கம் அவர்களின் அரிய சேவை யைப் பாராட்டிப் பேசினர்.

# ஆ! ஆ! ஆ. தெக்கூர்!

ரா. கி.

மதிப்புக்குரிய நண்பர் ஒருவரிடமிருந்து சில நாளைக்கு முன்னர் கடிதம் ஒன்று வந்தது. அதில் "எங்கேயோ ஓர் ஊராம்! ஆ. தெக்கூர் என்று பேராம்! அங்கே உள்ள கலாசாலை ஆண்டு விழாவில் நீர் தலைமை தாங்கப் போவதாக அழைப்பு வந்தது. ஊர் எந்த ஜில்லாவில், எந்தத் தாலூகாவில் இருக்கிறதென்று தெரியவில்லை. ஆ. தெக்கூர் என்றால் உலகமெல்லாம் பிரசித்தமாகத் தெரிந்திருக்கும் என்பது அந்த ஊர் வாசிகளின் எண்ணம் போலும்!......ஆயினும் வாழ்த்துக் கடிதம் ஒன்று அரை குறை விலாசத்துடன் எழுதி அனுப்பினேன். அது அவ்விடம் வந்து சேர்ந்ததா?" என்று கேட்டிருந்தார்.

நான் அந்த நண்பருக்கு எழுதியதாவது:— "தங்கள் கடிதத்தின் மேல் விலாசம் எப்படி எழுதியிருந்தாலும், விழாவுக்கு அ. விலாசம் சரியாக இருந்தது. ஆகையால் தங்கள் வாழ்த்துக் கடிதமும் ஆ. தெக்கூரைத் தேடிப் பிடித்து வந்து சேர்ந்து விட்டது. இன்றைக்கு ஆ. தெக்கூர் எங்கே இருக்கிறதென்பது வெளியில் பலருக்கும் தெரியாமலிருக்கலாம். ஆனால் சில ஆண்டுகள் பொறுத்திருந்து பாருங்கள்! ஐந்தாறு ஆண்டுகளுக்குள்ளே ஆ. தெக்கூர் என்னும் ஊர் 'தமிழ்கூறும் நல்லுலகம்' முழுவதிலும், அதற்கு அப்பாலும், புகழ் பரப்பி விளங்கா விட்டால் என்னைக் கேளுங்கள். அப்போது ஆ. தெக்கூர் எந்தத் தாலூகா, எந்த ஜில்லா என்று கேட்க வேண்டிய அவசியமே இராது. ஆ. தெக்கூரை வைத்து அந்தத் தாலூகாவுக்கும் ஜில்லாவுக்கும் பிரசித்தி உண்டாகும் நிலைமை ஏற்பட்டு விடும்......ஆண்டு விழா மிகச் சிறப்பாக நடந்தேறியது. சூளாசிரியர் திருவள்ளுவரும் வீர பாண்டியக் கட்டப் பொம்மனும் விஜயம் செய்து என்னுடைய தலைமையில் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். விழா சிறப்பாக நடப்பதற்குக் கேட்பானேன்!"

இம்மாதிரி நான் எழுதியதன் பலன் என்னவென்றால், அந்த மதிப்புக்குரிய நண்பர் சென்னையில் எங்களுடைய பொது நண்பர்களான பலருக்கு என்னுடைய தேக நிலைமையை அவசரமாகக் கவனிக்கும்படி கடிதம் எழுதி விட்டார்! டெலிபோனில் சிலர் "நல்லபடியாய் இருக்கிறீர்களா?" என்று என்னை விசாரித்தார்கள். இன்னும் சிலர் நேரில் வந்து பார்த்து என் உடம்பும் உள்ளமும் சரியாகத்தான் இருக்கின்றன என்று தெரிந்து கொண்டு போனார்கள்!

* * *

ஓர் ஊருக்குப் பெயரும் புகழும் பல காரணங்களினால் ஏற்படக்கூடும். ஆனால் கல்வி ஸ்தாபனங்களின் மூலமாக ஏற்படும் புகழ்தான் என்றும் அழியாமல் நிலைத்து நிற்கும். இங்கிலாந்தில் முக்கியமான நகரம் லண்டன் என்று அனைவரும் அறிவார்கள். அடுத்தபடியாகப் பெரிய நகரங்கள் பல அந்நாட்டில் இருக்கின்றன;

ஆனால் கேம்ப்ரிட்ஜ், ஆக்ஸ்போர்டு நகரங்கள் தான் புகழினால் சிறந்து பிரபல மடைந்திருக்கின்றன. இதற்குக் காரணம் அந்த நகரங்களில் உள்ள கல்வி ஸ்தாபனங்களே யாகும்.

புராதன பாரத நாட்டில் தக்ஷசிலம், நாலந்தா என்னும் இரு ஊர்கள் இருந்தன. இந்த ஊர்கள் இன்று இல்லை; இடைக் காலத்தில் அழிந்து போயின. ஆயினும் அவற்றின் பெயர்கள் பாரத நாட்டின் சரித்திரத்தில் நிலைபெற்ற புகழை அடைந்து விட்டன. அந்த ஊர்களில் பழைய காலத்தில் மிகச் சிறந்த கல்வி நிலையங்கள் இருந்ததுதான் காரணமாகும்.

தமிழகத்தில் மதுரைக்கும் காஞ்சிக்கும் உள்ள புகழ் வேறு எந்த நகரத்துக்கும் இல்லை. தமிழ்ச் சங்கத்தினால் மதுரை சிறப்பு அடைந்தது.

'புஷ்பேஷு ஜாதீ புருஷேஷு விஷ்ணு
நாரீஷு ரம்பா நகரேஷு காஞ்சீ'

என்று வடமொழிப் பாவலர் ஒருவர் காஞ்சிமா நகரைப் போற்றினார்

"கல்வியிற் கரையிலாத காஞ்சிமா
நகரந் தன்னில்"

என்னும் அப்பர் பெருமானின் வாக்கில் காஞ்சியின் சிறப்புக்குக் காரணத்தை அறியலாம்.

மேற்கூறிய நகரங்களைப் போல ஆ. தெக்கூர் புகழ் அடையப் போகிறதென்று கூறினால், அது 'மிகைபடக் கூறல்' என்னும் இலக்கணத்துக்குள் வந்து சேரும். இலக்கணத்துக்கும் எனக்கும் அவ்



ஸ்ரீ கருமுத்து தி. மாணிக்கவாசகம் நன்றி உரை கூறுகிறார். பக்கத்தில் அமர்ந்திருப்பவர் அவருடைய சகோதரர் ஸ்ரீ கருமுத்து தி. சுந்தரம் செட்டியார்.

யளவு பொருத்தம் இல்லையென்றாலும், இந்த இலக்கண விதியை மீற நான் விரும்பவில்லை.

'தமிழ் கூறும் நல்லுலக'த்தில், ஆ. தெக்கூர் எங்கே இருக்கிறது என்ற கேள்விக்கு இடமேற்படாத அளவில் அது பிரபலமடைவது நிச்சயம் என்று மட்டுமே கூறுகிறேன்.

அந்த ஊருக்குப் பலர் சென்று பார்த்து "ஆ! ஆ! இதுவோ ஆ. தெக்கூர்!" என்று வியக்கும்படியான நிலைமையும் ஏற்படத்தான் போகிறது.

அத்தகைய சிறப்பை அந்த ஊருக்கு அளிக்கக் கூடிய கல்வி நிலையம் ஒன்று சில ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கப்பட்டு நல்ல முறையில் நடந்து வருகிறது. அதன் பெயர் விசாலாட்சி கலாசாலை.

• • •

ஆ. தெக்கூர் விசாலாட்சி கலாசாலையின் தற்போதையத் தலைமை ஆசிரியர் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணமூர்த்தி எம். ஏ. எல். டி. அவர்கள். இவரால் மூன்று ஆண்டுகளுக்கு முன்பு "கல்கி" பத்திரிகைக்கு 16 சந்தா நஷ்டம் ஆயிற்று. அதற்கு முன்னால் இவர் மாயவரம் நகரசபை ஹைஸ்கூலில் தலைமை ஆசிரியராக இருந்தார். ஹெட்மாஸ்டர் ஸ்ரீ ராகவ அய்யங்கார் காலத்தில் அவருக்குத் துணையாக இருந்து கல்வித் தொண்டு புரிந்து வந்தவர், ஸ்ரீ ராகவய்யங்கார் விலகிய பிறகு தலைமை ஆசிரியர் ஆனார். ஆறு ஆண்டு அந்தப் பொறுப்பை வகித்தார். அவருடைய காலத்தில் மாயவரம் ஹைஸ்கூல் மாணவர்கள் எஸ். எஸ். எல். ஸி. தேர்வில் சென்னை மாகாணத்தில் தொடர்ந்து முதன்மை பெற்று வந்தார்கள். வருஷந்தோறும் 90 சதவிகிதத்துக்கு மேல் தேறினார்கள். கடைசி ஆண்டில் 192 மாணாக்கர்கள் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்குச் சென்றனர்; அவர்களில் 190 பேர் தேறினார்கள்!

இப்படிப்பட்ட தலைமை ஆசிரியரை நீடிக்க விட்டால் அபாயம் என்று நகர சபை அதிகாரிகள் கருதினார்கள். எனவே, தலைமை ஆசிரியரின் பொறுப்பில் தலையிட்டு, ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்களை அப் பதவியை விட்டு விரட்ட வகை செய்தார்கள். "ஆயிரம் ஆனாலும் மாயவரம் ஆகுமா!" என்னும் பழமொழியை இந்த விதத்திலே உறுதிப் படுத்தினார்கள்.

அந்த நிகழ்ச்சியைப் பற்றி இப் பத்திரிகையில் வெளியான குறிப்புக்காகத்தான் மாயவரம் நகர சபையார் கோபங் கொண்டு, "கல்கி" பத்திரிகையைப் பகிஷ்கரிக்கத் தீர்மானித்தனர். அதனால் பதினாறு சந்தா நஷ்டம் ஏற்பட்டது.

இப்படி நஷ்டம் ஏற்படுத்திய மனிதரைப் பற்றித் தெரிந்து கொள்வதில் எனக்கு ஆர்வம் உண்டாயிற்று. அதற்கு முன் அவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தேனே தவிர, முன்பின் பழக்கம் இல்லை. "ஐயோ! பாவம்! ஆசிரியர்களின் நிலை எப்போதுமே கஷ்டமாயிற்றே! திடீரென்று வேலையை விட்டு நீங்கும்படி நேர்ந்தவர், அப்புறம் எங்கே போனாரோ! என்ன ஆனாரோ!" என்று கவலைப்பட்டு விசாரித்தேன். அப்போதுதான் ஆ. தெக்கூர் விசாலாட்சி கலாசாலையைப் பற்றி முதன் முதலாகத் தெரிந்து கொள்ள நேர்ந்தது.

அச்சமயத்தில், ஆ. தெக்கூர் எங்கே இருக்கிறதென்று காணும் புலன் விசாரிக்க வேண்டியதாயிற்று.

புதுக்கோட்டையிலிருந்து சுமார் முப்பது மைல் தூரத்தில் ஆ. தெக்கூர் இருக்கிறது என்றும்,

ஆண்டு விழாவிற்காகக் கூடியிருந்த சபையில் மாணவர் சிறுவர் சிறுமிகள் அமர்ந்திருந்த பகுதி





ஆண்டு விழாவில் கதம்ப நிகழ்ச்சிகள் நடத்திய விசாலாட்சி கலாசாலை மாணவ மாணவிகள்

அந்தச் சிறிய கிராமத்தில், விசாலாட்சி கலாசாலையை ஆரம்பித்து நடத்தி வருவோர், செட்டிமார் நாட்டில் பிரபலம் வாய்ந்த கருமுத்து குடும்பத்தினர் என்றும் தெரிந்தன. மதுரையில் நடந்த முதலாவது தமிழ் விழாவின்போது மீனாக்ஷி மில்லின் சொந்தக்காரரான ஸ்ரீ கருமுத்து தியாகராஜ செட்டியார் அவர்களின் தமிழன்பைக் குறித்து நன்கு தெரிந்து கொண்டிருந்தேன். தமிழ் வளர்ச்சிக் கழகத்துக்குப் பெரும் நன்கொடை அளித்து உதவியவர்களில் ஸ்ரீ கருமுத்து தியாகராஜ செட்டியாரும் ஒருவர்.

ஸ்ரீ கருமுத்து தியாகராஜ செட்டியாரின் மூத்த புதல்வரான ஸ்ரீ தி. சுந்தரம் செட்டியார் தமது அருமை அன்னையாரின் பெயரால் நிறுவப்பட்டிருக்கும் ஆ. தெக்கூர் விசாலாட்சி கலாசாலைக்குத் திறமையுள்ள தலைமை ஆசிரியர் ஒருவரைத் தேடிக் கொண்டிருந்தார். உண்மையிலேயே திருநெல்வேலியிலிருந்து சென்னை வரையில் தேடியதாக அறிகிறேன். அச்சமயம் மாயவரம் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்களின் ராஜிநாமாவைப் பற்றிய செய்தி கிடைத்தது. பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று. நூறு ரூபாய் அதிகச் சம்பளம் கொடுத்து ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணமூர்த்தியை அழைத்துச் சென்று ஆ. தெக்கூர் விசாலாட்சி கலாசாலைக்குத் தலைமை ஆசிரியராக நியமித்தார்.

ஆசிரியர் குலத்துக்கு இவ்வளவு பெரு மதிப்பு அளிப்பவர்களும், திறமையைத் தேடிச் சென்று பாராட்டி அழைப்பவர்களும், தமிழகத்தில் சிலர் இருக்கிறார்களே என்று எண்ணி அப்போது எனக்கு மிக்க மகிழ்ச்சி உண்டாயிற்று.

ஆனால் சம்பளம் மட்டும் அதிகம் கிடைத்தால் போதுமா! ஆசிரியத் திறமை நன்றாகத் தொழில் படுவதற்குத் தக்க சூழ்நிலை வேண்டாமா! காவேரிக் கரையில் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்கள் பெற்றிருந்த நற்பெயரை ஆ. தெக்கூர் காட்டுப் பிராந்தியத்திலே நிலைநாட்டிக் கொள்வாரா! பார்க்கப் போனால், வாழ்க்கையில் பொருளும் வருமானமும் மட்டுமே முக்கியமானவை அல்ல. எடுத்த காரியத்தை வெற்றிகரமாகச் செய்து முடித்தோம் என்னும் எண்ணத்தினால் ஏற்படும் பெருமித உற்சாகத்திற்கு இணை வேறு எதுவும் இல்லை. அத்தகைய உற்சாகம் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு ஆ. தெக்கூரில் ஏற்படுமா! அங்கே நீடித்து நின்று பணி ஆற்றுவாரா! — இந்தக் கேள்விகளுக்கெல்லாம் பிப்ரவரி மாதம் 28உ யன்று நடைபெற்ற விசாலாட்சி கலாசாலை ஆண்டு விழாவுக்கு நான் சென்றிருந்தபோது விடைகள் கிடைத்தன. திருப்தி அளித்து உற்சாக மூட்டும் விடைகளாகவே கிடைத்தன.

* * *

ஆ. தெக்கூர் சிறிய கிராமந்தான். ஆனால் முதன் முதலாக ஊரை நெருங்கிப் போகும்போது அவ்விதம் தோன்றாது. செட்டிமார் நாட்டுக் கிராமங்கள் பலவற்றிலும் உள்ளதுபோல் இந்தக் கிராமத்திலும் சில பெரிய மாட மாளிகைகள் எழுந்து கம்பீரமான தோற்றம் அளிக்கின்றன. புத்தம் புதிய தோற்றமுடைய அழகிய கோயில் ஒன்றும் இருக்கிறது. ஊரின் ஜனத் தொகையைக் கேட்டுத் தெரிந்துகொண்ட பிறகுதான் அது எவ்வளவு சிறிய ஊர் என்பதை அறியலாம்.

இவ்வளவு சிறிய ஜனத்தொகை உள்ள ஊரில் ஹைஸ்கூல் எப்படி நடத்த முடியும்! — பிள்ளைகளுக்கு எங்கே போவது! கருமுத்து குடும்பத்தாரின் முயற்சி இதையும் சாத்தியமாகச் செய்திருக்கிறது. பெரிய மாளிகை போன்ற இரு வீடு

களில் இருநூறு பிள்ளைகளுக்கு ஹாஸ்டல் வசதி செய்யப்பட்டிருக்கிறது. கலாசாலைக்கு என்று அமர்த்தப்பட்டிருக்கும் மோட்டார் பஸ் ஒன்று சுற்று வட்டாரத்தில் பதினைந்து கல் வரையில் சென்று பிள்ளைகளை அழைத்துக் கொண்டு வருகிறது. ஆதலின் இப்போது அறுநூறு பிள்ளைகள் வரையில் விசாலாட்சி கலாசாலையில் படிக்கிறார்கள். வருஷந்தோறும் இத்தொகை உயர்ந்து கொண்டே போகும் என்பதில் ஐயமில்லை.

கருமுத்து குடும்பத்தார் எந்தக் காரியத்தை மேற்கொண்டாலும் அதை நிறைவாகச் செய்து முடிக்கும் ஆற்றல் உடையவர்கள். விசாலாட்சி கலாசாலையின் வருங்கால வளர்ச்சிக்கு உறுதியான அடிப்படை அமைத்திருக்கிறார்கள். அதுமட்டுமல்ல; ஆ. தெக்கூர் கிராமத்தை ஒரு சிறந்த கல்வி நிலையமாகச் செய்யவும் திட்டம் இட்டிருக்கிறார்கள். ஊர்ப்புறத்தில் முப்பது ஏக்கரா நிலம் வாங்கப்பட்டிருக்கிறது. அந்த இடத்தைப் பார்த்து விட்டு, "ஒரு ஹைஸ்கூலுக்கு மட்டும் இவ்வளவு பெரிய இடம் எதற்கு?" என்று கேட்டபோது, வளர்ச்சித் திட்டத்தைப் பற்றிய விவரங்கள் தெரிய வந்தன.

ஆண் பிள்ளைகளுக்கென்று ஒரு கலாசாலை, பெண் குழந்தைகளுக்காக ஒரு தனிக் கலாசாலை, பிள்ளைகளுக்குத் தொழிற்பயிற்சியும் விவசாயப் பயிற்சியும் அளிக்கும் இடங்கள், விளையாடும் இடங்கள், ஆசிரியர்கள் குடி இருக்க வீடுகள், மருத்துவ நிலையம், ஹாஸ்டல் கட்டிடம், — இவ்வளவும் நிர்மாணிக்கத் திட்டம் இட்டிருக்கிறார்கள்.

நியாயமாக வேலை இதற்குள் தொடங்கப்பட்டிருக்க வேண்டும். முட்டுக் கட்டையாக நிற்கும் காரணம், மேற்கூறிய முப்பது ஏக்கரா நிலத்தில் இடையிடையே தனிப்பட்டவர்களுக்குச் சொந்தமான சிறிய நிலப்பகுதிகள் இருப்பது தான். இவற்றை வாங்குவதற்குத் தீவிரமான பிரயத்தனம் நடந்து வருகிறது.

சில இடங்களில் இந்த மாதிரி உத்தமமான கைங்கரியங்களுக்கு முட்டுக்கட்டை போடுவதையே சிலர் பணியாகக் கொள்ளுவதுண்டு. "இந்தச் சந்தர்ப்பத்தில் நாமும் கொஞ்சம் பணம் தட்டலாமே!" என்று எண்ணி ஒன்றுக்கு நாலு மடங்கு விலை கூறுவார்கள்.

ஆ. தெக்கூரிலும் அக்கம் பக்கத்திலும் உள்ளவர்கள் அத்தகைய அபகலத்துக்கு இடம் கொடாமல் இந்தச் சிறந்த கல்விப் பணிக்கு உதவி செய்வார்கள் என்று நம்புகிறேன்.

இம்மாதிரி பொதுப் பணிகளுக்கு, சர்க்கார் அக்கம்பக்கத்தில் விற்கும் நியாயமான விலைக்கு நிலங்களை ஆர்ஜிதம் செய்து கொடுப்பதும் முறையாகும். ஜில்லா அதிகாரிகள் சிவப்பு நாடாவை ரொம்பவும் கட்டிக் கொண்டு அழாமல் சுறுசுறுப்பாகக் காரியம் செய்தால் பெரும் புண்ணியத்தைக் கட்டிக் கொள்ளலாம்.

கட்டிடக் கலையில் இயற்கையான ஆர்வமும் நுண்ணறிவும் படைத்த கருமுத்து குடும்பத்தார் நிலம் கிடைத்த இரண்டு ஆண்டுக்குள் அழகழகான கட்டிடங்களைக் கட்டி விடுவார்கள். ஆ. தெக்கூரின் தோற்றமே மாறிப் புதிய சோபை பெற்று விளங்கும் என்பதில் ஐயம் இல்லை.



விசாலாட்சி கலாசாலை ஆண்டு விழாவில் திறந்து வைக்கப்பட்ட ராஜாஜியின் உருவப்படம்

ஸ்ரீ வ. உ. சிதம்பரனாரின் வரலாற்றை விசாலாட்சி கலாசாலை மாணவர்கள் வில்லுப் பாட்டில் அமைத்து அருமையாகக் காலட்சேபம் செய்தார்கள்.



ஆண்டு விழாக் கூட்டம் ஆரம்பமானதும், மேடையிலிருந்தபடி எதிரே சபையில் அமர்ந்திருந்த மாணவர்களையும் மாணவிகளையும் பார்த்தேன். அறிவும் களையும் பொருந்திய மலர்ந்த முகங்களைப் பார்த்ததும் என்னுடைய கவலையெல்லாம் பறந்து விட்டது. தலைமை ஆசிரியர் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இந்த ஆ. தெக்கூரிலும் மிக நல்ல பெயர் எடுப்பது நிச்சயம் என்ற உறுதி ஏற்பட்டது.



தலைமை ஆசிரியர்
என். எஸ். கிருஷ்ணமூர்த்தி

காவேரியின் இரு கரைகளிலும் பிறந்தவர்களுக்குத்தான் அறிவும் கல்வியில் ஆர்வமும் தேர்ச்சியும் ஏக போக உரிமைகள் என்பதில் எனக்கு எப்போதுமே நம்பிக்கை கிடையாது. தண்ணீர்ப் பஞ்சத்துக்குப் பெயர்போன வறண்ட பிரதேசங்களில் சுடர் விட்டு ஒளிரும் அறிவுடையவர்கள் பிறந்திருக்கிறார்கள். இதற்கு மிகச் சிறந்த உதாரணமாக இன்று நம்மிடையே உள்ளவர் ராஜாஜி அவர்கள். சேலம் ஜில்லா ஓசூர் தாலூக்காவில் பிறந்தவரான ராஜாஜி இன்று உலகத்திலேயே சிறந்த அறிவாளிகள் போற்றக்கூடியவராக விளங்கி வருகிறார்.

ராஜாஜியின் உதாரணத்தை அந்தப் பள்ளிக்கூடத்தில் படிக்கும் பிள்ளைகளுக்கும் ஆசிரியன்மார்களுக்கும் சொல்ல வேண்டும் என்று எண்ணினேன். எனக்குத் தெரியாமல் கலாசாலை நிர்வாகிகள் இந்த விழாவின்போது ராஜாஜி உருவப் படத் திறப்புக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். மேடையில் திரைபோட்டு மூடி வைத்திருந்த படம், கலாசாலை யாருடைய பெயரில் ஏற்பட்டதோ அந்த அம்மையின் படமாக இருக்கலாம் என்று எண்ணியிருந்தேன். விழா ஆரம்பித்து ஸ்ரீ தி. சுந்தரம் அவர்களின் முன்னுரை கூறியபோதுதான் ராஜாஜியின் உருவப்படம் அது என்று தெரிந்தது. ஆகவே, அறிவின் சிகரமான ஓர் உதாரண புருஷரைப் பற்றி நான் வாயினால் சொல்வதோடு நில்லாமல், அவருடைய திரு உருவத்தைப் பள்ளிக்கூடப் பிள்ளைகளின் கண் முன்னால் காட்டிக் காட்டும்படியான வாய்ப்புக் கிடைத்தது.

ஆண்டு விழாவில் அடுத்த முக்கியமான நிகழ்ச்சி, திருவள்ளுவரும் வீர பாண்டியக் கட்டப் பொம்மனும் மேடைமீது எழுந்தருளிச் சரமாரியாகச் சொல்மாரி பொழிந்ததுதான்.

பொய்யாமொழிப் புலவரின் அருள்வாக்கான திருக்குறள் எந்தக் காலத்துக்கும் பொருந்தக் கூடிய உண்மைகளைக் கூறும் தமிழ் மறை என்று போற்றுகிறோம். இது எப்படியென்பதை இரண்டு மாணக்கர்கள் மேடைக்கு வந்து ஒருவர் வள்ளுவராகவும் ஒருவர் கட்டப் பொம்மனாகவும் பேசி நடித்து மெய்ப்பித்தார்கள். கட்டப் பொம்மன் தன் வாழ்க்கை நிகழ்ச்சி ஒவ்வொன்றாகச் சொல்லித் திருவள்ளுவரின் கருத்தைக் கேட்டான். திருவள்ளுவர் அந்த நிகழ்ச்சி ஒவ்வொன்றுக்கும் திருக்குறளிலிருந்து ஆதாரம் எடுத்துக் கூறி அவனுடைய செயல்களை ஆமோதித்துப் பாராட்டினார். விஷயம் மிகப் பொருத்தமாகவும் ரஸமாகவும் இருந்தது மட்டுமல்ல; இருவருடைய பேச்சுக்களும் அனலைக் கக்கிக் கொண்டு வரும் அம்புகளைப் போல் வேகமும் உத்வேகமும் பொருந்தி விளங்கின.

"இழுமெனும் ஓசை உடைய இனிய மொழி தமிழ் மொழி" என்று பலரும் சொல்லி வந்தமையால், தமிழில் வேகம் கிடையாது என்று கருத்துப் பரவ இடம் ஏற்பட்டது. இந்தக் கருத்தைப் போக்கும் முயற்சியிலே சிலர், இசை இயல் நாடகம் என்னும் முத் தமிழோடு நாலாவது தமிழாக வசைத் தமிழை உண்டாக்கி வளர்த்து வருகின்றனர்.

ஆனால் வசைத் தமிழைக் கையாளாமலே, தமிழர்களின் சிறந்த பண்பாட்டுக்கு உகந்த முறையில், தமிழைச் சக்தியுடனும் உத்வேகத்துடனும் கையாளலாம் என்பதற்கு, வள்ளுவரும் வீர பாண்டியனும் நட்புரிமையோடு இந்த விழாவில் நடத்திய சொற்போர் அத்தாட்சியாக இருந்தது.

அன்றிரவு கலாசாலை மாணவர்களும் மாணவிகளும் கதம்ப நிகழ்ச்சிகள் பல நடத்திக் காட்டினார்கள். கப்பலோட்டிய தமிழர் ஸ்ரீ வ. உ. சிதம்பரனாரின் வரலாற்றை வில்லுப் பாட்டில் சுருக்கமாக அமைத்துப் பிள்ளைகள் சிலர் சக்கைப் போடு போட்டார்கள். "சேவா சங்கம்" என்னும் நாடகம் நடந்தது. இடையிடையே பாரதியார் பாடல்களைப் பாடிச் சிறுமிகள் கும்மி அடித்தும் அபிநயம் பிடித்தும் சபையினரை மகிழ்வித்தார்கள். "சேவா சங்கம்" நாடகத்தில் கோனாராகவும் அவருடைய இளம்மனைவியாகவும் ஜமீன் கணக்குப் பிள்ளையாகவும் நடித்தவர்கள் அபாரமான நடிப்புத் திறமை காட்டிச் சபையினரைக் குலுங்கச் சிரிக்க வைத்தார்கள். தலைமை ஆசிரியருடன் மற்ற ஆசிரியர்களும் நன்கு ஒத்துழைத்திருக்கிறபடியினால்தான் இவ்வளவு நல்ல பலன்கள் கிடைத்திருக்க வேண்டும். முக்கியமாக, தேசிய ஆர்வம் உடைய முதல்தரமான தமிழ் ஆசிரியர் கிடைத்திருப்பது விசாலாட்சி கலாசாலையின் அதிர்ஷ்டம் என்றே சொல்லலாம்.

மற்ற உதவி ஆசிரியர்களைப் பற்றி விசாரித்த போது இன்னொரு முக்கியமான விவரம் தெரிந்து கொண்டேன். தலைமை ஆசிரியருக்கு அதிகச் சம்பளம் கொடுத்து வருவதுபோல் மற்ற எல்லா ஆசிரியர்களுக்குமே சர்க்கார் திட்டத்தைக் காட்டிலும் அதிகமாகச் சம்பளம் கொடுக்கப்படுகிறது என்று தெரிந்தது. இதைக் காட்டிலும் மகிழ்ச்சி அளிக்கக் கூடிய செய்தி வேறு என்ன இருக்க முடியும்! நாடெங்கும் ஆசிரியர்களுக்குச் சம்பளம் போதாது என்ற அதிருப்தி பரவிக் கிளர்ச்சி நடந்து வரும் காலத்தில், இங்கே ஒரு கலாசாலையில் ஆசிரியர்கள் "சர்க்கார் திட்டத்தைக் காட்டிலும் அதிகச் சம்பளம் வாங்குகிறோம்" என்று சந்தோஷமாகச் சொல்லிக் கொண்டார்கள்.

தற்சமயம் ஆசிரியர்களுக்குக் குடியிருப்பு வசதி போதவில்லை என்பது உண்மைதான். அதனால்

சிலர் மிக்க அசௌகரியத்துக்கு ஆளாகின்றனர் என்பது அவர்கள் சொல்லாமலே எனக்குத் தெரிய வந்தது.

இந்தக் குறை வெகு சீக்கிரத்தில் தீர்ந்து போய் விடும் என்றும் எதிர்பார்க்கலாம்.

இவ்வளவு நல்ல முறையில் ஒரு கலாசாலையை நடத்துவோர் வேண்டும் நிலத்தை ஆர்ஜிதம் செய்து கொடுப்பதில் ஜில்லா அதிகாரிகள் சிறிது சிரத்தை காட்டினால், அடுத்த ஆறு மாதத்துக்குள் ஆசிரியர்களுக்கு நல்ல ஜாகை வசதிகள் ஏற்பட்டு விடக் கூடும்.

* * *

ஆண்டு விழாவிலே தலைமை ஆசிரியர் படித்த ஆண்டு அறிக்கையில், சென்ற வருஷம் முப்பது மாணவர்கள் எஸ். எஸ். எல். சி. பரீட்சைக்குச் சென்றார்கள் என்றும், அவர்களில் 19 பேர் தேறினார்கள் என்றும் கண்டிருந்தது. அதாவது 60 சதவிகிதம் தேறியிருக்கிறார்கள். இந்த ஆண்டில் யாரையுமே பரீட்சைக்குப் போகாமல் நிறுத்தவில்லை. அறுபது மாணவர்கள் பரீட்சைக்குப் போகிறார்கள். தேறுதல் சதவிகிதம் இவ்வாண்டில் அதிகமாக யிருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இன்னும் சில ஆண்டுகளில் பரீட்சைக்குப் போகும் மாணவர்களின் தொகையும் அதிகமாகி விடும். தேறுவோரின் சதவிகிதமும் 70, 80, 90 என்று உயர்ந்து விடலாம்.

''ஆனால் பரீட்சை தேறுகிறவர்களின் சதவிகிதம் அதிகம் என்பதைக் கொண்டு மட்டும் நான் திருப்தியடையவும் முடியாது; தங்களைப் பாராட்டவும் முடியாது. இந்தக் கலாசாலையில் படிக்கும் மாணவர்கள் படிப்பு முடிந்து பரீட்சை தேறி வெளியேறியதும், குமாஸ்தா வேலைக்கு விண்ணப்பம் போடும் அவசியம் இருக்கவே கூடாது. அறிவுத் திறனையும் கைத்திறனையும் உபயோகித்து அவர்கள் தங்கள் வாழ்க்கைக்கு அவசியமான பொருளைத் தாங்களே தேடிக் கொண்டு சுதந்திரமாக ஜீவனம் நடத்தக் கூடியவர்களாக வேண்டும்' ஆதாரக் கல்விப் பள்ளிக்கூடம் நடத்துகிறவர்கள் இங்கே வந்து பார்த்துப் பயனடையக் கூடிய முறையில் பள்ளிக்கூடத்தை நடத்தவேண்டும்'' என்று தலைமை ஆசிரியரிடம் கேட்டுக் கொண்டேன். அதுவே தமக்கும் இலட்சியம் என்றும் அதற்கு வேண்டிய அடிப்படை ஏற்பாடுகளைச் செய்து வருவதாகவும் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ஒப்புக் கொண்டார்.

தொழில் துறையில் தேர்ந்து மகத்தான வெற்றி அடைந்துள்ள கலாசாலை நிர்வாகிகள் — ஸ்ரீ கருமுத்து குடும்பத்தினர் — மேற்கூறிய இலட்சியம் நிறைவேறுவதற்கு வேண்டிய உதவிகளைச் செய்வார்கள் என்று நம்புகிறேன்.

* * *

ஆ. தெக்கூர் சென்றதில் இன்னும் இரண்டு மகிழ்ச்சிகரமான அநுபவங்கள் ஏற்பட்டன.

பழம் பெரும் தேசபக்தரும் தீவிர காங்கிரஸ்வாதியுமான ஸ்ரீ கருமுத்து சிவலிங்கம் அவர்களை நெடுங்காலத்துக்குப் பிறகு அவருடைய சொந்த ஊரில் சந்திக்க நேர்ந்தது. ஜஸ்டிஸ் கட்சியின் கோட்டையாக இருந்த செட்டிமார் நாட்டைக் காங்கிரஸ் மயமாக்கிய தொண்டில் ஸ்ரீ கருமுத்து சிவலிங்கத்துக்கு முக்கியமான பங்கு உண்டு. முதன் முதலில் ராமநாதபுரம் ஜில்லா போர்டு ஸ்தானங்களைக் காங்கிரஸ்வாதிகள் பெருவாரியாகக் கைப்பற்றிய சமயத்தில் மேற்படி போர்டின் முதலாவது கூட்டத்தைப் பார்ப்பதற்குப் பொதுமக்கள் பலர் வந்திருந்தார்கள். ''நம்மை இந்த இடத்துக்கு அனுப்பிய நம் எஜமானர்களாகிய வோட்டர்கள் இத்தனைபேர் நிற்கும் போது, நாம் மட்டும் நாற்காலிகளில் உட்காருவது சரியல்ல. எல்லாரும் தரையில் விரிப்பு விரித்துச் சரிசமமாக உட்காருவோம்'' என்றார் ஸ்ரீ கருமுத்து சிவலிங்கம். அவ்வாறே நடந்தது. அச்சமயம் ''ஜில்லா போர்டு உட்கார்ந்தது'' என்ற தலைப்புடன் ஓர் உப தலையங்கம் நான் எழுதியது ஸ்ரீ கருமுத்து சிவலிங்கம் அவர்களைப் பார்த்ததும் நினைவு வந்தது. சில வருஷங்களுக்கு முன்னால் பழைமையான காங்கிரஸ்வாதிகள் பலர் காங்கிரஸ் ஸ்தாபனத்திலிருந்து விலகிக் கொள்ளக் காரணங்கள் நேர்ந்த போது சிவலிங்கமும் விலகிக் கொண்டார். இப்போது விவசாயத்தில் கவனம் செலுத்தி வருகிறார் என்று அறிந்து மகிழ்ந்தேன்.

* * *

சிறிய கிராமமாகிய ஆ. தெக்கூரில் தீவிர தேசிய வாதிகளான இளைஞர்கள் சேர்ந்து ஒத்துழைத்து ''விவேகானந்த சங்கம்'' என்ற பெயருடன் சமூக சேவை ஸ்தாபனம் ஒன்று அமைத்திருக்கிறார்கள். சங்கத்தின் கட்டிடத்தில் சிறிய அளவில் ஒரு வாசகசாலை நிறுவி யிருக்கிறார்கள்.

1921-ம் ஆண்டு முதல் 1947-ம் ஆண்டு வரையில் காந்தி மகானின் தலைமையில் நடந்த சுதந்திரப் போர்களில் ஈடுபடும் வாய்ப்பு மேற்கூறிய காலத்தில் இளைஞர் சமூகத்துக்குக் கிடைத்து வந்தது. இந்தத் தலைமுறையைச் சேர்ந்த வாலிபர்களுக்கும் இனி வருவோருக்கும் அந்த வாய்ப்புக் கிட்டாது. ஆனால் தேசம் பெற்ற சுதந்திரத்தின் பயனை மக்கள் அனைவரும் அடையும் பொருட்டுச் செய்ய வேண்டிய சமூகப் பணிகள் எவ்வளவோ இருக்கின்றன. ஆதலின் சமூகத் தொண்டில் ஆர்வம் கொண்ட இளைஞர்கள் அடங்கிய சங்கம் ஊருக்கு ஒன்று அவசியம் ஏற்பட வேண்டும். ஒன்றுக்குமேல் இருந்தாலும் நல்லதுதான். ''தேசிய வாலிபர் சங்கம்'' என்று பெயர் வைத்துக் கொண்டாலும் சரி, தேசத்து மகான்களின் பெயரில் சங்கம் ஏற்படுத்திக் கொண்டாலும் சரி, அனைவரும் தேசிய முன்னணிப் படையில் சேர்ந்தவர்களாக எண்ணிக் கொண்டு தொண்டு புரிய வேண்டும். இந்தக் கருத்தைக் ''கல்கி''யில் அடிக்கடி வற்புறுத்தி வந்திருப்பதை நேயர்கள் அறிவார்கள். ஆ. தெக்கூர் விவேகானந்த சங்கத்தைச் சேர்ந்த வாலிபர்களின் தோற்றப் பொலிவைப் பார்த்ததுமே அவர்கள் எவ்வளவு தேசிய ஆர்வம் கொண்டவர்கள் என்பது நன்கு வெளியாயிற்று. பாரத நாடு புத்துயிர் பெறுவதற்கு மூல காரண புருஷரான சுவாமி விவேகானந்தரின் திருப்பெயரைச் சூட்டிக் கொண்டிருக்கும் இந்த வாலிபர் சங்கத்தார் அதற்குரிய முறையில் ஆ. தெக்கூரிலும் சுற்று வட்டாரங்களிலும் சமூகத் தொண்டுகள் புரிந்து வருவார்கள் என்று எதிர்பார்க்கலாம் அல்லவா!

''ஆ. தெக்கூர் என்ற
ஊர் ஒன்றிருக்குதாம் — அதன்
அருமை பெருமை உரைத்தற்
கரியதாம்! — ஆ! ஆ!''

என்று தமிழகத்தில் பலரும் பாடக்கூடிய காலம் விரைவில் வரும் என்று எதிர்பார்க்கிறேன்.



உங்களுக்கு
இருவித
போஷாக்கு அவசியம்
நீடித்த, திடமான ஆரோக்கியத்திற்கு
நோயை எதிர்க்க
SCOTT'S Emulsion
ஸ்காட்ஸ் எமல்ஷன்
ஒவ்வொரு தேக்கரண்டியிலும்
ஆரோக்கியம் நிறைந்திருக்கிறது
விநியோகஸ்தர்கள்:-
இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிட்.
கல்கத்தா-பம்பாய்-மதராஸ்-புது
டெல்லி-கான்பூர்-கொச்சின்




## 8. அதிசய விருந்தாளிகள்

"சிர்ர்! சர்ர்!"

"கிளிங்! கிளிங்!"

வாளோடு வாள் உராய்ந்தன. 'டக் டக்' என்று கத்திமேல் கத்தி மோதும் போது சப்தித்தன; 'டணார் டணார்' என்று ஒலித்து அந்த வனப் பிரதேசத்தையே அதிரச் செய்தன. வெற்றி, தோல்வி தெரியாமல் வாள்போர் நடந்தது.

அடேடே! ராஜா யாரோடு இவ்வளவு கடுமையாகச் சண்டை போடுகிறான்! ஜான்ஸி ராணி லக்ஷ்மிபாய் மாதிரி அவனோடு எதிர்த்து நின்று சரிநிகர் சமானமாகப் போர் புரியும் அந்த அழகிய வீரப் பெண்மணி யார்?

ஆகா! அந்தப் பெண்மணி கௌசல்யா அல்லவா! இது என்ன விபரீதம்! உயிருக்குயிராக நேசிக்கும் கௌசல்யாவிடமா ராஜா வாள்போர் புரிகிறான்?

"கௌசல்யா, சபாஷ்! ரொம்பப் பிரமாதம்! வாள் எடுத்து உன்னுடன் போர் புரிய யாராலும் ஆகாது; இன்று இத்துடன் போதும்!" என்றான் ராஜா.

"ராஜா, உங்கள் பாராட்டெல்லாம் அப்புறம் இருக்கட்டும். கத்திச் சண்டையில் உங்களுக்கு இணை நீங்கள்தான். மின்வெட்டுப்போல் நீங்கள் கத்தியைச் சுழற்றும் லாகவம் என்னை மெய்மறக்கச் செய்கிறது. உங்கள் வீரத்தையும் தீரத்தையும் பார்க்கும்போது எனக்குக் கையில் கத்தியைத் தொடவே கூச்சமாயிருக்கிறது. கம்பீர சௌந்தர்யம் குடிகொண்டிருக்கும் உங்கள் முகத்தை ஒரு தடவை நிமிர்ந்து நேருக்கு நேர் பார்த்து விட்டால், உங்களுடன் போர் புரியும் எண்ணமே போய் விடுகிறது. நான் என்ன செய்யட்டும்? நீங்கள் வேண்டுமென்றே எனக்காக விட்டுக் கொடுத்து, என்னை வானளாவப் புகழ்ந்து தள்ளுகிறீர்கள் என்று எனக்குத் தோன்றுகிறது!" என்றாள் கௌசல்யா.

"இல்லை, கௌசல்யா! உனக்கு யார் அப்படிச் சொன்னது?" என்று கேட்டான்.

"யாராவது வந்து சொல்ல வேண்டுமா? உங்களோடு சண்டையிடும் எனக்குத் தான் அது நன்றாய்த் தெரிகிறதே! கடுமையான கத்திச் சண்டைக்கு மத்தியில் திடீர் என்று நீங்கள் சண்டையை நிறுத்திவிட்டு என்னையே பார்க்கிறீர்கள். பிறகு என் வெட்டுக்களையெல்லாம் இலேசாகத் தடுத்துக் கொண்டே பின் வாங்க ஆரம்பிக்கிறீர்கள். என் கத்தி வீச்சுகளைச் சமாளிக்க முடியாமற் போய்விட்ட மாதிரி பாசாங்கு செய்கிறீர்கள்!" என்றாள் கௌசல்யா, பொய்க் கோபத்துடன்.

ராஜா 'ஹஹ்ஹ, ஹஹ்ஹ, ஹா' என்று காடே எதிரொலியிடும்படி சிரித்தான்.

"கௌசல்யா, கோபித்துக் கொள்ளாதே! நான் உன் வாள் வீச்சுகளுக்குப் பயப்படவில்லை. உன் விழிகளின் பார்வை வீச்சுக்குத்தான் பயப்படுகிறேன். சண்டையிடும்போது உன் கண்களைச் சந்தித்து விட்டால் என்னால் மேலும் சண்டை போட முடிவதில்லை! அவ்வளவுதான்."

"சரி, போனால் போகிறது. இனிமேல் என் கண்களைப் பார்க்காமல் கத்தி வீச்சுக்களைக் கவனித்துச் சண்டை போடுங்கள்!" என்று கூறிக் கலகலவென்று சிரித்தாள் கௌசல்யா.

"ஆகா, இனிமேல் ராணியின் உத்தரவுப்படியே நடந்து கொள்கிறேன்!" என்றான் ராஜா மிகவும் பணிவாக.



மலர்ந்திருந்த கௌசல்யாவின் முகம் சட்டென்று வாடி விட்டது.

"சந்தோஷமா யிருக்கும் சமயத்தில் அந்தப் பெயரை என்னத்துக்காகச் சொல்கிறீர்கள்? எனக்கு வர வர ராஜா ராணி படத்தைப் பார்த்தால் கூடக் கோபம் கோபமாக வருகிறது!" என்று மிகவும் வருத்தத்துடன் சொன்னாள் கௌசல்யா.

"கௌசல்யா, விளையாட்டுக்காகச் சொன்னேன்! கோபித்துக் கொள்ளாதே, அது இருக்கட்டும். உண்மையிலேயே வாள் வித்தையில் நீ நல்ல தேர்ச்சி யடைந்து விட்டாய். இனிமேல் உனக்குச் சொல்லித் தருவதற்கு அதில் ஒன்றும் இல்லை!" என்றான் ராஜா.

"ஆனாலும் தினந்தோறும் நாம் வாள் போர்ப் பயிற்சியை நடத்தி வர வேண்டும், இல்லையா?" என்றாள் கௌசல்யா.

"ஆமாம். அது நியாயம்தான். மேலும் நாம் இருவரும் சந்தித்துப் பேசுவதற்கு இந்த யுத்தப் பயிற்சி மிகவும் சௌகரியமா யிருக்கிறது!" என்றான் ராஜா.

இந்தச் சமயம் வானத்தில் 'துடும், துடும்' என்று பயங்கரமாக இடி இடித்தது. காற்று கானகத்து மரங்களை யெல்லாம் அலைத்துக் கொண்டு மிகவும் பலமாக அடிக்க ஆரம்பித்தது. மரங்களின் அடியில் விழுந்திருந்த சருகுகளெல்லாம் உயரப் பறந்து நாலாபுறங்களிலும் சிதறின. கரிய பெரிய மேகங்கள் வானத்தில் வேகமாகச் சூழ்ந்து எங்கும் இருளைப் பரப்பின.

"கௌசல்யா, புறப்படு. உம். சீக்கிரம். பெரிய மழை வந்து கொண்டிருக்கிறது. முதலில் உன்னைக் கொண்டு போய் வீட்டில் சேர்த்து விடுகிறேன்!" என்று ராஜா மிகவும் பரபரப்புடன் கூறினான்.

கௌசல்யா புறப்படத் தயாரானாள். அடுத்த நிமிஷம் அந்தக் கடுங் காற்றைப் பொருட்படுத்தாமல் ஒரு குதிரை ராஜாவையும் கௌசல்யாவையும் தாங்கிக் கொண்டு காட்டு வழியில் பறந்தது.

கௌசல்யா அவள் வீட்டு வாசலில் இறங்கினாள். வானத்தில் மேகங்கள் பெரிய மழைக்குப் பலமான முஸ்தீபு செய்து கொண்டிருந்தன.

"கௌசல்யா, நான் நாளைக்கு உன்னைப் பார்க்கிறேன். மழை பலமாகப் பிடித்துக் கொள்ளும்போல் இருக்கிறது. நீ உள்ளே போ. அம்மாவிடம் சொல்லு!" என்று சொல்லிக் கொண்டே ராஜா குதிரை மேல் தாவி ஏறினான்.

ராஜா வீட்டுக்குப் போய்ச் சேருவதற்குள் கடும் மழையும் காற்றும் கலந்து அடிக்க ஆரம்பித்தது. மழையின் வேகம் அந்த ஊரையே வெள்ளத்தில் அமிழ்த்திவிடும் போல் இருந்தது.

சொட்டச் சொட்ட நனைந்து ராஜா வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான். குதிரையைக் கொண்டு போய்க் கொட்டிலில் கட்டி விட்டு வீட்டுக்குள் வந்தான்.

ராஜா வீட்டுக்குள் நுழைந்தபோது அவனுக்கு ஓர் அதிசயம் காத்துக் கிடந்தது. உயர்ந்த சாதிக் குதிரைகள் இரண்டு வீட்டு வாசல் முன் தாழ்வாரத்தில் கட்டியிருந்தன. ராஜா, வந்தவர்கள் யாரா யிருக்கும் என்ற யோசனை செய்து கொண்டே உள்ளே நுழைந்தான்.

கூடத்தில் விரித்திருந்த பாயில் இரண்டு கம்பீரமான புருஷர்கள் உட்கார்ந்திருந்தனர். அவர்கள் தாடியுடன் மேலே சால்வை போர்த்துக் கொண்டு வேறு தேசத்தைச் சேர்ந்தவர்கள் மாதிரி தோன்றினர்.

ராஜாவைக் கண்டதும் உபாத்தியாயர் நித்தியானந்தம், "வா, அப்பா ராஜா! நல்ல மழை பிடித்துக் கொண்டுவிட்டதே, நீ எங்கே அகப்பட்டுக் கொண்டு விட்டாயோ என்று இத்தனை நேரம் ரொம்பக் கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன். நல்ல வேளை, நீ வந்து விட்டாய்! இவர்கள் இன்று நம் வீட்டுக்கு வந்திருக்கும் அதிதிகள். கொஞ்ச நேரத்துக்கு முன்னால் தான் மழைக்காக இங்கே வந்தார்கள்!" என்று சொல்லிவிட்டு, ராஜாவை அவர்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்.

பிறகு, அன்று இரவு நித்தியானந்தத்தின் வீட்டில் அவர்களுக்கு ஒரு விருந்து நடந்தது. விருந்து முடிந்து எல்லோரும் பேசிக் கொண்டிருந்தார்கள். ராஜா தூக்கம் வந்துவிடவே போய்ப் படுத்துக் கொண்டான். வந்தவர்கள் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தனர்.

ராஜா தூக்கம் கலைந்து எழுந்து உட்கார்ந்தான். மழை நின்று 'ஜில்'லென்ற குளிர்ந்த காற்று வீசிக் கொண்டிருந்தது.

நித்தியானந்தமும் விருந்தாளிகளும் பேசிக் கொண்டிருந்த பேச்சுக்கு இடையில் தன்னைப் பற்றிய பேச்சு அடிபடுவதை அவன் கவனிக்கஆரம்பித்தான். (தொடரும்)

# மாதர் சேமிப்பு வாரம்

**15-3-1953 முதல் 21-3-1953 வரை**

பணத்தைச் சேமித்து உங்கள் வருங்கால வாழ்க்கையைச் சுபிக்ஷமடையச் செய்யுங்கள்

★

**தேசிய சேமிப்பு ஸ்டாம்புகளையும் தேசிய சேமிப்பு பத்திரங்களையும் வாங்குங்கள்**

---

**தாய் நாடு வாழ்க என்று கோஷமிடுங்கள்!**

"இரத்தத்துக்கு இரத்தம்!"—ஸத்யானந்தர் கர்ஜித்தார். "வந்தே மாதரம்" என்று கோஷித்தனர் ஸந்தானர்கள். வாள்கள் மின்னின! குதிரைகள் வெறி பிடித்துத் தாவிக் குதித்தன! குதிரைப் படையின் குளம்புகள் கடகட வென்று சப்தித்து, கீழே விழுந்து கிடந்த மண்டை ஓடுகளின் மேல் மிதித்து நொறுக்கின. இவை யெல்லாம் இருநூறு வருஷங்களுக்கு முன்னால்.



**பிலிம்ஸ்தானின்**

# ஆனந்த மடம்

**தமிழ் & ஹிந்தி**

பிருத்விராஜ், பாரத்பூஷன், கீதாபாலி, பிரதீப், ரஞ்சனா நடித்தது

**தமிழ்** 13-3-53 முதல் நடைபெறுகிறது

| | | |
|---|---|---|
| அசோக் & பாரத் | ... | மதராஸ் |
| ஸாகர் & பாரத் | ... | பெங்களூர் |
| மயிலன் | ... | கொழும்பு |

மற்றும் தமிழ்நாடு முழுவதும்

எதிர்பாருங்கள்!

**ஹிந்தி**

| | | |
|---|---|---|
| ஜம்ருத் & ஸெலக்ட் | ... | ஹைதராபாத் |
| மனோஹர் | ... | செகந்திராபாத் |

மற்றும் பல இடங்களிலும்

விவரங்களுக்கு: **ஸ்ரீநிவாஸ் பிக்சர்ஸ் சர்க்யூட்**

தந்தி: ஸ்ரீநிவாஸா - தபால் பெட்டி நெ. 94, பெங்களூர் ஸிடி - போன்: 3095

---

# எம். ஏ. என். டீஸல் ஜெனரேடிங் செட்டுகள்

66 கிலோவாட்ஸ் 100 கிலோவாட்ஸ் 133 கிலோவாட்ஸ் கொண்ட டீஸல் ஜெனரேடிங் செட்டுகள் ஏராளமாகக் கைவசம் உள்ளன.

**விலை மற்றும் இதர விவரங்களுக்கு விண்ணப்பிக்கவும்**

## எஸ்கார்ட்ஸ் (ஏஜண்ட்ஸ்) லிமிடெட்

**தபால் பெட்டி நெ. 1876 - - மதராஸ்**

---

Prince DLH.

PE. 212



திரைக் கதையிலே
ஒரு புதுமை...

அலுப்பு சலிப்புத்
தட்டாமல்
பார்க்கக்கூடிய
புதுமாதிரியான
நவீனம்...

ஜெமினியின்

# மிஸ்டர் சம்பத்

(ஹிந்தி)

இப்பொழுது

சென்னை வெலிங்டனில்

வெற்றியுடன் நடைபெறுகிறது

தினசரி 3 காட்சிகள் : 3, 6-15, 9-30

# மார்ஷல் ஸ்டாலின்

**ஜெயமணி**

“எங்கிருந்து வருகிறாய்?” என்று தாயார் பிள்ளையைப் பார்த்துக் கேட்டாள்.

“தெருவில் இருந்து வருகிறேன்” என்று பதில் அளித்தான் பையன்.

சிறிது நேரம் கழித்துப் பையன் தாயாரிடம் சொல்லிக் கொள்ளாமலேயே வீட்டி லிருந்து புறப்பட்டான்.

இதைப் பார்த்த தாயார் கோபத்துடன் “எங்கே போகிறாய்?” என்று கேட்டாள்.

“தெருவுக்குப் போகிறேன்” என்று பளிச் சென்று கூறினான் பையன்.

இருபத்து நாலு மணி நேரத்தில் பெரும் பகுதியையும் பையன் தெருவிலேயே கழித் தான். சிறுவனை வீட்டில் காண்பதே அரி தாகி விட்டது தாயாருக்கு.

செருப்பு தைத்து ஜீவனம் செய்யும் பரம ஏழைக் குடும்பத்தில் பிறந்ததுடன், மிகச் சிறு வயதிலேயே தந்தையை இழந்துவிட்ட தால், பையனுக்கு வீட்டு வாழ்க்கை வேம் பாகிவிட்டது.

போதாக் குறைக்கு, பையனின் விருப்பத் துக்கு விரோதமாக அவன் தாயார் அவனை மதக் கல்வி சாலைக்கு அனுப்பி வைத்தாள். தன் மகன் ஒரு பாதிரியாக விளங்க வேண்டும் என்பது அவளது விருப்பம்.

தன்னுடைய ஜீவனத்துக்காகவும் மகனு டைய ஜீவனத்துக்காகவும் தாயார் பாடுபட்டு உழைக்க வேண்டியிருந்தது. அவள், செல் வந்தர்களுக்கு ரொட்டி சுட்டுக் கொடுத்தும், அவர்களுடைய துணிகளைச் சலவை செய்தும் அற்பத் தொகை சம்பாதித்து வந்தாள்.

பையனுக்குப் பத்தொன் பது வயது ஆயிற்று. அவன் அரசியல் கட்சியில் சேர்ந்து ஆர்ப்பாட்டம் செய்யத் தொடங்கினான். எனவே, அவனை ‘அடங் காப் பிடாரி’ என்று கூறி, மதப் போதகாசிரியர்கள் பள்ளிக்கூடத்தி லிருந்து விலக்கி விட்டார்கள்.

பிறகு அவன் ஒரு காரி யாலயத்தில் குமாஸ்தா வாகச் சேர்ந்து வேலை பார்த்து வந்தான். தன் னுடைய இரகசியப் புரட்சி அலுவல்களுக்குக் குமாஸ்தா வேலை குறுக் காக நின்றதால் அவன் அதி லிருந்தும் விலக நேர்ந்தது. அதன் விளைவாக அவனுக் குக் கையில் காசு இல்லை; சாப்பிட உணவில்லை. கடைசியில்-இரக்கம் கொ ண்ட அவனது நண்பர்கள் உணவு கொண்டு வந்து கொடுத்து அவனைக் காப்பாற்ற வேண்டியிருந்தது.

* * *

சரித்திரமே கண்டிராத வகையில் இரு பது கோடி மக்களின் ஏகமனதான அன்பு, ஆதரவு, பக்தி விசுவாசத்துக்குப் பாத்திர ரான ருஷ்ய சர்வாதிகாரி ஜோசப் ஸ்டாலி னின் வாழ்க்கை மேலே குறிப்பிட்ட விதம் தான் ஆரம்பமாயிற்று!

ஸ்டாலின் ருஷ்ய சர்க்காரின் தலைமைப் பதவியை ஏற்ற பின் அவரைப் பல பிரபல நூலாசிரியர்கள் பேட்டி கண்டது உண்டு. அவர்களில் சிலர் ஸ்டாலின் பால்ய வாழ்க் கையைப் பற்றி அவரைக் கேள்வி கேட்டனர். “சிறு வயதில் பெற்றோர்களால் துன்புறுத்தப் பட்டதால் தானே நீங்கள் மனம் கசந்து அவர் களை வெறுத்துப் புரட்சிக்காரராக மாறினீர் கள்?” என்பதுதான் அவர்களுடைய கேள்வி.

“என் பெற்றோர்களை நான் வெறுக்கவே இல்லை. மார்க்ஸ் கொள்கையால் ஆகர்ஷிக் கப் பட்டு நான் புரட்சிக்காரனாக மாறினேனே யன்றி, அதற்கு வேறு காரணம் எதுவும் இல்லை” என்று ஸ்டாலின் பதில் கூறினார்.

ஸ்டாலினின் தீவிர அரசியல் வாழ்க்கை அவரது இருபத்திரண்டாவது வயதிலிருந்து ஆரம்பமாயிற்று. அதாவது 1901-ம் வருஷம் அவர் இரண்டாயிரம் தொழிலாளர்களுடன் தெருவில் ஊர்வலம் சென்றபோது, போலீ சார் அதைக் கலைத்தனர். அப்போது பலருக்கு உயிர்ச்சேதம் ஏற்பட்டது.



பதினெட்டு வயதில் ஸ்டாலின்

அதன் சம்பந்தமாக ஜார் சர்க்கார் அதிகாரிகள் பல ரைக் கைது செய்தனர். ஆனால் ஸ்டாலின் மாத் திரம் அப்போது அவர்கள் கையில் அகப்படாமல் தப்பி, கருங்கடல் கரையில் உள்ள படூம் என்ற நக ருக்கு ஓடி விட்டார். அதி லிருந்து பல மாதங்களுக் குப் பிறகே போலீசார் அவரைக் கண்டு பிடித்துக் கைது செய்ய முடிந்தது.

அதன் பின் அவர் மீது நடந்த வழக்கில் அவரை மூன்று வருஷ காலத்துக்கு ஜார் சக்கரவர்த்தி சர்க் கார் அதிகாரிகள் சைபீரி யாவுக்கு நாடு கடத்தி விட்டார்கள்.

அதிலிருந்து பல வரு ஷங்கள் வரையில் சிறையி லிருந்து தப்புவதும், மறு படியும் போலீசாரிடம்

சிக்கிக் கொள்வதுமாக அவரது வாழ்க்கை நடந்து வந்தது. சிறையிலிருந்து தப்பியபின் ஸ்டாலின் பல் வேறு பெயர்களுடன் தலை மறைவாக இருக்க நேர்ந்தது.

* * *

ஸ்டாலினின் உண்மையான பெயர் ஜே. வி. ஜுகார்ஷ்விலி என்பதாகும். ருஷ்யப் புரட்சிக்காரர்கள் ஒவ்வொருவருக்கும் புனை பெயர் உண்டு. அதற்கிணங்க ஜுகாஷ்விலிக்கு 'ஸ்டாலின்' என்ற பெயர் ஏற்பட்டது.

ஸ்டாலின் என்ற வார்த்தைக்கு 'எஃகு மனிதர்' என்று பொருள். ஸ்டாலினுக்கு இந்தப் பெயர் எவ்வளவு பொருத்தமானது என்பதைச் சொல்ல வேண்டியதில்லை!

இளமையிலேயே ஸ்டாலின் முதலியோரை ஆகர்ஷித்த ருஷ்ய சமுதாய ஜனநாயகக் கட்சி, போல்ஷிவிக் பிரிவு என்றும் மென்ஷிவிக் பிரிவு என்றும் இரண்டாகப் பிரிந்தது. அப்போது ஸ்டாலின் லெனினைத் தலைவராகக் கொண்ட போல்ஷிவிக் பிரிவில் சேர்ந்து கொண்டார். அதிலிருந்து அவர் லெனினை விட்டுப் பிரியவே இல்லை.

1907-ம் ஆண்டில் பர்லின் நகரிலே போல்ஷிவிக் கட்சியினரின் இரகசிய மகா நாடு லெனின் தலைமையில் நடந்தது. அதில் ஸ்டாலினும் முக்கிய பங்கெடுத்துக் கொண்டார். 1912-ல்தான் ஸ்டாலின் போல்ஷிவிக் கட்சியின் தலைமைக் கமிட்டியில் அங்கம் வகிக்கலானார். அதிலிருந்துதான் ஸ்டாலின் அரசியல் ஏணியில் வெகு வேகமாக மேலே செல்லத் தொடங்கினார்.

* *

1917 மார்ச் மாதம் ஜார் சக்கரவர்த்தி வீழ்ச்சியுற்ற போது, வெகு தொலைவில் உள்ள சைபீரியா மூலைக்கு ஸ்டாலின் நாடு கடத்தப்பட்டிருந்தார். மேற்படி புரட்சிக்குப் பிறகு சகல அரசியல் கைதிகளும் விடுதலை அடைந்தனர். அதை அனுசரித்து ஸ்டாலினுக்கும் விடுதலை கிடைத்தது.

அச்சமயம் லெனினும் நாடு கடத்தப்பட்டு ஸ்விட்ஜர்லாந்தில் இருந்தார்.

ஜார் சக்கரவர்த்தியின் வீழ்ச்சிக்குப் பிறகு ருஷ்யாவில் அலெக்ஸாண்டர் கெரன்ஸ்கி தலைமையில் மிதவாத சர்க்கார் அமைக்கப்பட்டது. (அலெக்ஸாண்டர் கெரென்ஸ்கி இன்றும் ருஷ்யாவில் ஜீவ தசையுடன் இருந்து வருகிறார்.)

ஜார் சக்கரவர்த்தியின் வீழ்ச்சிக்குப் பிறகு ஏற்பட்ட கெரென்ஸ்கி சர்க்கார் லெனினையும் அவரது கட்சியைச் சேர்ந்த பிரமுகர்களையும் கைது செய்ய முற்பட்டனர். கட்சிப் போட்டியும் பொறாமையுமே அதற்குக் காரணம். அச்சமயம் லெனின் மேற்படி சர்க்கார் கையில் அகப்பட்டிருந்தால் அவரது உயிருக்கும் ஆபத்து ஏற்பட்டிருக்கலாம். ஆனால், அப்போது அத்தகைய ஆபத்து எதுவும் நேராமல் லெனினைக் காப்பாற்றியவர் ஸ்டாலின்தான். இதன் பயனாக லெனினுக்கும் ஸ்டாலினுக்கும் இருந்து வந்த நட்பு இன்னும் பன்மடங்கு அதிகமாயிற்று.

எனவே, 1917 நவம்பர் மாதப் புரட்சியில் போல்ஷிவிக் கட்சி வெற்றி பெற்றதும் ஏற்பட்ட லெனின் சர்க்காரில் ஸ்டாலினும் இடம் பெற்றார். அதே சர்க்காரில் லியோன் டிராட்ஸ்கியும் மந்திரி பதவி ஏற்றார்.

1918ல் ருஷ்யாவில் கோரமான உள்நாட்டுப் போர் மூண்டது. போல்ஷிவிக்காரர்களும் முடியரசுக் கட்சியினரும் பரஸ்பரம் மோதிக் கொண்டனர். அப்போது ஸ்டாலின் போல்ஷிவிக் படைகளுக்குத் தேவையான உணவுப் பொருள்கள் கிடைக்கும்படி செய்வதில் வெற்றி பெற்றார். அத்துடன் அவர் டிராட்ஸ்கியின் அனுமதி பெறாமல் பல இராணுவ அலுவல்களையும் மேற்கொண்டார்.

அப்போது டிராட்ஸ்கி இராணுவ மந்திரியாக இருந்ததால், அவருக்கும் ஸ்டாலினுக்கும் பரஸ்பரம் போட்டியும் பொறாமையும் ஏற்பட்டன. அந்தப் போட்டியும் பொறாமையுமே ஸ்டாலின் மேலோங்குவதற்கும் டிராட்ஸ்கி கொலையுண்டு இறப்பதற்கும் காரணமாக அமைந்தன.

ருஷ்யாவின் உள்நாட்டுப் போரில் போல்ஷிவிக் கட்சியினரே வெற்றி பெற்றார்கள். ஆனால் அந்த வெற்றியின் பலனை அனுபவிப்பதற்குள் லெனின் நோய் வாய்ப்பட்டார்.

ஸ்டாலின், டிராட்ஸ்கி போன்ற தமது சகாக்களிடையே குமுறி வரும் புகைச்சலைக் கண்டு லெனினின் மனம் புழுங்கியது. அவர்களுக்குள் சமரசம் ஏற்படுவதற்கான முறைகளைக் கைக்கொள்ள லெனின் விரும்பினார். அந்த நோக்கத்துடன் அவர் ஸ்டாலினைத் தமது கட்சியின் பொதுக் காரியதரிசியாக நியமித்தார். அந்த நியமனமே போல்ஷிவிக் கட்சியின் பிளவுக்கு மூலகாரணமாயிற்று என்று கூறப்படுகிறது. ஸ்டாலின் மேற்படி முக்கியமான பதவியை ஆயுதமாக வைத்துக் கொண்டு மற்றத் தலைவர்களை மிஞ்ச விடாமல் தாம் உயர்ந்த பதவியைக் கைப்பற்றியதாகவும் சொல்லுகிறார்கள்.

அது எப்படியாயினும், ஸ்டாலின் தம்முடைய இணையற்ற திறமையினால், மகா வல்லமை பொருந்திய ருஷ்யாவின் முடிசூடா சக்கரவர்த்தியாக விளங்கினார் என்பதில் சந்தேகமில்லை.

அவரது தலைமையின் கீழ் ருஷ்யா பல ஐந்து வருஷத் திட்டங்களையும் பத்து வருஷத் திட்டங்களையும் வெற்றிகரமாக நிறைவேற்றித் தொழில் துறைகளில் இன்று அகில உலகமும் பிரமிக்கும்படியான முன்னேற்றத்தை அடைந்திருக்கிறது.

ஹிட்லரின் நாசகரமான இரண்டாவது உலக மகா யுத்தத்தில் ருஷ்யா பெற்ற வெற்றி மார்ஷல் ஸ்டாலின் வாழ்க்கைக்கே சிகரமாக விளங்குகிறது.

# அவன் ரசிகன்

பீஷ்மன்

அந்தியின் மங்கலொளியும் அணைந்து போய், வெளியில் இருட்டு பரவத்தொடங்கி விட்டது. விளக்கைப் போட்டு விட்டு நாற்காலியில் வந்து மறுபடியும் உட்கார்ந்து கொண்டேன். எதிரே மேஜை மீது தயாராக அடுக்கி வைக்கப் பட்டிருந்த வெள்ளைக் கடிதாசிகள் மின்சார ஒளியில் என்னைப் பார்த்து நகைத்தன. கதை எழுதும் முஸ்தீப்புகளுடன் மாலை ஐந்து மணிக்கு உட்கார்ந்தேன். ஆயிற்று, மணி ஏழு ஆகப்போகிறது. இன்னும் ஒரு வரி எழுதிய பாடாயில்லை.

"என்ன, சிருஷ்டி கர்த்தாவே! உங்கள் படைப்புக்குச் சாயங்காலவேளைதான் கிடைத்ததா...?" என்று என் பின்னாலிருந்து அறிமுகமான குரல் ஒலித்தது.

சிந்தனைச் சுழலின்று விடுபட்டுப் பின்னால் திரும்பிப் பார்த்தேன். கையில் தோல் பையுடன் அவருக்கே உரிய தனிப்பட்ட நகைப்புடன் நண்பர் பாலு நின்றார்.

'இனிமேல் எழுதினாற் போலத்தான்!' என்று மனசுக்குள் முனகிக் கொண்டாலும் "வாங்கோ, ஸார்!" என்று வாய் அவருக்கு வரவேற்பளித்தது.

"பூஜை வேளையில் கரடி புகுந்த மாதிரி இருக்கா...?" என்று கேட்டுக் கொண்டே எதிர் நாற்காலியில் வந்தமர்ந்தார் பாலு.

"இங்கே வரணும் என்ற நினைப்போடு மத்தியானம் இரண்டு மணிக்கே வீட்டை விட்டுப் புறப்பட்டேன், ஸார்! ஆனால், நான் எதிர்பாராத விதமாக வழியிலே கொஞ்சம் தாமதிக்கும்படி ஆகிவிட்டது. அதனாலும் பரவாயில்லை! ஒரு ரஸமான சம்பவத்தைத் தெரிந்து கொள்ள முடிந்தது!" நண்பரின் பீடிகை பலமாக இருந்தது.

"அது என்ன ஸார், ரஸமும் குழம்பும்?" என்றேன் நான்.

"எங்கள் சங்கீத சபாக் காரியதரிசி சங்கரை உங்களுக்குத் தெரியுமோ? அந்த ஆசாமி நேற்று சாயங்காலம் 'நான் எங்கே போகிறேனென்று எனக்கே தெரியாது! என் வாழ்க்கை எங்கேனும் சௌகரியமாய் இருக்கும். இங்கேயிருந்து கலையின் வாழ்க்கைக்கு பங்கம் செய்யக் கூடாது என்றுதான் புறப்பட்டுப் போகிறேன்' என்று என்னவோ எழுதி வைத்து விட்டு ரயிலேறி விட்டான். இங்கே வரும்போதுதான் எனக்கு விஷயம் தெரிந்தது." பையிலிருந்து வெற்றிலைச் சிவலை எடுத்துப் போட்டுக் கொள்ளத் தொடங்கினார் நண்பர்.

சங்கீத சபைக் காரியதரிசி சங்கரை எனக்கு நேரிலே நல்ல பரிச்சயம் கிடையாதாயினும் ஆளை ஓரிரண்டு முறை பார்த்திருக்கிறேன். நல்ல வாட்ட சாட்டமான தேகம். ஒட்டுச் சிவப்பு. படிந்த கிராப்புடன் எட்டு முழ வேஷ்டியும் ஜிப்பாவுமாய்த்தான் எப்போதும் தோன்றுவார். நல்ல 'குஷி'ப் பேர்வழி கூட! அவருக்கு என்ன வந்தது திடீரென்று?

"அவர் கலைக்கு அப்படி என்ன ஸார், பங்கம் செய்துவிட்டார்?" என்று கேட்டேன்.

"அவசரப்படுகிறீரே! முழு விஷயத்தையும் சொல்ல வேண்டும் என்றுதானே அங்கேயிருந்து வந்திருக்கிறேன்!" என்று சொல்லி எழுந்து சென்று வெற்றிலைச் சாற்றை வெளியே உமிழ்ந்துவிட்டு வந்து உட்கார்ந்தார் நண்பர்.

அவர் சொல்வதைக் கேட்பதற்கு என்னைத் தயார் செய்துகொண்டு சௌகரியமாய் உட்கார்ந்தேன்.

நண்பர் தொடங்கினார்:

★

சரஸ்வதி சங்கீத சபை எங்கள் ஊரில் ஆரம்பமாகி அப்போது இரண்டு வருஷம் ஆகி யிருந்தது. அந்த வருஷம்தான் சங்கர் காரியதரிசியாக ஆகியிருந்தான். சபையின் கலை வளர்ச்சியும் அப்போதுதான் பிறந்தது—என்றுகூடச் சொல்லலாம்.

சரஸ்வதி பூஜையின்போது சபாவில் நடந்த சங்கீதக் கச்சேரி இந்த எண்ணத்தைத்தான் எல்லோர் மனத்திலும் நன்றாக விதைத்தது. அப்படி யொன்றும் பிரசித்தமான சங்கீத வித்வானோ பிரபல பாடகியோ வந்து அன்று பாடிவிடவில்லை. எங்களூரிலேயே பிறந்து வளர்ந்து பெரியவர்களான குமாரி காந்தம்—கனகம் இருவரின் அரங்கேற்றக் கச்சேரிதான் அது. ஆயினும், அன்றுவரை எங்கள் சபையில் அதைப்போன்ற அற்புதச் சங்கீதக் கச்சேரிகள் நடந்ததே யில்லை என்றுதான் எல்லோரும் பாராட்டினார்கள். குழைவு கலையாத, கொஞ்சல் மறையாத இளமையின் குயில் குரலிலே அவர்கள் இருவரும் சேர்ந்து பாடும் போதும் சரி, காந்தம் தனியே ராக விஸ்தாரத்தில் ஆழ்ந்த போதும் சரி, சபை பிரமித்து ஒருமைப்பட்டுத்தான் போயிற்று.

இயற்கையாகவே நல்ல ராக ஞானம் படைத்த சங்கர் காந்தம் இழைக்கும் ராக ஆலாபனையில் தன்னை இழந்து விட்டான். சுயமாகக் காந்தம் எழுப்பும் ராகவிஸ்தாரங்கள் அவனை மெய்சிலிர்க்கச் செய்தன.

அன்று கச்சேரி முடிந்து வந்தனோபசாரம் கூறும் கட்டம் வந்தபோது, சங்கர் உணர்ச்சிப் பெருக்கில் அவர்களின் சங்கீத மேதையைக் குறித்து ஒரு பிரசங்கமே செய்து விட்டான்.

அன்றைய அவர்களின் அரங்கேற்றக் கச்சேரியைப் புகழ்ந்து பத்திரிகைகளெல்லாம் பாராட்டின. அவர்களே எதிர்பாராத வகையில்—அதன் பின் 'எங்கு நோக்கினும் காந்தம்—கனகம் சகோதரிகளின் கச்சேரி' என்ற நிலைகூட வந்து விட்டது.

காந்தமும் கனகமும் உடன் பிறந்த சகோதரிகளில்லை. காந்தத்தின் சிற்றப்பா சின்ன வயதிலேயே தன் மகள் கனகத்தை விட்டு விட்டு மறைந்து போனார். ஆகவே கனகம்-காந்தத்தின் வீட்டிலேயே தான் வளர்ந்து

பெரியவளானன். ஒருவருக்கொருவர் தோற்றத்தில் கூட வித்தியாசம் கண்டு பிடிக்க முடியாது. அதைப் போலவே சங்கீதமும் அவர்களிருவரிடமும் பாரபட்ச மில்லாமல் சரணடையவில்லை. குரலினிமையும் சாதகத் திறமையும் நிறைந்திருந்தாலும் கனகத்திற்கு, காந்தத்தின் சுயமான ராக ஞானம் இல்லை தான். இயல்பாகவே ராகத்தின் நெளிவு சுளிவுகளுக்குத் தன் உள்ளத்தை வளைத்துக் கொடுக்கும் ரஸிகன் சங்கருக்குக் காந்தத்தின் இந்த ராக ஞானம் மிகவும் பிடித்துப் போயிற்று. புதிய புதிய பாணியில் அவள் ஒவ்வொரு ராகத்திற்கும் கொடுக்கும் மெருகில் அவன் உலகையே மறந்து போவான்.

ஒன்று சொல்ல மறந்து விட்டேனே! சபையில் நடந்த அவர்களின் அரங்கேற்றக் கச்சேரியின் பின், சங்கர், காந்தம், கனகம் குடும்பத்தில் ஒருவனாக ஆகிவிட்டான்.

இருந்தாலும், விளையாட்டுப் போக்காக ஒரு நாள் நான் அவனிடம் சொல்லி வைத்தேன்.

" சங்கர், உனக்கோ வயசு இருபத்தைந்து ஆகிறது. காந்தம், கனகம் இரண்டு பேரும் நல்ல பருவத் துடிப்பில் மலர்ந்த பெண்கள். கடைசியில் ஏதாவது காதல் போட்டியில் கொண்டு விட்டுவிடப் போகிறது!"

அவன் அழகாகச் சிரித்தான்.

" அதெல்லாம் உங்கள் கதையிலே. பாலு! வாழ்க்கையிலே அப்படியெல்லாம் ஒன்றும் நடக்கிறதில்லை. மேலும் எனக்கு அவர்களிடத்திலே அந்த மாதிரி ஈடுபாடு இல்லையே அப்பா!" என்று சொல்லிவிட்டான் அன்று.

அதன்பின் ஒரு மாதம் கழித்துத்தான் அவனை மறுபடியும் சந்திக்க முடிந்தது.

"என்னப்பா, ஆளைக் காண்கிறதே யில்லையே?" என்றேன் நான்.

சங்கர் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்.

" காந்தத்தின் சங்கீதம் எப்படி யிருக்கு?"

" காந்தத்தின் சங்கீதம், சங்கீதத்தின் காந்தம் எல்லாம் ஒரே காந்த மயமாக இருக்கிறது, பாலு!"

சங்கர் ஒரு வழியாய் இளமையின் பாச வலையில் சிக்கிவிட்டான் என்று தான் நினைத்தேன்.

" கதையிலே நடக்கிற சமாசாரம் எப்படி சங்கர்? வாழ்க்கைதான் கதை."

இப்பொழுது சங்கர் என்னை எதிர்த்துப் பேசவில்லை. சிரித்து விட்டுப் போய்விட்டான்.

அதன் பின் சில சமயங்களில் அவன் சொன்னவற்றிலிருந்து கதையின் முழு உருவும் எனக்குக் கிடைத்தது.

நாளுக்கு நாள் முன்னேறி வரும் காந்தத்தின் புதிய ராகக் கற்பனைகளில் சங்கர் தன்னையே அர்ப்பணித்துக் கொண்டு விட்டான். ஆரம்பத்தில், காந்தம்-கனகம் இருவருடனும் பொதுப் படையாகச் சர்ச்சை செய்து கொண்டிருந்த அவன், காந்தத்துடன் தனிப்பட்ட முறையில் செய்யும் சர்ச்சைகளில் தன்னை அதிகமாக ஈடுபடுத்திக் கொண்டான்.

ஆனால், அதே தருணத்தில் கனகத்தின் மனத் தளத்திலே புதிதாய்ப் பருவ உணர்ச்சிகள் பாச உருப்பெற்று வளர்ந்து கொண்டிருந்தன. சங்கர் ஏற்கெனவே நல்ல அழகும் வலிவான உடலும் கொண்டவன். அவன் பேச்சின் குழைவில் நண்பர்களே மயங்கித் திணறுவார்கள். கனகம் அதில் தன்னை இழந்து போனதில் வியப்பில்லை அல்லவா...?

அவன் மனத்திலே இந்தப் புதிய உணர்ச்சி, இளமை ஊட்டிய புதிய பாசம் பிறந்த போதுதான், சங்கர் காந்தத்தின் ராகக் காந்தத்திலேயே ஒரேயடியாக ஒட்டிக் கொள்ளத் தொடங்கினான். கனகத்தின் இதயத்தில் கிளர்ந்து கொண்டிருக்கும் இந்த மாறுதலை அவன் புரிந்து கொள்ளவேயில்லை.

ஆசையோடு, தன் எதிரே வைக்கப்பட்டிருக்கும் வர்ணப் பொம்மையை எடுக்க ஓடி வரும் குழந்தைக்கு, அதன் கிட்டே அது நெருங்கும்போது யாரேனும் அந்தப் பொம்மையை எடுத்துக் கொண்டு ஓடிவிட்டால் என்ன ஏமாற்றம் ஏற்படக்கூடும்...? கனகம் அந்த உணர்ச்சியைத்தான் அப்போது அனுபவித்தான். ஆனால் துரதிர்ஷ்டவசமாகச் சங்கர் இதை ஒன்றையும் நினைத்துக் கூடப் பார்க்கவில்லை. காந்தமும் இதைப் புரிந்து கொள்ளாமற் போனதுதான் விஷயத்திற்கு இன்னும் சுருதி கூட்டியது போலாயிற்று.



"சங்கர் தங்கள் வீட்டுக்கு வரும்போதெல்லாம் தனிமையில் அவனுடன் சற்று நேரமாவது பேசிக் கொண்டிருக்க வேண்டும் என்று துடியாய்த் துடிப்பாள் கனகம். பெண்மைக்கே அணிகலனான வெட்கத்தையே விட்டு விட்டு, அவன் காந்தத்துடன் பேசிக் கொண்டிருக்கும்போது குறுக்கிட்டு, "என்ன ஸார், கனகம் என்று ஒருத்தி இருக்கிறதே மறந்து போச்சு போலிருக்கு! இந்தப் பக்கம்திரும்பிப் பேசக் கூட நேரம் கிடைக்கவில்லே!" என்று தன் இதயத்தைப் பிழிந்து குரலில் வடிப்பாள். சங்கர் அந்தப் பேச்சின் உள்ளே புதைந்து கிடக்கும் ஆசைக் கங்குகளைத் தெரிந்து கொள்ளாமல் வெகு சாதாரணமாய் அதற்கும் சிரித்து விடுவான்.

காரணம் இதுதான். ராக ஞானத்தின் மூலம் ஏற்பட்ட பிணைப்பில் பாச பந்தத்தையும் கட்டிக் காந்தத்தில் அவன் லயித்துப் போய் விட்டான். இந்தக் கண்ணாமூச்சி விளையாட்டில் 'கனகம்' என்ற ஆத்மாவை அவன் தரிசிக்கவே முடியவில்லை.

முயன்றிருந்தாலும் முடிந்திருக்குமோ என்பது சந்தேகம்தான். உலகில் 'கிட்டாதாயின் வெட்டென மற!' என்று கிளிப்பிள்ளைப் பாடம் ஒப்புவித்து விடுகிறோம். ஆனால் உண்மையில், ஆசைப்பட்ட பொருள் கிடைக்காமல் எட்டிப் போகும் போதுதான் அதைப் பற்றிப் பிடிக்கும் தீவிரம் நம் மனத்திலே வலுக்கின்றது. ஏமாற்றத்தின் எதிர்ப்பைச் சமாளித்து முன்னேறும் புரட்சி வேகம் ஆசைக்கு ஏற்படும்போது அதற்குத் தலை கால் தெரிவதில்லை. ஆவேசத்தில் அமைதியும் நிலைத்த சிந்தனையும் பிறக்க முடியுமா...?

கனகம் இத்தனை தர்க்கங்கள் புரிந்து கொண்டிருக்கவில்லை. தன் ஆசையைச் சொல்லக் கூடச் சந்தர்ப்பம் தர மறுத்துச் சங்கர் ஒதுங்கிக் கொண்டபோது கூட அவளுக்கு அவன் மீது வெறுப்பு ஏற்படவில்லை. இலக்காக்கிக் கொண்டன.

'அவருக்கு ராகத்தில் தனிப் பற்று இருப்பதைத் தெரிந்து கொண்டு எப்படியோ அவரை மயக்கி விட்டான்! ஒரே வீட்டில் அக்காளும் தங்கையுமாய் வாழ்ந்து பழகினால் மட்டும் போதுமா, என்ன? காந்தத்தின் சாகஸம் தான் எனக்குச் சத்துரு......!'

கனகத்தின் எண்ணங்கள் இப்படிப்பட்ட பாதையில் பறந்தன. சங்கர் தன்னையும் நேரத்தையும் மறந்து போய்க் காந்தத்துடன் சிரித்துப் பேசிக் கொண்டிருப்பதைப் பார்க்கும் போதெல்லாம் அவள் மனத்திலே குமுறும் ஏக்கம் காந்தத்தை அவள் தனிமையில் சந்திக்கும்போது பொறாமைச் சுடர் தெறிக்கும் வெறுப்பாய் எரிந்தது. நாளுக்கு நாள் அவள் மனத்திலே இந்தப் புகைச்சல் பெருகிப் பெருகி முடிவில் ஒரு நாள் 'அசுர சொரூபம் கொண்டு விட்டது.

தன் காரியத்தினால் விளையப் போகும் பலனைப் பற்றி அதன்பின் அவளுக்குச் சிந்திக்கும் திறனே அற்றுப் போய் விட்டது.

ஒரு நாள் மாலை ஆபீஸ் விட்டு வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தேன். ஒரு வாரத்துக்கு முன்பு நடந்த விஷயம் இது. தெரு விளக்குகள் இன்னும் ஏற்றப்படவில்லை.

எதிரே சோர்ந்த முகத்துடன் மந்த நடை போட்டுச் சங்கர் வருவது நிழல் போலத் தெரிந்தது. எப்போதும் உற்சாக வெள்ளத்தில் உலகை மறந்து நீந்திக் கொண்டிருக்கும் அவன் ஏன் இன்று இப்படி இருக்கிறான்?

குனிந்து கொண்டே ஏதோ யோசனையில் நடந்து வந்தவன் எதிரே நான் நிற்பதைக் கூடக் கவனியாமல் என்னைத் தாண்டி மேலே சென்றான்.

"சங்கர்!" என்றேன் உரக்க.

திடுக்கிட்டு நின்று திரும்பினான் அவன். புன்னகை செய்ய அவன் உதடுகள் முயன்று தோற்றுப் போயின. மெல்ல நடந்து என் அருகே வந்து நின்றான். அவன் முகத்தில் வேதனை கப்பிக் கவிந்திருந்தது.

"சங்கர், இது என்ன திடீரென்று?"

"பாலு, உன் வாக்கிலே சனிதான் இருந்திருக்க வேண்டும். அன்றைக்குச் சொன்னாயே, ஏதேனும் போட்டியில் கொண்டு விட்டுவிடப் போவதாக! போட்டியில் மட்டுமில்லை. பொறாமையிலும் கொண்டு விட்டு விட்டதப்பா!" என்றான் சங்கர்.

"தெளிவாகத்தான் சொல்லி விடேன்!" என்றேன்.

அவன் என்னையே உற்றுப் பார்த்தான். "பாலு, காந்தத்தின் ராக ஞானம் ஒரு காந்தம். அதன் முன்னே நான் இரும்புத் தூள் தான். ஆனால், கனகம் இதை இப்படி விபரீதமாக எடுத்துக் கொள்வாள் என்று நான் நினைக்கவேயில்லை, பாலு! எத்தனை அசட்டுத் தனமாக நடந்து கொண்டு விட்டாள்!" இதைச் சொல்லி விட்டு அவன் சற்று நேரம் தலை குனிந்து மௌனமாய் நின்றான்.



பிறருடைய வாழ்க்கை அனுபவங்களைக் கேட்க நமக்குக் கசக்கவா போகிறது? நானும் மௌனமாய் அவன் வாயையே பார்த்துக் கொண்டு நின்றேன். அவன் தொடர்ந்து பேசினான்:

''பாலு, காந்தத்துக்கும் எனக்கும் முடிச்சுப் போட்டுத் தன் சொந்த சகோதரியைப் பற்றியே இழிவாக ஒரு பெண் வதந்தி கிளப்பி விடுவாள் என்று எதிர் பார்க்க முடியுமா...? கனகத்தின் பொறாமை அவ்வளவுக்கு முற்றிப் போய் இருக்கிறதப்பா! தன் வயசுத் தோழிகள் மூலம் காந்தத்தின் போக்கைப் பற்றி மனம் போன போக்கில் அவதூறு கிளப்பி விட்டிருக்கிறாள். காட்டுத் தீக்கும் வதந்திக்கும் ஒரு பொறி போதாதா? காந்தத்தின் குடும்பத்தைப் பற்றி உனக்குத் தெரியுமே! அத்தனை கண்ணியமான குடும்பம். அவர்கள் வீட்டில்......''

சங்கர் நிறுத்தினான் பேசினான்.

''நேற்று காந்தம்தான் எல்லா விவரங்களையும் கூறினாள். நான் அவர்கள் வீட்டுக்குப் போவது கூட இனிமேல் உசிதமில்லை. ஆனால்: காந்தம் 'இதற்கெல்லாம் பயப்பட நாம் என்ன கோழையா?' என்கிறாள். 'மடியில் கனம் இருந்தால்தானே வழியில் பயம்?' என்று அவள் லேசாகக் கேட்டு விடுகிறாள். அவ்வளவு எளிதாக ஊர் வாயைச் சொல்லிவிட முடியுமா......?''

அவன் மறுபடியும் ஏதோ யோசனையில் ஆழ்ந்து போனான். அன்று அவனைச் சமாதானப்படுத்தி அனுப்பப் பட்டபாடு மிகவும் சிரமமாகி விட்டது. வாழ்க்கை எப்படி எந்தக் கோணத்தில் கதையாக மலர்கிறது பார்த்தீர்களா?...

இந்த இடத்தில் நிறுத்திக் கொண்டார் பாலு. ஏதோ கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டாற் போலிருந்தது எனக்கு.

''அப்புறம்......?'' என்று ஒரே வார்த்தையில் அவரை முடுக்கினேன்.

''அப்புறமென்ன......? ஊரிலே கிளம்பி விட்ட இந்த வதந்தியைக் கேட்டுக் காந்தத்தின் பெற்றோர்கள் கலங்கிப் போய் விட்டார்கள். அங்கே போக வேண்டாம் என்று அவன் நினைத்தாலும் காந்தத்தின் மனத்துக்காக, சங்கர் ஒரு நாள் அதன்பின் போயிருந்த போது......உள்ளே காந்தத்தின் தாயார் உரக்கப் பேசிக் கொண்டிருந்தாள்.

'''காந்தம், உன் பாட்டும் கூத்தும் போதுமடியம்மா! நீ இனிமே கச்சேரி பண்ணி ஒண்ணும் கிழிக்க வேண்டாம். பேசாமெ வீட்டிலே அடைந்து கிட!'

''சங்கரின் ரஸிக நெஞ்சில் பளாரென ஓர் அறை விழுந்த மாதிரி இருந்தது. அவன் தயங்கவில்லை.

மடமடவென உள்ளே போய்கின்றான்.

'''மாமி, ஊர் வாய்க்குப் பயந்து சங்கீதத்துக்குக் கதவடைச்சு விடாதீர்கள்! நான் ஊரை விட்டே போய்விடப் போகிறேன். காந்தம்-கனகம் சங்கீதத்தை மட்டும் வீணாகக் கெடுத்து விடாதீர்கள்...!'

''அவனது உணர்ச்சிப்பெருக்கைக் காந்தத்தின் தாயினால் புரிந்து கொள்ள முடிந்தது. ஏனெனில், அவளே அவர்களது உறவைப் பற்றி எந்த விதமான சந்தேகமும் கொண்டதில்லை. ஆனால், ஊர் வாய் இருக்கிறதே!

''காந்தம் பிரமிப்பில் கண் கலங்கி நின்றாள்.

''சங்கர் குனிந்தவாறே மறு கணம் வெளியேறி விட்டான். இன்று மத்தியானம் நான் புறப்பட்டு வரும்போது என்னிடம் கொடுக்கச் சொன்னதாகச் சங்கரின் மாமாவின் மகன் வழியில் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். அதைப் படித்து முடித்ததும் என்னால் உடனே மேலே நடக்க முடியவில்லை.

''சங்கரைப் பற்றிய நினைப்பின் பளுவில் சற்று நேரம் அங்கேயே ஒரு வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்து விட்டேன்......'' என்று பாலு அந்தக் கதையைச் சொல்லி முடித்தார்.

பிறகு பாலு தம்முடைய தோல் பையிலிருந்து ஒரு கடிதத்தை எடுத்தார்.

''நீங்களும் தான் அதைப் படித்துப் பாருங்களேன்!'' என்று அந்தக் கடிதத்தை எடுத்து என்னிடம் கொடுத்தார்.

''அன்புள்ள பாலு,

நேற்று நான் மறுபடியும் காந்தத்தின் வீட்டிற்குப் போயிருந்தேன். நான் இன்னும் இங்கே இதே ஊரில் தங்கி யிருந்தேனானால், வதந்தியின் வாய்க்குப் பயந்து காந்தத்தின் சங்கீத விஸ்தாரத்துக்குத் தடை விழுந்து விடும் எனத் தோன்றியது. ஆகவே, ஊரை விட்டே புறப்பட்டு விட்டேன்.

எனக்குக் காந்தத்தின் சங்கீத மேதையில் காதல்! அந்த மேதை அடங்கிப் போவதை நான் விரும்ப முடியாது. சங்கீத சபையின் பொறுப்பை நீ நிர்வகித்து நடத்து. அது பற்றிய விவரங்கள் சபாவில் கிடைக்கும். நான் வருகிறேன்.

அன்பன்

சங்கர்''

கடிதம் இவ்வளவுதான் பேசியது.

''மற்ற விவரங்களெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரிந்தது?'' என்று கேட்டேன்.

''நானே இந்தக் கடிதத்துடன் காந்தத்தின் வீட்டிற்குப் போயிருந்தேன். காந்தமும், கனகமும் இப்போது வருந்திக் கண்ணீர் வடிக்கிறார்கள். சங்கரின் ரஸிக மனத்தைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை!'' என்றார் பாலு.

''நான் புரிந்து கொண்டு விட்டேன்!''

''அப்பொழுது ஆபத்துத்தான்!'' என்று சொல்லி வழக்கம்போல நகைத்தார் பாலு.

என்னிடம் ஒரு விஷயம் கிடைத்து விட்டால் அதன் கதி என்ன என்று அவருக்குத் தெரியாதா......?

வெள்ளைக் காகிதம் மைவண்ணம் பெற்றது.

# என் பேத்தி

வேங்கடலட்சுமி

மேஜைமீது குவித்து வைக்கப் பட்டிருந்த மனுக்களை யெல்லாம் ஒவ்வொன்றாகப் பார்த்து ஒரு பக்கமாக அடுக்கிக் கொண்டிருந்தார் வாணி அச்சுக்கூடத்தின் முதலாளியான ஸ்ரீமான் கணபதி. வாணிபுரத்திலேயே பெரிய பணக்காரரான அவருக்குச் சொந்தமாகத் துணிஆலைகளும், எண்ணெய் மில்களும் நாலைந்து இருந்தன. வாணி அச்சுக்கூடத்தில் சுமார் இருநூறு ஆட்கள் வேலை செய்தனர். இவ்வளவு ஸ்தாபனங்களையும் திறமையாக நிர்வகித்துக் கொள்ளை கொள்ளையாகப் பணம் குவித்துக் கொண்டிருந்த ஸ்ரீமான் கணபதி, இப்பொழுது அச்சுக் கூடத்தின் ஒரு சிறிய வேலைக்குச் சரியான மனுதாரரைப் பொறுக்க முடியாமல் திண்டாடிக் கொண்டிருந்தார்.

அச்சுக்கூடத் தொழிலாளிகளின் பிள்ளைகளுக்காக ஒரு சிறிய பள்ளிக்கூடம் வைத்து நடத்திக் கொண்டிருந்தார் அவர். சுமார் எழுபது பிள்ளைகள் படித்து வந்த அந்தப் பள்ளிக்கூடத்துக்கு ஒரு உபாத்தியாயினி தேவையா யிருந்தது. அதற்காகப் பத்திரிகைகளில் விளம்பரப்படுத்தி யிருந்தார் கணபதி. நூற்றுக் கணக்கில் வந்து குவிந்து கிடந்த விண்ணப்பங்களிலிருந்து யாரைப் பொறுக்குவது என்று யோசித்துக் குழம்பிக் கொண்டிருந்த சமயம், மெல்லக் கதவைத் திறந்து கொண்டு ஆபீஸ் அறைக்குள்ளே நுழைந்தான் அவருடைய வேலையாள் நந்துராம்.



கணபதி வேலையில் மூழ்கிக் கிடக்கும் சமயம் அவரை அண்டக்கூட யாரும் பயப்படுவார்கள். அதிலும் அவருடைய அந்தரங்க விடுதியில் அழைப்பில்லாமல் அவருடைய மனைவிகூட நுழைய மாட்டாள். ஆனால் கிழவனான நந்துராம் மட்டும் அதற்கு விதிவிலக்கு. அவன் வடக்குத் தேசத்தைச் சேர்ந்தவன். கணபதி பிறப்பதற்கு முன்னாலிருந்தே அவருடைய தந்தையிடம் வேலையா யிருந்தவன். தமிழ் நன்றாகப் பேசுவான். இக்காரணங்களினால் அவனுக்கு அந்தக் குடும்பத்தினரிடம் அளவற்ற சலுகையுண்டு. கொஞ்சம் கூடப் பயமில்லாமல் கணபதியிடம் அவன் பேசுவது யாவருக்கும் வியப்பா யிருக்கும். குடும்பம் என்று எதுவும் அவனுக்குக் கிடையாது. யாராவது அதைப் பற்றி அவனிடம் கேட்டு விட்டால் — 'எப்பவோ ஒரு காலத்தில் குடும்பம், குழந்தை எல்லாம் இருந்ததுங்க. இப்போ ஒண்ணும் கிடையாது. இந்தக் குடும்பந்தான் என் குடும்பம்' என்று வெடுக்கென்று பதில் சொல்லி விடுவான். கணபதியைச் சிறு குழந்தையிலிருந்தே எடுத்து வளர்த்தவனாகையால் அவரிடம் காணப்படும். தப்புக்களைத் தயக்கமில்லாமல் அவரிடமே கூறி விடுவான், அவரும் அவனைக் கண்டித்துப் பேச மாட்டார்.

"என்னப்பா! இன்னுமா இந்த வேலை முடியவில்லை. அது கிடக்குது; உன்னைப் பாக்கணுமின்னுட்டு, ஒரு பொண்ணு வாசல்லே அரை மணியாகக் காத்துக் கிட்டுக் கெடக்குது; அழைச்சுக்கிட்டு வரட்டுமா!" என்று கேட்டான் நந்துராம். வியப்புடன் தலையைத் தூக்கினார் கணபதி—"என்னையா பார்க்கணும்! எதற்காக!" என்று கேட்டார்.

"என்னப்பா! சின்னப் பிள்ளையாட்டம் கேக்கிறியே! பேப்பரிலே போட்டுட்டு இப்படி இவ்வளவு மனுக்களிலேயும் ஒண்ணுகூடப் புடிக்காம தானே திண்டாடறே! அந்த வேலை விசயமாத்தான் உன்னை நேரிலேயே பார்க்க வந்திருக்குது அந்தப் பொண்ணு" என்றான் கிழவன்.

கையிலிருந்த மனுவைப் பார்த்தபடியே ஒரு நிமிஷம் யோசித்தார் கணபதி. பிறகு சட்டென்று எல்லாவற்றையும் மேஜையின் மீது வைத்தார். "அந்தப் பெண்ணை அழைத்து வா!" என்று உத்தரவிட்டார்.

நந்துராம் சட்டென்று வெளியில் போய் இரண்டு நிமிஷங்களுக்கெல்லாம் ஒரு யுவதியுடன் உள்ளே நுழைந்தான். விசேஷமான அலங்காரங்களின்றிச் சாதாரணமாகக் காணப்பட்ட அப்பெண் கணபதி உட்கார்ந்திருந்த மேஜைக்குச் சற்றுத் தூரத்திலேயே நின்றாள். மலர்ந்த புஷ்பம் போன்றிருந்த அவள் முகமும், மோதிரச் சுருள்களாக நெற்றியில் விழுந்து படிந்த கூந்தலும், அவளைத் தாம் எப்பொழுதோ ஒரு தரம் பார்த்திருப்பதை அவருக்கு ஞாபகமூட்டின. நெற்றியைச் சுருக்கிக் கொண்டு யோசித்தார் கணபதி. ஒன்றும் நினைவுக்கு வரவில்லை.

"உட்காரம்மா! உன் பெயரென்ன!" என்று அன்புடன் கேட்டார். அப் பெண்ணின் கரிய விழிகள் அவரை ஒரு தடவை நோக்கித் தாழ்ந்தன.

"எத்தனை பெரிய கண்கள்!" என அதிசயித்தார் கணபதி மனத்திற்குள்.

"உன் பெயரை நீ இன்னும் கூற வில்லையே!" என்று மீண்டும் ஞாபகப் படுத்தினார்.

"என் பெயர் கௌசல்யா" என்று கணீரென்று கூறினாள் அப்பெண்.

"நான் விளம்பரப் படுத்தியிருக்கும் வேலைக்காகத்தானே வந்திருக்கிறாய்!"

"ஆமாம்."

"ரொம்பச் சின்னவளா யிருக்கிறாயே, அம்மா! பள்ளிப் பிள்ளைகளைக் கவனித்துப் பாடம் சொல்லிக்கொடுக்க முடியுமா!"

"முடியும்."

உறுதி தொனித்த அவள் குரல் கணபதிக்கு வியப்பளித்தது. புன்சிரிப்புடன் அவளைப் பார்த்து, "நீயே ஒரு குழந்தையைப் போலிருக்கிறாயே!" என்றார். அவரை ஏறெடுத்துப் பார்த்தாள் கௌசல்யா.

"எனக்கு இருபதாவது வயது நடக்கிறது; எனக்குக் கீழ் நான்கு தம்பிகளும் மூன்று தங்கைகளும் இருக்கிறார்கள். அப்படியிருக்க நான் எப்படிக் குழந்தையாவேன்!" என்றாள்.

கணபதிக்கு அவள் கூறும் ஆணித்தரமான பதில் ஒவ்வொன்றும் ரொம்பவும் பிடித்துவிட்டது.

"உனக்கு அப்பா, அம்மா இல்லையா!"

"அப்பாவைத் தெரியவே தெரியாது. அம்மாவும் சமீபத்தில்தான் இறந்துவிட்டாள்" என்றாள்.

"அப்படியானால் நீ இப்பொழுது தனியாகவா இருக்கின்றாய்!" என்று ஒரு வகையான பச்சாத்தாபத்துடன் கேட்டார் கணபதி.

"இல்லையே; என்னுடைய சித்தப்பாவும் சித்தியும் இருக்கிறார்கள்.—அவர்களுடைய குழந்தைகளைத்தான் என்னுடைய தம்பி தங்கைகளென்று சொன்னேன்" என்று கூறினாள் கௌசல்யா!

கணபதி மீண்டும் யோசனையில் லாழ்ந்தார். — "இந்தப் பெண் யாரைப்போலிருக்கிறாள்!— இவளுடைய பேச்சும் குரலும் நமக்கு மிகவும் பழக்கமானதாயிருக்கிறதே!" என்று மண்டையைக் குழப்பிக் கொண்டார். — ஒன்றும் விளங்கவில்லை. ...... கடைசியில் — "சுந்தரம்! இந்த அம்மாவை நம்முடைய பள்ளிக்கூடத்துக்கு அழைத்துக் கொண்டு போய்க் காட்டிவிட்டு அழைத்துக்கொண்டு வா" என்று கூறி விட்டு அவளைப் பார்த்து "இவனுடன் போய்ப் பள்ளிக்கூடத்தைப் பார்த்து விட்டு வா! உன்னால் அந்த வேலையைச் செய்ய முடியுமென்று தோன்றினால் அந்த வேலையை உனக்குக் கொடுக்கிறேன்" என்றார். பளபளத்த விழிகளுடன் அவருடைய முகத்தை உற்று நோக்கிய அப்பெண் கன்னம் குழியும் சிரிப்புடன் அவரை நோக்கி, "பார்த்து விட்டு வரவேண்டிய அவசியமே யில்லை. — முடிந்தாலும் முடியாவிட்டாலும் அந்த வேலையை நான் செய்யத்தான் வேண்டும். இல்லாவிட்டால் வீட்டில் என் தம்பி, தங்கைகள் எல்லோரும் பட்டினி கிடக்க நேரிடும்" என்றாள்.

கணபதி திடுக்கிட்டார். தங்களுடைய குடும்ப நிலைமையை அவ்வளவு பளிச்சென்று அவள் கூறியது அவருக்கு வியப்பை அளித்தது. இந்தப் பெண்ணின் துணிகரமும் பளிச் பளிச்சென்று அவள் கொஞ்சங்கூடத் தயங்காமல் பேசும் விதமும் மீண்டும் மீண்டும் அவளைப்பற்றி அவர் மனசில் எழுந்த பழைய நினைவுக்கு ஊக்க மளித்தன.

"எப்பொழுது! எங்கே!"...அவர் மனத்தில் ஒரு பெரும் புயல் தோன்றியது. அப்புயலின் நடுவே பளிச்சிட்டு மறையும் மின்னல் கொடி போன்ற ஒரு நினைவு தோன்றி மறைந்தது.

இப்பொழுது பெரிய பணக்காரரான ஸ்ரீமான் கணபதி அப்பொழுது பணக்காரரல்ல; இறக்கும்பொழுது கடனில் மூழ்கிக் கிடந்த அவர் தகப்பனார் ஒரு செல்லாக் காசு கூட வைக்கவில்லை. சொற்பப் படிப்பேயிருந்த கணபதிக்கு மேற் கொண்டு படிக்கவும் வசதியில்லை. என்ன செய்வதென்று யோசித்தார். அவருடைய யோசனை காரணமாக, இன்னும் இரண்டொரு நண்பர்களுமாகச் சேர்ந்து, முழுதும் வடக்கத்தியர்களே நிறைந்த வாணிப்பூரில் ஒரு சிறிய மதராஸி ஹோட்டல் ஆரம்பித்தனர். காப்பியும் தோசையும் இட்டிலியுமாக ஏகக் கிராக்கி வந்துவிட்டது. — மதராஸி பட்சணங்கள் சாப்பிடுவதற்கு மராட்டியர்கள் போட்டி போட்டனர். — ஹோட்டலில் வியாபாரம் பெருகியது. — கணபதியின் கையிலும் பணம் புரள ஆரம்பித்தது.

ஒருநாள் காலை ஓட்டலின் மாடியில் உட்கார்ந்திருந்த கணபதியின் எதிரில் பன்னிரண்டு வயதுப் பையனொருவன் நின்று கொண்டிருக்கிறான். சுருண்ட கிராப்புத் தலை. பெரிய கண்களில் எவரையும் லட்சியம் செய்யாத பார்வை. அரை நிஜாரும் வெள்ளை ஷர்ட்டு மணிந்திருந்தான். —ஓட்டல் ஸர்வர் பையன்களில் ஒருவன் அவன்.

"முரளி!......உன்னைப் பற்றி நான் கேட்டது நிஜம்தானா! என்று கோபத்துடன் கேட்டார் கணபதி.

சிறிதும் அச்சமில்லாமல் அவரை ஏறெடுத்துப் பார்த்தான் அவன்.

"ஆம், நிஜம்தான்!"

கோபமும் அதிசயமும் கலந்த குரலில். "எதற்காக இந்த வேஷம் போட்டாய்!" என்று கேட்டார் கணபதி.

"என்ன செய்வது! வீட்டில் அம்மாவும் தம்பிகளும் பட்டினி. அப்பா எங்கேயோ ஓடிப்போய் விட்டாராம். பீகார் பூகம்பத்தின்பொழுது எங்கள் குடும்பம் சிதறிவிட்டது. அப்பா இருக்கும் வரையில் நாங்கள் சாப்பாட்டுக்குக் கஷ்டப்படவில்லை. சித்தப்பா இருக்கிறார். ஆனால் அவரால் ஒன்றும் முடியாது. படுத்த படுக்கையாயிருக்கிறார். இந்த நிலையில் அம்மாவும்-சித்தியும் இரண்டொரு வீட்டில் வேலை செய்கிறார்கள். உங்களுடைய ஓட்டலில் வேலைக்கு ஆள் வேண்டுமென்றும், நிறையச் சம்பளமும் தந்து வயிறு நிறையச் சாப்பாடும் போடுவார்களென்றும் தெரிந்தவர்கள் வீட்டில் சொன்னார்கள். ஆனால்



பெண்ணாய்ப் பிறந்த எனக்கு இந்த வேலை எப்படிக் கிடைக்கும்? — எப்படி யெப்படியோ யோசித்ததில் இந்த யுக்தி தோன்றியது. அம்மாவும் சித்தியும் முதலில் ஒப்புக் கொள்ளவே இல்லை. ஆனால் வீட்டில் கஷ்டம் காரணமாகக் கடைசியில் ஒப்புக் கொண்டார்கள். உடனே போய்த் தலைமயிரை வெட்டி விட்டுக் கொண்டு ஒரு காக்கி நிஜாரும் சட்டையும் வாங்கிக் கொண்டு வந்தேன். இங்கே வந்தவுடன் நீங்கள் வேலையும் கொடுத்தீர்கள்" என்று வெகு தைரியத்துடன் சொல்லி விட்டு அவரை நிமிர்ந்து பார்த்தாள் அச்சிறுமி.

ஒரு நிமிஷநேரம் வரையில் அயர்ந்துபோய்ச் சிலையாயிருந்தார் கணபதி. சற்றுப் பொறுத்து, "உன் பெயரென்ன?" என்று கேட்டார்,

"துர்க்காபாய்!" என்றாள் அவள்.

"சரியான பெயர்தான். இப்பொழுது உன்னுடைய வேஷத்தை வெளிப்படுத்தியது யார்?"

கல கலவென்று களங்கமில்லாமல் சிரித்தாள் அந்தப் பொல்லாத பெண்.

"ஓட்டலில் ஜலம் நிரப்புகிறாரே, குப்பு மாமா! அவருக்கு நான் பெண்ணென்பது தெரியும். யாரிடமும் சொல்லாம லிருப்பதற்காக அவருக்கு அடிக்கடி ஏதாவது காசு கொடுப்பாள் சித்தி. இப்பொழுது இரண்டு மாசமாக வீட்டில் ஒரே கஷ்டம்; அதனால் குப்பு மாமாவுக்கு ஒன்றும் கொடுக்க முடியவில்லை. ஆகையினால் அவருக்கு ஒரே கோபம். உடனே உங்களிடம் வந்து உண்மையைச் சொல்லி விட்டார்" என்றாள்.

சற்றுப்பொறுத்து, "ஆமாம்; இனிமேல் நீ என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டார்.

"செய்வதென்ன! இனிமேல் நான் உங்களுடைய ஓட்டலில் வேலை செய்வதென்பதோ முடியாத காரியம். எனக்குச் சேரவேண்டிய சம்பளத் தொகையைக் கொடுங்கள், நான் போகிறேன்!"

"வேலை போய் விட்டால் கஷ்டம் அல்லவா!"

"ஆமாம். கஷ்டம்தான்; அதற்கு என்ன செய்வது!" என்றாள் அந்தப் பெண்.

"இரண்டு நாள்கழித்து என்னை வந்து பார், உனக்கு வேறு ஏதாவது வேலை செய்து வைக்க முடியுமா வென்று பார்க்கிறேன்" என்றார் கணபதி. தலையை அசைத்தாள் அவள்.

சம்பளத் தொகையை அவளிடம் எண்ணிக் கொடுத்து விட்டு மேலே ஒரு ஐந்து ரூபாயும் அவளுக்கு இனாமாகக் கொடுத்தார் கணபதி. அதை வாங்கிக் கொண்டு போனவள்தான். அப்புறம் அவளை அவர் காணவே யில்லை.

* * *

"என்னைத் தெரியவில்லையா, உனக்கு!"

"பேஷாய்த் தெரிகிறது!" — இதைக் கூறி விட்டுக் கலீரென்று சிரித்தாள் அவள்.

கணபதி வியப்புடன் அவளை நோக்கினார்.

ஆம், சந்தேகமேயில்லை. அதே சிரிப்பு, அதே குழிவிழும் கன்னங்கள், ஒருவரையுமே லட்சியம் செய்யாத விழிகளின் பார்வை.

"உன் பெயர் துர்க்கா பாய் அல்லவா!"

"ஊஹூம்;— கௌசல்யா."

"சரி, போகட்டும்; நாளைக்கு வந்து வேலையை ஒப்புக்கொள்ளு" என்றார் கணபதி.

ஒரு நிமிஷம் அவரை நன்றியுடன் நோக்கினாள் அவள். மறு கணமே அவளுக்கு உரித்தான சிரிப்புப் பொங்கி வந்துவிட்டது. "வருகிறேன்; ஆனால் நான் இப்பொழுது கௌசல்யா; அதை நீங்கள் மறக்கக் கூடாது" என்றாள்.

இப்பொழுது கணபதிக்கு சிரிப்பு வந்துவிட்டது.

"நீயும் ஆண் வேடத்தில் வரக்கூடாது!"

"இல்லை யில்லை" என்று சிரிப்பின் நடுவே உறுதி கூறினாள் அவள்.

சற்றுப் பொறுத்து மலர்ந்த முகத்துடன் வெளியே போன அவளைப் பார்த்து அச்சுக்கூடத் தொழிலாளிகள் பலவாறு பேசிக் கொண்டனர். நந்துராம் அவள் வீடு வரையிலும் போனான்.

மேஜைமீது கிடந்த மனுக்களை யெல்லாம் கிழித்துக் குப்பைக் கூடையில் போட்டு விட்டுச் சிந்தனையிலாழ்ந்தார் கணபதி.

படீரென்று கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான் நந்துராம். சுருக்கம் விழுந்த அவன் முகம் சந்தோஷத்தால் பிரகாசித்தது. "கண்டு பிடித்து விட்டேன் அப்பா!" என்றான்.

திடுக்கிட்டுப் போனார் கணபதி.

"கண்டு பிடித்து விட்டாயா! யாரை, அப்பா! எதை, எப்பொழுது!"

"அதுதான் அப்பா என் பேத்தி, பிள்ளை எல்லாரையும் பிஹாரிலே யிருந்து நான் வரும் போது எம் பெரிய பிள்ளை யிருந்தானே, அவனுடைய பொண்ணுதான்........." என்பதற்குள் கணபதி பொறுமை யிழந்தவராய், "நந்துராம்! நீ என்னத்தைப் பார்த்தாய்! எந்தப் பெண்! கொஞ்சம் விவரமாகச் சொல்லு!" என்றார்.

"உனக்கு எப்பவுமே கோபம் ஜாஸ்திதான். அதான் சொல்லிக் கிட்டேதானே வரேன்! அதுக்குள்ளே என்ன அவசரமோ! கொஞ்சம் மின்னே நான் இங்கே வந்து போகல்லே! அந்தப் பொண்ணுதான் என் பேத்தி துர்க்கா பாய்— அவனுடைய வீட்டுக்குப் போனபோது சின்னப் பிள்ளை, அவன் பெண்சாதி எல்லோரையும் பார்த்தேன். துர்க்காவுடைய அப்பாதான் என்னுடைய பெரிய பிள்ளை. அவனும் அவன் பெண்சாதி மட்டும் போயிட்டாங்களாம். என்னை என் மருமவள் அடையாளம் தெரிஞ்சிக்கிட்டது. இவ்வளவு நாழியா அங்கேதான் இருந்தேன்" என்று ஒரே மூச்சில் படபடவென்று சொல்லித் தீர்த்தான் நந்துராம்.

அதைக் கேட்டதும் கணபதிக்குத் தூக்கி வாரிப் போட்டது. சற்று நேரம் ஸ்தம்பித்து உட்கார்ந்திருந்தார். பிறகு, "நந்துராம், உன் பேத்தி ரொம்பப் பொல்லாத பெண். ஆறு வருஷத்துக்கு முன்னாலேயே, ஆண் வேஷம் போட்டுக் கொண்டு ஏமாற்றி, என்னிடமே வேலைக்கு இருந்தவள் அல்லவா! இப்பொழுது இன்னும் கெட்டிக்காரியாகத்தா னிருப்பாள்" என்று வியப்புடன் சொன்னார். கிழவன் பூரித்துப் போனான்.

மறுதினம் பகல் பத்து மணிக்கு வந்து சேர்ந்தாள் துர்க்கா.

உள்ளே நுழையும்போதே, "தாத்தாவை வேலைக்கு வரவேண்டா மென்று சொல்லி விட்டேன். அவருக்குப் பதில் என் தம்பி வருவான்" என்று தெரிவித்தாள்.

"என்னைக் கேட்காமல் நீயே தீர்மானித்து விட்டாய் போலும்; போகட்டும்; சாயந்திரம் அவனை வீட்டுக்கு வந்து போகச் சொல்லு. நீயும் பள்ளிக்கூடம் விட்டுப் போகும்பொழுது வந்து விட்டுப் போ" என்று சொன்னார் கணபதி.

"கண்டிப்பாய் வருகிறேன்" என்று கூறி விட்டு அங்கிருந்து கிளம்பினாள் துர்க்கா.

அவளை அதிசயத்துடன் நோக்கிய கணபதியின் அகக் கண்ணில் வெள்ளைச் சட்டையும் காக்கி நிஜாரும் அணிந்து சுருட்டைத் தலையுடன் கூடிய ஒரு அழகிய சிறுவனின் உருவம் எழுந்தது.

# 8 சுலபமான சக்தியுள்ள சிகிச்சைகள்

1. அஜீரணக் கோளாறுகளுக்கு
2. மலேரியா முதலிய ஜுரத்துக்கு
3. வயிற்றுக் கடுப்பு, காலராவுக்கு
4. ஜலதோஷம், இன்புளூயன்ஸா
5. இருமலுக்கு
6. எல்லாவித பிடிப்பு, வலிகளுக்கு
7. நரம்பு வியாதிகளுக்கு
8. இரத்த நோய்களுக்கு



டி. சேனின்

## மருந்து பெட்டி

அடிக்கடி மிகவும் அபாயகரமான வியாதிகளை உண்டாக்கும் அன்றாட சாதாரண உபாதைகளுக்கு ஓர் சிறந்த நிவாரணி. இந்த மருந்துப் பெட்டியில், எட்டுவிதமான மருந்துகள் அடங்கியுள்ளது. அவைகளைத் தனித்தும் சேர்த்தும் உட்கொள்ளலாம். விவரங்களடங்கிய குறிப்பு கேட்பவர்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

**PRICES**
Size 1. Rs. 3/- Size 3. Rs. 9/-
Size 2. Rs. 5/- Size 4. Rs. 17/-

J. & J. De Chane India

**J. & J. De Chane**
RESIDENCY ROAD-HYDERABAD-Dn

# "குரங்கு மார்க்கு"

கறுப்பு பற்பொடி

சகல பல் நோய்களுக்கும் சிறந்தது

## MONKEY BRAND

**BLACK TOOTH POWDER**



**NOGI & COMPANY**
87, CHINA BAZAAR ROAD, MADRAS-1

எல்லா பிரபல கடைகளிலும் கிடைக்கும்

---

## மிகவும் குறைந்த விலை!

வாட்டர் புரூப், ஷாக் புரூப் ஒவ்வொன்றும் 10 வருட உத்திரவாதம் எந்த மாடலுக்கும் ஒரே விலை.




| WATERPROOF | LENS SHAPE |
|---|---|
| 15 JEWELS 40/- | 15 JEWELS R/G 32/- |
| 17 JEWELS 50/- | 15 " SUPERIOR 35/- |

**பயனீர் வாட்ச் கம்பெனி**
தபால் பெட்டி நெ. 11428, கல்கத்தா - 6

---

## குறைந்த விலையில் பவுண்டன் பேனாக்கள்



| | | | |
|---|---|---|---|
| ஸ்வான் கோல்டு கிளிப் | ரூ. 14/- | கோல்டு கேப் | ரூ. 16/- |
| பிளாக் பேர்டு | ரூ. 13/- | ராஜா ஜெர்மனி | ரூ. 10/- |
| ஸ்டார் ஷார்ப் மாடல் | ரூ. 6/- | வின்னர் | ரூ. 5/- |

பார்க்கர் ஜூனியர் மாடல் (ஜப்பான்) ரூ. 7/-

**எச். டேவிட் அண்டு கம்பெனி**
தபால் பெட்டி நெ. 11424, கல்கத்தா - 6

# ஒவ்வொரு வருடமும் இந்த உபகண்டத்தில் 20 லக்ஷத்திற்கு மேலான ஜனங்கள் மலேரியாவினால் கொல்லப்படுகிறார்கள்

மலேரியாவினால் ஏற்படும் மரணங்கள் ஒருபுறமிருக்க இக்கொடிய வியாதி அதனால் பீடிக்கப்படுபவர்களைப் பலஹீனப்படுத்தி இதர வியாதிகள் தாக்குவதற்கு முன்பே கொன்றுவிடுகிறதென்பதைத் தெரிந்துகொண்டால் இந்த பயங்கரமான எண்ணிக்கை மேலும் முக்கியத்துவம் அடைகிறது. மலேரியாவின் பயம் எப்பொழுதும் உங்களைச் சுற்றியிருக்கிறது. ஏனெனில் அது உங்களுடைய சரீரத்தில் தொற்றிக் கொள்வதற்கு ஒரு கொசுக்கடியே போதும். நீங்கள் இந்த அபாயத்தை ஒருபொழுதும் அலட்சியம் செய்யக்கூடாது.

இப்பொழுது 'பாலுட்ரின்' மலேரியாவிலிருந்து உங்களுக்குப் பாதுகாப்பை அளிக்கிறது. ஒரே அணா விலையுள்ள ஒரு மாத்திரையை வாரம் ஒருமுறை உட்கொண்டு வந்தால், அது அந்த நோயை அணுகவிடாது. நீங்களும் உங்களுடைய குடும்பமும் வாரத்திற்கு, ஒருவருக்கு மிகக் குறைவான ஒரே அணா செலவில் மலேரியாவிலிருந்து உங்களைப் பாதுகாத்துக் கொள்ளலாம். அளவு முறைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**அபாயத்தின் சின்னங்களைக் கவனியுங்கள்:**

முதலில் குளிரால் நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். இதனால் உடம்பு முழுவதும் வியர்க்கும். தேகம் முழுவதும் வலி உண்டாகும். இந்த அறிகுறிகளை ஒருபொழுதும் அலட்சியம் செய்யாதீர்கள்—உடனேயே டாக்டரின் ஆலோசனையைக் கேளுங்கள். மலேரியா கண்டிருந்தால், 'பாலுட்ரின்' எப்படி உங்களுடைய ஜுரத்தை சில நாட்களில் நீக்குகிறது என்பதையும் எதிர்காலத்தில் மலேரியா உங்களை அணுகாமல் எப்படி பாதுகாப்பை அளிக்கிறது என்பதையும் அவர் சொல்லுவார்.

நம்பிக்கைக்குகந்த 'பாலுட்ரின்' மாத்திரைகள் சுத்தமான, தெளிவாகத் தெரியும் காகித உறைகளில் சுற்றப்பட்டு வருகின்றன. ஒரு மாத்திரை விலை ஒரே அணா தான்.



# 'பாலுட்ரின்'

## மலேரியாவை வீழ்த்துகிறது

## அளவுமுறை



சிகிச்சைக்கு: வயதானவர்களுக்கும் 13 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும் ஒரு மாத்திரை. 6லிருந்து 13 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு அரை மாத்திரை. 6 வயதிற்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு கால் மாத்திரை வீதம் தினந்தோறும் ஜுரம் குணமடையும் வரை கொடுக்கவும்.

பாதுகாப்பிற்கு: மேலே குறிக்கப்பட்ட அளவுகளை அனுசரிக்கவும். ஆனால் வாரம் ஒருமுறை அதே தினத்தில் சாப்பிட வேண்டியது.

எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு அதிக அளவு தண்ணீருடனோ அல்லது பாலுடனோ உட்கொள்ள வேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்திருங்கள்.

இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்.



# புத்திர பாக்கியம்

எஸ்.வி.எஸ

ராதை. முகுந்தனின் கரம் பிடித்த நாள் முதல் முகுந்தன் தினத்துக்குத் தினம் அதிர்ஷ்ட ஏணியில் ஏறிக் கொண்டிருந்தான். ஆம், கல்யாணமான ஐந்து வருஷத்துக்குள் அவன் வியாபாரம் பெருகியது; லாபமும் அளவு கடந்து கிடைத்து வந்தது. ஊரில் கொஞ்சம் நிலம் வாங்கினான். மாம்பலத்தில் பெரிய மனை வாங்கி சொந்தமாக வீடு கட்டிக் கொண்டான். ஒரு நல்ல புதுமாதிரி கார் கூட வாங்கினான். இப்படி எல்லாச் சௌகரியங்களும் செய்து கொண்டான். ஆயினும் ராதைக்கு மனசுக்குள் ஒருகுறை—தனக்கு ஒரு குழந்தை இல்லையே என்று. ராதைக்குக் குறை யென்றால் முகுந்தனுக்கு குறையில்லாமலா இருக்கும்? அவனுக்கும் எவ்வளவோ குறைதான்.

காசி முதல் ராமேசுவரம் வரை யாத்திரை போய் வந்தான். நாகப் பிரதிஷ்டை செய்தான். சில கோயில் சந்நிதிகளில், தங்கத் தொட்டில் கட்டுவதாகக் கூட வேண்டிக் கொண்டான். ஆயினும் அந்தத் தெய்வங்கள் கண் திறந்து பார்க்கவில்லை.

ஒருநாள் ஒரு குடுகுடுப்பைக்காரன் வந்தான். "அம்மா மனசுக்குள்ளே ஏதோ கவலை இருக்குது. அது அம்மா மனசை ரொம்பவும் அரிக்குது—குடுகுடு குடுகுடு" என்றான்.

"ஆமாமடாப்பா" என்றாள் ராதை.

"வீட்டிலே 'குவா! குவா!' என்று கத்த ஒரு குழந்தை இல்லையே என்ற கவலைதான் மனசைப் பிச்சுப் பிடுங்குகிறது" என்றாள்.

"அதுவேதான்! எனக்கு அந்தக் கவலை நீங்குமா?" என்று கேட்டாள்.

"நல்ல காலம் பிறக்குது; நல்ல காலம் பிறக்குது. மனக் கவலை நீங்கப் போகிறது! வீட்டிலே குழந்தை தவழ்ந்து குடுகுடுப் பாண்டி விளையாடப் போகுது" என்றான்.

"எனக்குத் தோணவில்லை. காசிக்குப் போய் வந்தாச்சு. ராமேசுவரத்துக்குப் போய் வந்தாச்சு. இன்னும் என்ன என்ன பரிகாரம் உண்டோ, அவ்வளவும் செய்து பார்த்தாச்சுது. ஆனால் குழந்தையைத்தான் காணோம். என்ன பாவம் செய்திருக்கிறேனோ?" என்று வருத்தப்பட்டுக் கொண்டாள் ராதை.

"அதெல்லாம் ஒன்றுமில்லை, நான் சொல்கிறபடி செய்யுங்க, அம்மா, அப்புறம் வீட்டிலே குழந்தை கொஞ்சிவிளையாடா விட்டால் என்னான்னு கேளுங்கம்மா?" என்றான்.

"என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?"

"ஒரு நட்டுமாங் கன்று வாங்கி, நட்டுத் தினம் தண்ணீர் விட்டு வாங்க, அம்மா! அது பூப்பூத்து, காயாகக் குலுங்குவதற்குள் உங்களுக்கும் ஒரு குழந்தை..." என்றான்.

என்ன காரணமோ தெரியவில்லை, ராதைக்கு அவன் கூறிய மொழிகள் மனசுக்கு ஒரு நிம்மதியையும், தைரியத்தையும் அளித்தன. உடனே வீட்டுக்குள் சென்று பெட்டியிலிருந்து ஒரு ரூபாய் நாணயத்தை எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தாள். அதைப் பெற்றுக் கொண்டு அவன் மகிழ்ச்சியுடன் வெளியேறினான். அதைக் கொடுத்ததில் அவனைவிட ராதை அதிக மகிழ்ச்சியுற்றாள்.

* * *

"என் கையால் தொட்டு நட்டால், மாங்கன்றின் ராசி எனக்கு வரும் என்று நினைத்தேன். ஆனால் என் ராசியல்லவா இந்த மாமரத்துக்கு ஏற்பட்டு விட்டது! நட்டு வருஷம் ஐந்தாகிறது. இன்னும் பூ விட வில்லையே!" என்று வருத்தப்பட்டாள் ராதை.

ஒட்டுமாஞ்செடி நன்றாக வளர்ந்திருந்தது. கப்பும் கிளையுமாக தழையப் படர்ந்து மாமரமாக வளர்ந்திருந்தது. ஆனால் ஏனோ தெரியவில்லை, வருஷம் ஐந்தாகியும் பூவிடவில்லை.

முருந்தன் விவசாயத் துறையில் ஈடுபட்டிருப்பவர்களை யெல்லாம், 'மாமரத்துக்கு என்ன செய்தால் பூ விடும்' என்று கேட்டு வந்தான். அவரவர்கள் தங்களுக்குத் தோன்றிய யோசனைகளை யெல்லாம் கூறினார்கள். அவற்றை யெல்லாம் காரியாம்சத்தில் செய்து பார்த்து விட்டான் அவன்.

அவற்றின் பலனாகத் தானோ என்னவோ ஐந்து வருஷத்துக்குப் பிறகு ஒரு வருஷம் பூ விட்டது. பங்குனி மாசம் மாமரம் முழுதும், செம்மண் நிறத்தில் பூ பூத்துக் குலுங்கியது. அதைக் கண்டு ராதை அப்படியே மனம் பூரித்துப் போனாள். தன் வயிற்றையும் ஒரு முறை தொட்டுப் பார்த்துக் கொண்டாள்!

ஆனால் என்ன ஏமாற்றம்! செடி முழுதும் பூத்திருந்த பூக்கள் ஒரு வாரத்தில் ஏனோ தெரியவில்லை. அப்படியே சாய்ந்து, உதிர்ந்து விட்டன! செடியில் ஒரு பூக்கூட நிற்கவில்லை; ஒரு பிஞ்சுகூட விடவில்லை!



இதைப் பார்த்த ராதையின் மனசு சோர்ந்து விட்டது. அவளால், இந்தக் காட்சியைப் பார்க்க முடியவில்லை. 'என்னுடைய தோஷம், நான் கையால் தொட்டு நட்ட தோஷம் இந்த மரத்தையும் படுத்துகிறதே' என்று ரொம்பவும் வருத்தப்பட்டாள்!

அதற்கடுத்த வருஷமும் மரத்தில் பூக்கள் தோன்றின. ஆனால் முந்தைய வருஷம் போல் அல்ல! கொஞ்சமாகத் தான் பூத்திருந்தன. அவையும், பிஞ்சாகப் பரிணமிக்காமல் உதிர்ந்து விட்டன.

எனவே, ராதை 'இனி இந்த மாமரம் காய்க்கப் போவதில்லை. தண்டமாகத்தான் நிற்கப் போகிறது எல்லாம் நம் பூஜா பலன் தான்!' என்ற முடிவுக்கு வந்து விட்டாள்.

* * *

அடுத்த வருஷம், மாசி பங்குனியில் அந்த மாமரம், ஏராளமாகப் பூத்துக் குலுங்கியது. ராதை, இந்தத் தடவை அதைக் கண்டு பூரிப்பு அடையவில்லை; சந்தோஷப்படவும் இல்லை.

"ஒரு பலனுமின்றி அப்படியே உதிர்ந்து போகப் போகின்றன! இந்த லட்சணத்தில் புஷ்பிப்பானேன்?" என்றுதான் நினைத்தாள்.

ஆனால் பதினைந்து நாட்களில் மரம் நிறையப் பச்சைப் பசேல் என்ற பிஞ்சுகள் குலுங்கின. ராதைக்குத் தான் காண்பது உண்மைக் காட்சியா அல்லது கனவுதானோ என்ற சந்தேகம் வந்து விட்டது! கண்களைக் கசக்கிக் கொண்டு பார்த்தாள்! வாஸ்தவத்திலேயே மரம் முழுதும் ஏராளமான பிஞ்சுகள் விட்டுக் குலுங்கிக் கொண்டிருந்தன.

அவளுக்கு அளவு கடந்த சந்தோஷம் ஏற்பட்டது. அந்தச் சந்தோஷத்தில், தன் வயிற்றைத் தொட்டுப் பார்த்துக் கொள்ள மறந்து போனாள். தான் மலடியாக இருப்பதைப் பற்றி மறந்து போய் விட்டாள். தான் 'மலடி' என்று பெயரெடுத்தாலும் பரவாயில்லை; தன் கையால் நட்ட மரம் மலட்டு மரம் என்று பெயர் எடுத்து விட்டால், அவள் உள்ளம் ஆறுது போயிருந்தது! மாமரம் மலட்டு மரமாக இராமல் தப்பிப் பிழைத்ததே! தன் கையால் நட்ட செடி, மலட்டுச் செடி என்ற அபவாதத்திலிருந்து தப்பியதே என்று பூரித்துப் போனாள்!

மறுபடியும் விதி குறுக்கிட்டது. ராதா, பாவம்! அவள் சந்தோஷப்படும் அடுத்த நிமிஷம் வருத்தம் வந்து அவளைக் கவ்வி விழுங்கவே பார்த்தது!

ஒருநாள் இரவு திடீர் என்று ஒரு புயல் அடித்தது. புயலில் மாபெரும் மரங்கள் சரிந்தன; கூரைகள் பறந்தன. கட்டிடங்கள் இடிந்து தரை மட்டமாயின!—என்றால் ராதையின் வீட்டு மாமரம் என்ன பாடு பட்டிருக்க வேண்டும்?

மரம், வேருடன் பறிக்கப்பட்டுக் காற்றில் பறந்துவிட்டதோ என்று நினைக்கத் தோன்றுகிறதல்லவா?—ஆனால் அப்படி யெல்லாம் ஒன்றும் நிகழ்ந்து விடவில்லை. மரம் காற்றில்

பறக்கவில்லை; மரத்திலிருந்த பிஞ்சுகள் எல்லாம்தான் உதிர்ந்து விட்டன!

இதைப் பார்த்த ராதை, கடவுள் தன்னை ரொம்பவும் சோதனை செய்வதாகக் கருதினாள்! அவளால் இந்த அதிர்ச்சியைத் தாங்க முடியவில்லை. பித்துப் பிடித்தவள் போல் நடமாடலானாள்! பத்தாவது நாள், அவளுக்கு ஒரு இடத்தில் உட்கார முடியவில்லை! தலையைச் சுற்றியது. வயிற்றை ஏதோ செய்தது. படுக்கையில் படுத்து விட்டாள்.

அவள் அறையிலிருந்து பார்த்தால், வெளியுலகம் நன்றாகத் தெரியும். அதுவும் அந்த மாமரம், ஜன்னல் வழியாக நன்றாகத் தெரியும்! ஆனால் அந்த மரத்தைப் பார்க்கும் போதே, அவளுக்கு வேதனை அதிகரித்தது. அதனால் ஜன்னல் கதவுகளை நன்றாக மூடி விட்டுப் படுத்துக் கொண்டாள்.

* * *

அன்று மாலை முகுந்தன் மனசில் அளவிறந்த உற்சாகத்துடன் வீட்டுக்குள் நுழைந்தான். ராதையிடம் என்ன என்னவோ சொல்ல வேண்டும் என்று திட்டம் வகுத்துக் கொண்டு உள்ளே நுழைந்தான். "ராதை! ராதை!" என்று கூப்பிட்டான். அவள் "உம், உம்" என்று குரல் கொடுத்தாளே தவிர எழுந்திருந்து வரவில்லை. ஆம், அவள் எழுந்திருந்து வரக்கூடிய நிலையிலா இருந்தாள்?

"எங்கேயிருக்கிறாய்? என்ன செய்கிறாய்?" என்று கேட்டுக் கொண்டே ராதையின் அறைக்குப் போனான்.

அவள் படுக்கையில் படுத்திருப்பதைப் பார்த்ததும் முகுந்தனுக்கு மிகவும் தூக்கி வாரிப் போட்டது.

"என்ன ராதை? உடம்புக்கு என்ன? என்ன செய்கிறது? ஏன் படுத்து விட்டாய்?" என்று கேள்விக்கு மேல் கேள்வி கேட்டான்.

"காலையிலிருந்து, மயக்கம் மயக்கமாக வருகிறது. உட்கார முடியவில்லை. நடக்க முடியவில்லை" என்றாள் ராதை.

முகுந்தன் அவள் நெற்றியைத் தொட்டுப் பார்த்தான். "உடம்பு அனலாகக் கொதிக்கிறதே! டாக்டரை அழைத்து வருகிறேன்" என்று புறப்பட்டான்.

"டாக்டரும் வேண்டாம்! ஒன்றும் வேண்டாம். எல்லாம் இரண்டு நாளில் உடம்பு சரியாகிவிடும்" என்றாள் ராதை.

முகுந்தனா சும்மா இருப்பவன்? உடனே டாக்டரை வரவழைக்க ஏற்பாடு செய்தான்.

டாக்டர் வந்தார். ராதையின் அறைக்குள் சென்று, அவள் உடல் நிலையைப் பரிசோதித்தார். பிறகு, "உடம்பு இப்படியிருக்கும் போது, கொஞ்சம்கூடக் காற்று வராமல் ஜன்னலை எல்லாம் சார்த்திக்கொண்டு படுத்திருக்கிறீர்களே? கதவை நன்றாகத் திறந்து விடுங்கள்!" என்று சொல்லித் தாமே ஜன்னல் கதவுகளைத் திறந்து வைத்துவிட்டு வெளியே போனார் டாக்டர்.

'ஜன்னல் கதவுகளைச் சார்த்தி வைத்ததற்குக் காரணம் சொன்னால் இந்த டாக்டருக்கு எங்கே புரியப் போகிறது!' என்று எண்ணிக் கொண்டே ஞாபகப் பிசகாக ஜன்னல் பக்கமாகத் திரும்பிப் படுத்துக் கொண்டாள் ராதை. அப்பொழுது, அவள் கண்கள் எதேச்சையாக மாமரத்தின் மீது சென்றது. ஆகா! என்ன ஆச்சரியம்!

அதே சமயம் வெளியே இருந்து டாக்டரின் பேச்சுக் குரல் கேட்டது: "மிஸ்டர் முகுந்தன்! உங்கள் மனைவிக்கு உடம்பு ஒன்றுமில்லை. நீங்கள் இன்னும் ஆறு ஏழு மாதத்தில் தகப்பனார் ஆகப் போகிறீர்கள். அவ்வளவுதான்!"

இதைக் கேட்ட ராதை அப்படியே மெய் புளகித்துப் போனாள்.

உடல் முழுதும் ஓர் பேர் ஆனந்தம் பரவியது. அவள் கண்களிலும் இரு துளி கண்ணீர் முத்துப்போல் கோத்து நின்றது. இதற்கன்றோ ஆனந்தபாஷ்பம் என்று பெயர்!

ஆம், அந்த மாமரத்தில் என்ன அதிசயத்தைக் கண்டாள்!

அந்த மாமரத்தில் உச்சாணிக் கிளையில் ஒரே ஒரு மாங்காய் ராதையைப் பார்த்துப் புன்முறுவல் செய்து கொண்டிருந்தது!






ஆசிரியர் : கமல்ஜோஷி
மொழிபெயர்ப்பு : ரா. வி.

## 1. உத்தியோகத்துக்கு மனு

"ஏது வரை படித்திருக்கிறீர்கள்?"

"மெட்ரிகுலேஷன் வரையில்."

"மெட்குரிலேஷன் வரையிலா? அப்படியென்றால் என்ன அர்த்தம்? மெட்குரிலேஷன் பரீட்சை பாஸ் செய்ய வில்லையா?"

"இல்லை. பரீட்சையிலேயே உட்கார முடிய வில்லை."

"ஓ, அப்படியா? உங்கள் வீட்டில் யார்யார் இருக்கிறார்கள்? அதாவது உங்களுக்குக் கார்டியன் யாராவது இருக்கிறார்களா? அவர்களுக்கு நீங்கள் உத்தியோகம் பார்ப்பதில் ஆட்சேபணை ஒன்றும் இராதே! இவற்றைத் தெரிந்து கொள்வதற்காகக் கேட்கிறேன்."

"ஆட்சேபணையா?"

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்து மூன்றில், இப்படியும் நாகரிக மற்ற பழைய குருட்டுப் பழக்கங்களைக் கட்டிக் கொண்டு மாரடிக்கும் மனிதர்—அதுவும் அகதிகள் குடும்பத்தில் கார்டியனாக உள்ள ஒருவர்-பெண்கள் உத்தியோகம் பார்க்கக் கூடாது என்ற நோக்கம் படைத்தவராக இருப்பாரா என்று கேட்பது போலிருந்தது, அந்தப் பெண் "ஆட்சேபணையா?" என்னும் கேள்வியைக் கேட்ட முறையும் தோரணையும்.

"உங்களுக்கு 'டைப்' அடிக்கத் தெரியும் அல்லவா?" என்று கேட்டவாறே கேசவன் மேஜைக்குக் கீழே கால்களை நீட்டிக் கொண்டு முதுகுப் புறத்துக்கு நாற்காலியை முட்டுக் கொடுத்துக் கொண்டான். பிறகு ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தான். இரண்டொரு தடவை சிகரெட் புகையை உறிஞ்சிய பின், மனுவை இப்படியும் அப்படியும் ஒரு முறை புரட்டிப் பார்த்துவிட்டு, "உங்கள் மனுவில் நீங்கள் சுருக்கெழுத்து தெரிந்ததாகக் குறிப்பிட வில்லையே! எங்களுக்கு ஒரு 'ஸ்டெனோகிராபர்' அல்லவா தேவை!" என்றான்.

"நான் சீக்கிரமே சுருக்கெழுத்து கற்றுக் கொண்டு விடுகிறேன்."

இது வரை அந்தப் பெண் தலையைக் குனிந்தவாறே பதில் சொல்லிக் கொண்டிருந்தாள். இந்தத் தடவை அவள் தலையை நிமிர்த்தி எதிரே பார்த்தாள். சிகரெட் புகையின் காரணமாகப் பார்வை மங்கித் தெரியாமல் இருந்திருந்தால், யுவதியின் கண்களில் நீர்த் திரை யிட்டிருப்பதைக் கேசவன் கட்டாயம் கவனித்திருப்பான்.

"நான் வெகு சீக்கிரம் கற்றுக் கொண்டு விடுகிறேன். எனக்கு ஒரே ஒரு தடவை சந்தர்ப்பம் அளித்துப் பாருங்கள். எங்களுடையது என்றிருந்த எல்லாமே போய்விட்டது. எங்கள் மீது துளியாவது கருணை காட்டக் கூடாதா?" என்று பெண் தான் சொல்லி வந்த வாக்கியத்தை முடித்தாள்.

"காட்டலாம். ஆனால் அதற்கேற்றபடி கொஞ்சமாவது தகுதி வேண்டும் அல்லவா?" என்று பிரசங்கம் செய்யும் தோரணையில், சிகரெட் புகையைக் 'குப்' என்று வெளியே தள்ளிவிட்டு ஆரம்பித்தான் கேசவன். தற்செயலாக அவனது கண்கள் அவளது கண்களுடன் ஒரு கணநேரம் உறவாடின. உடனே, அவன் துள்ளிக் குதித்து, "அட!

நீ லதா அல்லவா? இங்கே எங்கே வந்தாய்?'' என்று பரிவுடன் கேட்டான்.

லதா இலேசாக நகைத்தாள். ''கேசவ அண்ணா! என்னை அடையாளங் கண்டு கொண்டு விட்டீர்களே! பேஷ்! நான் உங்களைப் பார்த்த உடனேயே புரிந்து கொண்டு விட்டேன். ஆனால் நானோ ஏழை.



உத்தியோகம் வேண்டி உங்களை நாடி வந்திருக்கிறேன். எனவே, இந்தச் சமயம் என்னைப் பற்றி அறிமுகம் செய்து கொள்ள எனக்குத் துணிவு உண்டாகவில்லை. இதுவோ 'இண்டர்வியு'. இங்கே தனக்குத் தெரிந்தவர் என்பதற்காகத் தவிசுபர் தனது அறிமுகப்படலத்தை அவிழ்த்து விடுவதும் உசிதமாகத் தோன்றவில்லை. ஏனெனில் இங்கே தகுதியைக் கவனித்துத் தானே உத்தியோகம் கொடுக்கப் போகிறார்கள்? அதனால்......'' என்றாள்.

பக்கத்திலிருந்த 'ஆஷ் டிரே'யில் கேசவன் சிகரெட்டைப் போட்டான். பிறகு பையிலிருந்து 'ஸெண்ட்' போட்ட கைகுட்டையை எடுத்து ஒரு முறை முகத்தைத் துடைத்து விட்டுக் கொண்டான். 'கம்' என்று அறை முழுவதும் 'ஸெண்ட்' வாசனை பரவியது.

''லதா! நீ ரொம்ப நன்றாகப் பேசக் கற்றுக் கொண்டு விட்டாயே! அன்றைக்குச் சுண்டைக்காய் போலச் சிறிய பெண்ணாயிருந்த உனக்கு இன்றைக்கு அப்பப்பா! எவ்வளவு பணிக்காகப் பேச வந்து விட்டது. சரி, நீ போய் வெளியில் உள்ள அறையில் சிறிது நேரம் உட்கார்ந்திரு. இன்னும் இரண்டு பேருக்கு 'இண்டர்வியூ' பாக்கியிருக்கிறது. அதையும் ஒரு வகையாக முடித்து விடுகிறேன்!'' என்றான் கேசவன்.

அதற்கு மேல் லதா அங்கே வெகு நேரம் வரை உட்கார்ந்திருக்க வேண்டிய அவசியம் நேரவில்லை.

பத்து நிமிஷத்துக் கெல்லாம் ஆபீஸ் சேவகன் ஒரு சிறு காகிதத் துண்டை லதாவிடம் கொண்டுவந்து கொடுத்தான். அதுகேசவன் எழுதியது. இரண்டுபேரும் சேர்ந்து புறப்பட்டால் அது நன்றாயிராது என்றும், ஆகவே, லதா குறிப்பிட்ட காப்பி ஹோட்டலுக்கு எதிரே போய் நின்று கொண்டிருக்கட்டும் என்றும், இரண்டு நிமிஷத்தில் தான் வந்து அவளைக் காரில் அழைத்துக்கொண்டு போவதாகவும் குறித்திருந்தான்.

காப்பி ஹோட்டல் வாசலுக்குப் போன லதா, தனக்கு முன்பாகவே கேசவன் தனக்காகக் காத்துக் கொண்டு நிற்பதைக் கண்டாள். காரின் கதவைத் திறந்து கேசவன், ''வா, லதா! உட்காரு!'' என்றான்.

காரில் ஏறி உட்கார்ந்தவண்ணமே லதா, '''இண்டர்வியூ' முடிந்து விட்டதல்லவா?'' என்று கேட்டாள்.

''ஓ! ஏதோ ஒரு வகையாக முடிந்து விட்டது. ஆனால், கவலைப் படாதே! உத்தியோகம் உனக்குத் தான்!'' என்றான் கேசவன்.

லதா மோட்டாரின் கதவுகள் வழியே தலையை வெளியே நீட்டிய வண்ணம், ''வேண்டாம், அவர்களிலேயே யாராவது ஒருத்திக்குக் கொடுத்து விடுங்கள். அவர்கள் என்னைக் காட்டிலும் தகுதி வாய்ந்தவர்களாகத்தான் இருப்பார்கள்'' என்றாள்.

''அது வாஸ்தவம்தான். ஐந்து பெண்கள் 'இண்டர்மீடியட்' பரீட்சையில் தேறியிருக்கிறார்கள். இரண்டு பேர் 'கேம்பிரிட்ஜ் ஸீனியர்' பரீக்ஷை பாஸ் செய்தவர்கள்.

இன்னும் இரண்டு பேர் பி. ஏ. பரீட்சையே கூடத் தேறியவர்கள். ஆனால் பட்டம் பெற்றிருக்கிறார்கள் என்பதற்காகத் தகுதியுள்ளவர்கள் என்று சொல்லிவிட முடியாதல்லவா?'' என்றான் கேசவன்.

"அப்படியானால் தகுதி என்பது என்ன?'' இந்த கேள்வியைக் கேட்கும்பொழுது லதாவுக்குச் சிரிப்பு வந்து விட்டது. "சிறிது நேரத்துக்கு முன்பு என் மனுவைத் தள்ளுவதாக இருந்தீர்கள். இப்பொழுது நாம் இருவரும் முன்பே அறிமுகம் ஆனவர்கள் என்பதற்காக நான் தகுதி உள்ளவளாக ஆகிவிட்டேனா, என்ன?'' என்றாள் லதா.

"இல்லை. அதற்கு இது அர்த்தம் இல்லை'' என்று சொன்ன கேசவன், சற்று வெட்கம் கலந்த குரலில் தன் எண்ணத்தைத் தெளிவாக்க விரும்புவன் போல், "மேற்குப் பஞ்சாபிலிருந்து வந்திருக்கும் அகதிகளைப் பொறுத்தவரை எங்களுக்கும் ஒரு கடமை உண்டல்லவா?'' என்றான். பிறகு, "சரி, அதெல்லாம் அப்புறம் பேசிக் கொள்ளலாம். அவள்—அது தான் உன் மன்னி—உன்னைப் பார்த்து எவ்வளவு சந்தோஷப் படுவாள், தெரியுமா?'' என்றான் சந்தோஷத்துடன்.

லதாவைப் பார்த்துச் சாந்தா சந்தோஷப் பட்டாளா, இல்லையா என்பதைச் சொல்வது கடினம். ஆனால் ஒன்று. லதாவைப் பார்த்து அடையாளம் புரிந்து கொள்வதற்குக் கேசவனுக்கு எவ்வளவு நாழிகை ஆயிற்றோ, அதைக் காட்டிலும் அவளுக்கு அதிக நாழிகை ஆயிற்று. அவளுக்கு நினைவு வந்த பொழுது, "அட! ஓஹோ! இவள் அந்த லதா தானா? லாயல்பூரில் உங்களிடம் ஒரு கணக்குப்பிள்ளை இருந்தாரே, அவருடைய பெண்ணா? இப்பொழுது பெரியவள் ஆகி விட்டாளோ, இல்லையோ? அதனால்தான் சட்டென்று என்னால் அவளை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை!'' என்றாள்.

"கணக்குப் பிள்ளையின் பெண்ணைப் புரிந்து கொள்வதென்றால், கொஞ்சம் நேரம் பிடிப்பது இயல்புதான், மன்னி! சில பேருக்கு எவ்வளவு முயற்சித்தாலும் அடையாளமே கண்டுபிடிக்க முடியாது. கடைசியில் உங்களுக்கு நினைவாவது வந்ததே, அதுவே பெரிது!'' என்றாள் லதா.

அந்தக் குத்தல் பேச்சைப் புரிந்து கொள்ளாத பாவனையாகவே, சாந்தா, "ஏன், லதா! இன்னும் உனக்குக் கல்யாணம் ஆகவில்லையே! உனக்கு இப்போது வயது என்ன, இருபது இருக்குமா? அல்லது இருபத்தொன்று......'' என்று கேட்டாள்.

"மன்னி! என் வயதை எதற்காகக் குறைத்துச் சொல்கிறீர்கள்? இப்பொழுது எனக்கு இருபத்து நான்காவது வயது நடக்கிறது. நீங்கள் என்னை முதன் முதலாகப் பார்த்த பொழுதே—நீங்கள் பார்த்துக் கிட்டத்தட்ட எட்டு வருஷம் இருக்கலாம் என்று எண்ணுகிறேன்—எனக்குப் பதினைந்து பதினாறு வயது இருக்கலாம்'' என்றாள் லதா.

"இருபத்து நான்கா?''—இந்தக் கேள்வியைக் கேட்கும்பொழுது சாந்தாவின் குரலில் ஆச்சரியமும் வியப்பும் தாண்டவமாடின. "ஆனால் பார்ப்பதற்கு அவ்வளவு பெரியவளாகத் தோன்றவில்லையே! சின்னவளாகத் தானே தோன்றுகிறாய்!—ஆமாம், எனக்கும் தான் அப்படி என்ன அதிகமாக வயது ஆகி விட்டது? இருந்தாலும், பார்! எவ்வளவு கிழடு தட்டிப் போய்விட்டேன்!'' என்றாள்.

சாந்தாவின் பட்டுப் புடவையையும் வழவழவென்றிருந்த சிவந்த கன்னங்களையும் பார்த்த லதா ஒன்றும் பதில் சொல்லவில்லை. இதற்குப் பதில் சொல்லாமல் இருப்பதே தான் அவளுக்கு வெகு உத்தமமாகப் பட்டது.

இதற்குள் உடை மாற்றிக் கொண்டு கேசவன் அங்கே வந்து விட்டான். "இரண்டு பேரும் நின்றவாறே பேசிக் கொண்டிருக்கிறீர்களே! உட்கார்ந்து பேசக் கூடாதோ?'' என்று கேட்டவன், "லதாவுக்குச் சிற்றுண்டிக்கு ஏற்பாடு செய்தாயா? இல்லை, பேச்சில் லயித்து எல்லாவற்றையும் மறந்து விட்டாயா?'' என்று தன் மனைவியைப் பார்த்துக் கேட்டான்.

சிறிது நேரத்துக் கெல்லாம் சிற்றுண்டி தயாராகி வந்துவிடவே, மூவரும் உட்கார்ந்து அருந்தலாயினர். தேநீர் அருந்தியவாறே கேசவன், "லதா! என்ன விசேஷம்? இவ்வளவு நேரம் ஏதோ உதவாக்கரைப் பேச்சுக்களைப் பேசிக் கொண்டிருந்து விட்டோம். பேச வேண்டியதைப் பேசாமலே இருந்து விட்டோம். உன் குடும்பத்தில் எல்லோரும் சௌக்கியமா? அப்பா இப்பொழுது எங்கே இருக்கிறார், எப்படி இருக்கிறார்? என்ன செய்து கொண்டிருக்கிறார்? எல்லாவற்றையும் விவரமாகச் சொல்'' என்றான்.



"மிஸ்டர். இந்தக் காப்பியை வந்து பாரும். ஒரு வண்டு மிதக்கிறது!''

"ஓ! அது ஒன்றும் பண்ணாது. ஸார்! அது செத்துப் போய் விட்டது!''

"அப்பா காலமாகி எத்தனையோ காலமாகி விட்டது. ஒருவேளை உங்கள் வரை அந்தச் செய்தி எட்டவில்லை போலிருக்கிறது."

லதா குரலைத் தாழ்த்திக் கொண்டு மேலும் கூறினாள். "வெகு நாட்களாகவே அப்பா வேலையின்றி இருந்தார். வயது காலத்தில் வேறு யாரிடம் சென்று அவர் கணக்குப் பிள்ளை வேலையோ வக்கீல் குமாஸ்தா வேலையோ பார்க்க முடியும்? ஆயினும் அவர் ஏதாவது வேலை கிடைத்து விட்டால் நல்லது என்று எண்ணி எவ்வளவோ முயற்சி செய்தார். இந்த வேலைக் கவலை அவருடைய ஆரோக்கியத்தையே உறிஞ்சத் தொடங்கியது. தினம் ஒன்றில்லா விட்டால் ஒரு வியாதி அவரைப் பிடுங்கித் தின்னத் தொடங்கியது. சாவதற்கு ஆறு மாதத்துக்கு முன்னால் ஒரு கடையில் கணக்கு வழக்கு எழுதும் வேலையை மேற்கொண்டார். அந்த வருவாயைக் கொண்டு குடும்பச் சக்கரம் ஒருவிதமாக ஓடியது. ஒரு வேலையும் இன்றி ஈயோட்டுவதை விட, காசு குறைவாகக் கிடைத்தாலும், அல்லது கிடைக்காமலே இருந்தாலும், வேலையென்று ஒன்று செய்து கொண்டிருப்பது நல்லதல்லவா? அதனால் அவர்கள்..." என்று சொல்லி நிறுத்தினாள்.

"அதற்குப் பிறகு என்ன ஆயிற்று?"

"அதற்குப் பிறகு என்ன?"

அது யாரோ மூன்றாவது மனிதனுடைய கதை போலவும் அதைத் தான் சொல்வது போலவும் வெறுப்பு விருப்பு அற்ற குரலில் லதா மேலும் சொல்லலானாள்: "கொஞ்சம் கற்பனை செய்து பார்த்தீர்களானால், நீங்களே தெரிந்து கொள்ளுவீர்கள். வயதோ ஆகிவிட்டது. கைகால்கள் நடுக்கம் ஏற்பட்டுவிட்டது. கணக்குக் கூட்டிப் போடுவதில் ஏதாவது தவறு தப்பித் தவறி நேர்ந்து விட்டால், அதற்கு இல்லாத வசவெல்லாம் அவர் கேட்கும்படியாகி விட்டது, அந்த வயது காலத்தில். இவ்வளவு சிரமத்துக்கும் கூலியாகக் கிடைத்த சம்பளம் எவ்வளவு ரூபாய், தெரியுமா? மாதம் ஐம்பதே ரூபாய்தான். உடற் கோளாறு காரணமாக என்றைக்காவது அவர் கடைக்குப் போக முடியாமற் போய்விட்டால், அதைக் கணக்கிட்டு அதற்குச் சம்பளப் பிடிப்புச் செய்து பாக்கியைத் தான் கொடுத்து வந்தார்கள்.

"இதற்கு மேலும் என் குடும்பத்தைப் பற்றிக் கேட்க விரும்புகிறீர்களா? என் தம்பி ரமேஷை உங்களுக்கு நினைவிருக்கிறதல்லவா? நீங்கள் அவனைப் பார்த்த காலத்தில் அவன் ரொம்பவும் சின்னவனாக இருந்தான். அவன் மூன்று தடவை 'மெட்ரிக்' கோட்டையை முற்றுகை யிட்டும் பிடிக்க முடியவில்லை. தெருவில் உள்ள பையன்களுக்குத் தலைவனானான். பகல் முழுவதும் தெருப் பிள்ளைகளை இழுத்துக் கொண்டு எங்கேயாவது ஊர் சுற்றப் போய்விடுவான். அல்லது விளையாடப் போய்விடுவான். வீட்டையே எட்டிப் பார்க்க மாட்டான். சாப்பாட்டு வேளையில் குருவிக்கு மூக்கில் வியர்த்தாற்போல் வீட்டுக்குள் நுழைவான், சாப்பிடுவான்; பிறகு விளையாடப் போய் விடுவான். நான் ஒருத்திதான் வீட்டுக்கு. நாளுக்குநாள் நான் வளர்ந்து கொண்டிருந்தேன். அதற்கேற்றாற் போல் அப்பா - அம்மாவின் — கவலையும் வளர்ந்து கொண்டிருந்தது. அவர்கள் கவலை வளர்ந்து கொண்டிருந்ததே தவிர, அப்பாவின் வருவாய் வளரவில்லை. அப்பா நான் வளருவதைக் கவனித்தும் கவனிக்காதது போல் இருந்தார். ஆயினும் அவரைக் கவலை உள்ளூற வாட்டிக் கொண்டுதான் இருந்தது. இராத் தூக்கம் கிடையாது அவருக்கு. கடைசியில் அதே கவலையில் உழன்று காயலாகப் படுத்தார். படுத்தவர் ஆறுமாதம் படுத்த படுக்கையாகவே உயிர் வாழ்ந்தார். அப்புறம்......"

கேசவனால் அப்புறம் தேநீர் அருந்த முடியவில்லை. அவனுக்குத் துயரம் தொண்டையை



பாலக்காடு பண்டித மோதிலால் முனிசிபல் கல்லூரியின் வருடாந்திரக் கொண்டாட்டம் ஒரிஸ்ஸாவின் மாஜி கவர்னர் ஸ்ரீ வி. பி. மேனன் தலைமையில் பிப்ரவரி 19உ சிறப்பாக நடந்தேறியது. அக் கொண்டாட்ட வைபவத்தில் பள்ளி மாணவிகள் இருவர் ராதா கிருஷ்ண நடனமாடியதைப் படத்தில் காணலாம்.

## பரதநாட்டிய அரங்கேற்றம்

●



பிரசித்தி பெற்ற கிரிக்கெட் ஆட்டக்காரர் எஸ்.வி.டி. சாரி அவர்களின் புதல்வி குமாரி மாலதியின் நாட்டிய அரங்கேற்றம் சென்ற பிப்ரவரி மாதம் 25-ட அன்று சென்னை, மயிலாப்பூர் ரஸிக ரஞ்ஜனி சபை ஹாலில் விமரிசையாக நடந்தேறியது. மேற்படி அரங்கேற்ற வைபவத்துக்குத் தலைமை வகித்த மந்திரி ஸ்ரீ எஸ். பி. பி. பட்டாபிராம ராவ் அவர்கள் குமாரி மாலதியின் நாட்டியத் திறமையை வெகுவாகப் பாராட்டிக் குழந்தைக்கு ஆசி கூறினார். சிறுமி மாலதி நடன ஆசிரியர்களான ஸ்ரீமதி தன மாணிக்கம்மாள் ஸ்ரீ ராமமூர்த்தி இவர்களின் சிஷ்யை.

அடைத்தது. லதாவைப் பார்த்து அன்பு தோய்ந்த, ஆனால் கரகரத்துப் போன குரலில், "போதும், போதும். என்னால் இந்தத் துயரக் கதையை இனி கேட்க இயலாது.—அதற்குப் பிறகு பாகிஸ்தான் பிரிந்தது. நீங்கள் எப்படியோ தில்லி வந்து சேர்ந்தீர்கள். இந்தக் கதையைத் தானே சொல்லப் போகிறாய்? நீ சொல்லாமலே அதைத் தெரிந்து கொண்டு விட்டேன். அம்மாவும் இங்கே தானே இருக்கிறாள்? இப்பொழுது ரமேஷ் என்ன செய்து கொண்டிருக்கிறான்?" என்று கேட்டான்.

"அம்மா இங்கேதான் இருக்கிறாள். நாங்கள் 'கிங்ஸ்வே' அகதிகள் விடுதியில் தங்கி யிருக்கிறோம். ரமேஷ் இப்பொழுதும் பழைய மாதிரியேதான் இருந்து வருகிறான். ஒன்றும் செய்வதில்லை. வேலையில்லாமல் சுற்றித் திரிகிறான். அவன் படித்த படிப்பும் மிகக் குறைவு. அவனுக்கு யார் வேலை கொடுக்கப் போகிறார்கள்?" என்றாள் லதா.

சிறிது நேரம் வரை அங்கே மௌனம் நிலவியது. லதாவே அந்த மௌனத்தைக் கலைத்து, "நல்லது, கேசவ அண்ணா! நான் போய் வரட்டுமா?" என்று கேட்டாள்.

கேசவன் சங்கோசத்துடன், "உத்தியோக விஷயம்......" என்று ஆரம்பித்தான்.

"உங்களுக்கு இஷ்டம் இருந்தால் வைத்துக் கொள்ளுங்கள். தகப்பனாரும் உங்களிடத்தில் வேலை செய்திருக்கிறார். பெண்ணும் செய்துவிட்டுப் போகிறேன். இதில் வெட்கப் படவேண்டிய விஷயம் என்ன?" என்றாள். பிறகு ஒரு முறை சுற்று முற்றும் பார்த்துவிட்டு, "உங்கள் குழந்தைகள் எங்கே? இங்கே யாரையும் காணோமே!" என்று கேட்டாள்.

"எனக்கு இரண்டே குழந்தைகள்தான். ஒருவன் டேராடூனில் படிக்கிறான். இன்னொரு குழந்தையை வேலைக்காரன் எங்கேயோ சுற்றிவர அழைத்துப் போயிருக்கிறான். இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்து விடலாம்" என்றான் கேசவன்.

"இன்றைக்கு இல்லாவிட்டால் என்றைக்காவது ஒரு நாள் அவர்களை பார்த்துக் கொள்கிறேன். இன்று எனக்குக் கொஞ்சம் சீக்கிரமாகப் போக வேண்டும்" என்று சொன்ன லதா சௌஜன்யத்துடன், "வேலை கொடுத்தாலும் கொடுக்கா விட்டாலும், நான் உன்னைப் பார்க்க வருவேன். தெரிந்ததா?" என்றாள்.

"'வரட்டுமா?' என்று கேட்டுக் கொண்டா நீ வரவேண்டும்? உனக்கு எப்பொழுது சௌகரியமோ, அப்பொழுது அவசியம் வா. நீ வராவிட்டால் நானே நேரில் வந்து உன்னை இழுத்து வருவேன், தெரியுமா? வேண்டியவர்கள் என்றால் சொல்லிக் கொண்டா வருவார்கள்?" என்று சொன்ன கேசவன் சாந்தாவைப் பார்த்து, "ஏன் சாந்தா, நான் சொல்வது என்ன?" என்றான்.

"ஆமாம். வேண்டியவர்கள் என்றால் அப்படித்தான் இருக்க வேண்டும். அதுதானே வேண்டியவர்களுக்கு அழகு?" என்று அவன் சொல்லை ஆமோதித்தாள் சாந்தா.

கேசவன் லதாவை வாசற்படி வரை கொண்டு விட்டு வழி அனுப்பினான். திடீரென்று லதா திரும்பி, "ஏன் அண்ணா! இந்தப் பங்களா உன்னுடைய சொந்தப் பங்களாத்தானே?" என்று கேட்டாள்.

கேசவன் சற்று வெட்கத்துடன், "ஆமாம், இது என்னுடையதுதான். ஏன் கேட்கிறாய்?" என்று கேட்டான்.

"ஒன்றும் இல்லை. சும்மாத்தான் கேட்டேன். அப்படியானால் இந்த மோட்டார், இந்த நாற்காலி முதலிய சாமான்கள் எல்லாம் உன்னுடையதாகத்தான் இருக்க வேண்டும். இதிலிருந்து உன் தொழில் நன்றாக நடக்கிறது என்றே ஊகிக்கவேண்டி யிருக்கிறது. நான் ஏதோ கேட்டு வைத்தேனே தவிர, வேறு ஒன்றும் இல்லை. வித்தியாசமாக எடுத்துக் கொள்ளாதே. உன் கம்பெனியில் வேலை செய்வது என்று ஏற்பட்டால், கம்பெனியின் நிலையை நான் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியந்தானே?" என்றாள் லதா.

பிறகு கேசவனிடமும் சாந்தாவிடமும் விடை பெற்றுக் கொண்டு அகதிகள் விடுதியை நோக்கிப் புறப்பட்டாள். (தொடரும்)

உங்களை

எப்பொழுதும்

முன்னேற்றப்

பாதையில்

வைத்திருக்கும்

அன்றுட

முதலீடு

உங்கள் பணம் மேலும் மேலும் விருத்தியாவதை நீங்கள் விரும்புகிறீர்கள் — யார்தான் விரும்பவில்லை—அதுவும் அதிகப்படி பணத்துக்கு வருமான வரி இல்லை என்னும்போது. ஆகவே **தேசிய சேமிப்புப் பத்திரங்களை** வாங்கிக் கொண்டே இருங்கள். இன்றைய தினம் முதலீடு செய்யப்படுகிற பிரதி 100 ரூபாயும் பன்னிரண்டு வருடங்களில் 150 ரூபாயாகிறது.

உங்கள் பத்திரங்களை முழு காலத்துக்கும் அப்படியே வைத்திருந்தீர்களானால், அவைகள் வருடத்திற்கு 4. 1/6 சத விகித வட்டி அளிக்கின்றன. உண்மையிலேயே இது உயர்ந்த வட்டிதான்.

உங்களால் முடிந்ததையெல்லாம் வாங்குங்கள்; ஆனால் காலவரையறைக்குள் பணமாக மாற்றாதீர்கள்; ஏனென்றால் அவைகள் இன்னும் நல்ல வட்டி சம்பாதித்துக் கொண்டே இருக்கின்றன—மேலும் மேலும் அவை மதிப்பில் உயர்ந்து கொண்டே போகின்றன. நீங்களும் உங்கள் குடும்பத்தில் ஒவ்வொருவரும் எவ்வளவு சிறிய சேமிப்பைக் கொண்டும் கணிசமான தொகையை நாளடைவில் காணலாம்.

5, 10, 50, 100, 500, 1,000, 5,000 ரூபாய் மதிப்புகளில் இப் பத்திரங்கள் தபால் ஆபீஸ்களில் கிடைக்கும்.

அவ்வப்பொழுது திருத்தப்பட்ட 1944-ம் வருஷத்து தேசிய சேமிப்புப் பத்திர விதிகளின் படி வழங்கப் படுகின்றன.

# பன்னிரண்டு வருட தேசிய சேமிப்புப் பத்திரங்கள்

மேற்கொண்டு செய்திகளுக்காகவும் அல்லது இந்த முதலீட்டைக் குறித்த விதிகளுக்காகவும் "கார்டன் காஸில்", சிம்லா - 3 என்னும் விலாசத்திலுள்ள நாஷனல் ஸேவிங்ஸ் கமிஷனருக்காவது உங்கள் ராஜ்யத்தின் மாகாண நாஷனல் ஸேவிங்ஸ் ஆபீஸருக்காவது தயவுசெய்து எழுதிக் கேளுங்கள்.

AC 438 TM



# அபூர்வ மனிதர்

பரிசுக் கதை : ஜாக் பின்னி
(அமெரிக்கா)

மொழிபெயர்ப்பு : வாஞ்சி

அன்று சனிக்கிழமை ஆனதால் நான் வேலைக்குச் செல்லவில்லை. நான் காலை ஆகாரம் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். என் மனைவி நெல் ஏதோ வீட்டு அலுவலைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

ஜன்னல் வழியாக வெளியே பார்த்த அவள், 'வந்து விட்டார்கள், அவர்கள் வந்து விட்டார்கள்' என்று பரபரப்புடன் கூறினாள்.

உடனே நான் அப்படியே அவசரம் அவசரமாக எழுந்து சென்று வெளியே பார்த்தேன்.

அண்டை வீட்டுக்கு யார் குடி வருகிறார்கள்? அவர்கள் எப்படிப்பட்டவர்கள்? இதையெல்லாம் அறிந்து கொள்ள வேண்டும் என்று ஆர்வம் ஏற்படுவது சகஜம் அல்லவா?

அடுத்த வீட்டுக்கு ஹெல்லன்பெக் தம்பதிகள் குடி வரப் போகிறார்கள் என்பது எனக்கு ஏற்கெனவே தெரியும்.

ஹெல்லன்பெக் மோட்டாரிலிருந்து கீழே இறங்கியதும், தன் மனைவிக்கும் கை கொடுத்து அவளை இறக்கி விட்டார். இருவரும் நடை பாதையைக் கடந்து வீட்டுக்குள் சென்றபோது, அவர்களுடைய முகங்களை நான் நன்றாகப் பார்க்க முடிந்தது.

ஹெல்லன்பெக் தம்பதிகளுக்குச் சற்றேறக் குறைய எங்களுடைய வயதே இருக்கும். அவருக்கு வயது முப்பத்திரண்டு, முப்பத்து மூன்று இருக்கலாம். அவரது மனைவிக்கு இருபத்தைந்து வயது இருக்கும்.

அவர்களுடைய மலர்ந்த முகங்கள் அவர்கள் மிகவும் இனிய சுபாவம் உள்ளவர்கள் என்பதைக் காட்டின.

" இவர்கள் புதிதாகக் கல்யாணம் செய்து கொண்டவர்கள் போல் தோன்றுகிறது" என்றாள் நெல் என் காதோடு காதாக.

"அது எப்படி உனக்குத் தெரியும்?" என்று கேட்டேன்.

" அவர்களுடைய உடைகள் யாவும் புத்தம் புதிதாக இருக்கின்றன, பாருங்கள். பூட்ஸ் கூடப் புதிதாக இருக்கின்றன. அவள் கையில் வைத்துக் கொண்டிருக்கும் பை கூடப் புதிதாக இருக்கிறது."

சில வினாடி நேரத்துக்குள் நெல் அத்தனை விஷயங்களையும் கவனித்துக் கூறியது எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

உடனே புத்தியில் அவளுக்கு நான் சளைத்த வளாகி விடக் கூடாது அல்லவா?

"இவர்கள் இந்த நாட்டைச் சேர்ந்தவர்கள் அல்ல" என்றேன்.

"அதை எப்படிக் கண்டு பிடித்தீர்கள்?" என்று கேட்டாள் நெல்.

" ஹெல்லன்பெக் கையில் உள்ள பணத்திலிருந்து தட்டுத் தடுமாறிச் சில்லறை எடுக்கிறார் அல்லவா? நம் நாட்டைச் சேர்ந்தவராக இருக்கும் பட்சத்தில் அவ்விதம் ஏன் தடுமாற வேண்டும்?"



ஒரு ஸ்திரீ:—நாங்கள் வேறு நல்ல இடத்துக்கு சுற்றுப்புறத்தில் நல்ல ஜனங்கள் வசிக்கும் இடமாகப் பார்த்துக் கொண்டு குடித்தனம் போகப் போகிறோம். வீடு கிடைத்துவிட்டது!

மற்றவள் (பெருமையாக):—நாங்களும் கூடத்தான் நல்ல இடம் பார்த்துக் கொண்டிருக்கிறோம்!

முதல் ஸ்திரீ (ஆச்சரியத்துடன்):— நீங்கள் கூட வேறு வீட்டுக்குப் போகிறீர்களா?

மற்றவள்:—இல்லை, இல்லை! நீங்கள் போகிறது நிச்சயம் என்று தெரிந்ததும், நாங்கள் இந்த நல்ல இடத்தை விட்டுப் போவதாக இல்லை!

நான் இவ்விதம் கூறியதோ, நெல் கூறியதோ இரண்டும் சரியல்ல. அவர்களுக்குக் கல்யாணம் ஆகி ஐந்து ஆறு வருஷங்கள் ஆகின்றன. அவர்கள் பிறந்து வளர்ந்தது அமெரிக்காவில்தான். இவ் விவரங்கள் எல்லாம் பிறகு எங்களுக்குத் தெரிய வந்தன.

• • •

அவர்கள் வந்த அரை மணிக்குப் பிறகு அவர்களுடைய குடும்பத்துக்கு வேண்டிய நாற்காலி, மேஜை, அலமாரி முதலியனவும் இதர சாமான்களும் வந்து சேர்ந்தன. அவை எல்லாம் புதியவையாகவே இருந்தன.

அண்டை வீட்டுக்காரர்களான அவர்களை அறிமுகம் செய்து கொள்வதற்காக நான் அடுத்த வீட்டுக்குச் சென்றபோது, ஹெல்லன்பெக் தம்பதிகளுக்குள் நடந்த சம்பாஷணை என் காதில் விழுந்தது.

"இந்தப் பத்திரிகையில் உள்ள ட்ருமன் படம் நன்றாக இருக்கிறது" என்றார் ஹெல்லன்பெக்.

"ட்ருமனா? அது யார்?" என்று கேட்டாள் ஸ்ரீமதி ஹெல்லன்பெக்.

"அவர்தான் நம் நாட்டின் ஜனாதிபதி."

"ஆமாம், ஆமாம். ட்ருமன், பிறகு ரூஸ்வெல்ட், அதன் பின்......"

"கண்ணே! அப்படி இல்லை. முதலில் ரூஸ்வெல்ட், இப்போது ஜனாதிபதியாக இருப்பவர்தான் ட்ருமன்."

"இல்லை, இல்லை. உங்களுக்குத் தெரியாது. முதலில் ட்ருமன், பிறகு ரூஸ்வெல்ட், இப்போது......"

அதற்குமேல் ஸ்ரீமதி ஹெல்லன்பெக் என்ன சொல்லப் போகிறாள் என்பதைக் கேட்க எனக்கு ஆவலாக இருந்தது. ஆனால் அதற்குள் என் காலடிச் சத்தம் அவர்களுக்குக் கேட்டு விட்டதால், இருவரும் ஏககாலத்தில் என்னைத் திரும்பிப் பார்த்தனர்.

ஜனாதிபதி யார் என்பதுகூடத் தெரியாத வயதான ஒரு பெண் அமெரிக்காவில் இருக்கிறாளா என்று என் மனம் மிகுந்த அதிர்ச்சிக்கு உள்ளாகியது.

அவர்கள் என்னைப் பார்த்ததும், "நான் அடுத்த வீட்டில் வசிப்பவன். என் பெயர் லூயிஸ். நீங்கள் புதிதாக வந்திருப்பதால் சாமான்களை ஒழுங்காக வைப்பதில் உங்களுக்கு ஏதாவது உதவி செய்யலாம் என்ற உத்தேசத்துடன் வந்தேன்" என்று கூறினேன்.

நான் இவ்வாறு கூறியதும் ஹெல்லன்பெக்கிற்கு உற்சாகம் தாங்க முடியவில்லை.

"வாருங்கள்; ரொம்பவும் சந்தோஷம். நான்தான் ஹெல்லன்பெக்" என்றார்.

உடனே அவர் தமது மனைவியைப் பார்த்து, "ஆன்! நமக்கு அண்டை வீட்டுக்காரர்கள் நல்லவர்களாக வாய்த்திருக்கிறார்கள்" என்று கூறினார்.

அவளும் புன்முறுவலுடன் என்னை வரவேற்றாள். அன்று வெகு நேரம் வரையில் அவர்களுடைய சாமான்களை யெல்லாம் ஒழுங்காக வைப்பதற்கு நான் உதவி செய்து கொண்டிருந்தேன்.

அவர்கள் தென் அமெரிக்காவில் வசித்து வந்ததாக ஹெல்லன்பெக் கூறினார். எந்த ஊரில் வசித்தார்கள் என்று நான் கேட்கவில்லை. அவர்கள் உடுத்திக் கொண்டிருந்த உடைகளைத் தவிர, மற்றும் ஒரு சில முக்கிய சாமான்களைத் தவிர மற்றவை யாவையும் விற்று விட்டதாகவும், இங்கு எல்லாம் புதிதாக வாங்கியதாகவும் அவர் கூறினார்.

அவ்விதம் செய்ததற்கு அவர் கூறிய காரணம் மிகவும் நியாயமாக இருந்தது. தென் அமெரிக்காவிலிருந்து வட அமெரிக்காவுக்குச் சாமான்களைக் கப்பலில் கொண்டுவர வேண்டும் அல்லவா? அவ்விதம் கொண்டு வருவதற்குக் கொடுக்க வேண்டிய கப்பல் கட்டணத் தொகையைக் கொண்டு புதிய சாமான்களை வாங்கி விடலாம்!

ஆனால், சில நாட்கள் கழித்து அவரது மனைவி ஆன் நெல்லிடம் கூறிய தகவல்கள் வேறுவிதமாக இருந்தன. தென் அமெரிக்காவில் அவர்களுக்குச் சொந்தமாக இருந்த வீடு எரிந்து, அதிலிருந்த சாமான்கள் யாவும் நாசமாகி விட்டன என்று அவள் நெல்லிடம் துயரத்துடன் கூறினாளாம்.

• • •

அவர்கள் குடிவந்த மறுதினம் நான் என் மனைவி நெல்லை ஹெல்லன் பெக்

வீட்டுக்கு அழைத்துச் சென்று, அவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தேன்.

சில நாட்களில் எங்கள் குடும்பத்துக்கும் ஹெல்லன்பெக் குடும்பத்துக்கும் நெருங்கிய நட்பு ஏற்பட்டு விட்டது. ஆனும் நெல்லும் அடிக்கடி சேர்ந்தே கடை முதலிய இடங்களுக்குச் சென்றனர்.

ஒருநாள் ஆன் ஒரு துணியினுல் மேஜை, நாற்காலி, ஜன்னல் முதலியவற்றில் இருந்த தூசியைத் துடைத்துக் கொண்டிருந்தாள். மேற்படி சாமான்களில் உள்ள புழுதியைத் துடைத்து விட்டு, அவள் அந்தத் துணியை ஜன்னலுக்கு வெளியே உதறியபோது, அதி லிருந்து தூசியெல்லாம் அறவே போய் விட்டது. அந்தத் துணி மறுபடியும் சுத்த வெண்மையாகி விட்டது.

இதைப் பார்த்த எனக்கும் நெல்லுக்கும் மிகவும் ஆச்சரியமாக இருந்தது. துணியில் ஒட்டிக் கொண்டிருக்கும் தூசியெல்லாம், அதை உதறியதும் அறவே போய் விடுவ தில்லை. சிறிதாவது துணியில் ஒட்டிக் கொண்டுதான் இருக்கும். எவ்வளவு உதறி னாலும் நாளடைவில் அது அழுக்காகி, சல வைக்குப் போடவேண்டி யிருக்கும். ஆனல் இந்தத் துணியோ தூசியை உதறியதும், மறுபடியும் முன்போல் சுத்த வெண்மையாகி விடுவது விந்தையாக இருந்தது.

"இத்தகைய துணியை நான் பார்த்ததே யில்லை. இதை எங்கிருந்து வாங்கினீர்கள்?" என்று நெல் ஆச்சரியத்துடன் கேட்டாள்.

இந்தக் கேள்வி ஆனை என்னவோ செய் திருக்க வேண்டும். இல்லாவிடில் அவள் அப்படி முகத்தைத் திருப்பிக் கொண்டிருக்க மாட்டாள். அப்போது ஆன் கண்களில் நீர் ததும்புவதை நான் கவனித்தேன்.

வெகு சாதாரணமான அந்தக் கேள்வி அவள் மனத்தை ஏன் வேதனைக்கு உள்ளாக்கி யது என்ற மர்மத்தை எங்களால் அறிந்து கொள்ள முடியவில்லை.

* * *

சில நாட்கள் சென்றபின்தான் ஹெல்லன் பெக் புதிது புதிதாகச் சாதனங்களைக் கண்டு பிடிப்பதில் நிபுணர் என்பது எனக்குத் தெரிந்தது. ஆனல் தான் கண்டு பிடித்த சாதனங்களைக் கொண்டு லாபம் பெறும் வழி மாத்திரம் அவருக்குத் தெரியவில்லை. அதிக லாபத்தை அவர் நாடுவதும் இல்லை. அதன் விளைவாக அவர் வாழ்க்கை நடத்து வதே சிற்சில சமயங்களில் சிரமமாகியது.

தூசிகளைத் துடைத்து விட்டு உதறினல் மீண்டும் சுத்த வெண்மையாகி விடும் அபூர்வ மான துணி ஹெல்லன்பெக்கினல் கண்டு பிடிக்கப் பட்டதுதான். அத்தகைய துணியை உற்பத்தி செய்யும் இரகசியத்தை அவர் ஏதாவது ஒரு கம்பெனிக்கு விற்கும் பட்சத் தில், அவருக்குப் பதினயிரக் கணக்கில் தொகை கிடைக்கும். ஆனல் அவர் அவ் விதம் செய்ய விரும்பவில்லை. அப்படி ஒரு மனிதர் இந்த உலகில் இருப்பது எனக்கு விசித்திரமாகத் தோன்றியது.

* * *

ஒருநாள் அவர் கையில் ஒருவிதமான கம்பியை வைத்துக் கொண்டிருந்தார். அது என்னவென்று நான் கேட்டபோது, அது தாம் கண்டுபிடித்த "ஸேப்டி பின்" என்ருர்.



அதைப் பார்த்ததும் என்னுடைய ஆச்சரியத்துக்கு எல்லையே இல்லை. அவர் ஒரு சாதாரணக் கம்பியில் புதிய முறையில் சிறந்த 'ஸேப்டி பின்'னைத் தயாரித்திருந்தார்.

அப்போது அவருடன் எனக்கு நெருங்கிய நட்பு ஏற்பட்டிருந்தது. அவரது அதிருப்திகரமான பொருளாதார நிலைமையும் எனக்கு ஓரளவு தெரிந்தது.

எனவே, அவரிடம் "அதைப் பெருந் தொகைக்கு ஒரு கம்பெனிக்கு விற்று விடக் கூடாதா?" என்று கேட்டேன்.

"இதைப்பற்றி ஒரு கம்பெனிக்கு எழுதியிருந்தேன். அவர்களிடமிருந்து இன்றுதான் பதில் வந்தது. அவர்கள் ஆயிரத்து ஐந்நூறு டாலருக்கு இதை வாங்கிக் கொள்ளத் தயாராக இருக்கிறார்கள்" என்றார்.

"அந்தத் தொகைக்கு நீங்கள் இதை விற்றுவிடப் போகிறீர்களா?"

மேற்படி 'ஸேப்டி பின்'னைப் போல் அந்தக் கம்பெனியார் லட்சக் கணக்கில் உற்பத்தி செய்து, பதினாயிரக் கணக்கில் லாபம் பெற முடியும். அப்படியிருக்க அற்பத் தொகையான ஆயிரத்து ஐந்நூறு டாலருக்கு அதை அவர் விற்கத் தீர்மானித்தது என் மனத்தை என்னவோ செய்தது.

ஹெல்லன்பெக்கின் மனைவி நல்ல அழகி தான். இனிய சுபாவமும் உள்ளவள். ஆயினும் என்ன? யார் அமெரிக்காவின் ஜனாதிபதி என்பது கூடத் தெரியாத மண்டுவாக இருந்தாள். ஹெல்லன்பெக்கோவெனில், தமது திறமையின் மதிப்பைத் தாம் அறிந்து கொள்ளாதவராக இருந்தார். அத்தகைய தம்பதிகள் அமெரிக்காவில் எப்படி வாழ்க்கை நடத்த முடியும் என்பதை நினைக்க என் மனம் வேதனைக்கு உள்ளாகியது.

"நாங்கள் இங்கு வரும்போது எங்களிடம் அதிகத் தொகை இல்லை. ஆனின் நகைகளை விற்றுச் செலவை ஈடு செய்தேன். இப்போது, மரச் சாதனங்கள் வாங்கிய கம்பெனிக்கு அவசரமாகத் தொகை கொடுக்க வேண்டும். அவர்கள் நிர்ப்பந்தப் படுத்துகிறார்கள். அதனால்தான் கிடைத்த தொகை போதும் என்று இதை விற்கத் தீர்மானித்து விட்டேன்" என்றார் ஹெல்லன்பெக்.

அவர் கூறியதை மறுத்துக் கூறினால் யாதொரு பலனும் ஏற்படாது என்பது எனக்குத் தெரியும். அவரது இயற்கைச் சுபாவத்தை என்னால் மாற்ற முடியுமா? அவருக்குச் சிறந்த மேதையைக் கொடுத்திருக்கும் கடவுள், அதைக் கொண்டு இந்த உலக வாழ்க்கையைச் சகல சுக போகங்களுடனும் இன்பமாக அனுபவிக்கும் ஆற்றலை அளிக்கவில்லையே!

சுமார் ஆயிரம் டாலர் பெருமானம் உள்ள ஒரு சாதனத்தை ஒரு வியாபாரி நூறு டாலருக்கு விற்றால் அவன் கதி என்ன ஆகும்? அதுபோலவே பதினாயிரக்கணக்கில் சம்பாதிக்கக்கூடிய மேதை இருந்தும், ஹெல்லன்பெக் அதைச் சரிவர உபயோகிக்கும் வழியை அறிந்து கொள்ளவில்லை. எனவே, 'நடக்கிறபடி நடக்கட்டும். நாம் என்ன செய்வது?' என்று நான் பேசாமல் இருந்து விட்டேன்.

* * *

ஹெல்லன்பெக் விஞ்ஞான சம்பந்தமான அபூர்வமான கட்டுரைகள் எழுதுவதிலும் தேர்ச்சி பெற்றவர் என்று எனக்குப் பிறகுதான் தெரிய வந்தது.

எதிர்காலத்தைப் பற்றிய அவரது கற்பனைகள் என்னைத் திடுக்கிடச் செய்தன. எனினும் அவர் கூறுவதை வெறும் கற்பனை என்று என்னால் தள்ளிவிட முடியவில்லை.

"இன்னும் நூறு வருஷ காலத்துக்குள் இந்த உலகத்தில் எத்தனை மாறுதல்கள் ஏற்பட்டுவிடும், தெரியுமா? அப்போது இந்த உலகத்தில் இருக்கவே பிடிக்காது. ஒவ்வொருவரும் தினசரி பன்னிரண்டு அல்லது பதினாறு மணி நேரம் வேலை செய்வார்கள். ஒவ்வொருவருடைய வருமானத்தில் பெரும் பகுதியும் வரிகளுக்குப் போய்விடும். மீதியுள்ள தொகை வாழ்க்கைச் செலவுக்கே போதாது. சாதனங்களின் விலை அவ்வளவு அதிகமாக உயர்ந்து விடும். செயற்கைப் பற்றாக் குறைகள், பல விதமான கட்டுப்பாடுகள் எல்லாம் சேர்ந்து வாழ்க்கையில் கொஞ்ச நஞ்சம் சந்தோஷம் கூட இராமற் செய்து விடும்."

இவ்விதம் ஹெல்லன்பெக்கின் கற்பனையிலிருந்து பல கதைகள் சிருஷ்டியாயின.

உலகிலே மானிட வர்க்கமே இராத காலம் வரும் என்று கூடச் சொல்லுவதற்கு ஹெல்லன்பெக் தயங்கவில்லை! அத்தகைய உலகில் மிருகங்கள், புழு, பூச்சிகள் மாத்திரமே வசிக்கும் என்றும் கூறினார்.

பிரமிப்பை உண்டாக்கும் அவரது கற்பனைகள் என்னையும் நெல்லையும் ஆச்சரியத்தில் மூழ்கச் செய்தன. மேற்படி கற்பனைகளைக் கேட்டுக் கொண்டே வரும்போது ஆன் கண்களில் நீர் ததும்புவது உண்டு.

ஹெல்லன்பெக் மகா மேதாவியா, ஞானியா, அல்லது வெறும் கற்பனை உலகிலும் கனவு உலகிலும் சஞ்சரிக்கும் ஒரு பைத்தியக்காரரா என்று எனக்கு அடிக்கடி சந்தேகம் எழுவது உண்டு. எனினும் உயர்ந்த குணம் படைத்த அவரது நட்பை நான் மிகவும் மேலாகக் கருதினேன் என்பதில் சந்தேகம் இல்லை.

ஒருநாள் திடீரென்று ஹெல்லன்பெக் தம்பதிகள் அடுத்த வீட்டைக் காலி செய்து விட்டனர். அவர்கள் எங்களிடம் விடை பெற்றுக் கொள்ள வந்த போது, ஹெல்லன்பெக் எப்போதும் போல் புன்முறுவலுடன் இருந்தார். ஆனால் ஆனின் கண்கள் கலங்கியிருந்ததை நானும் நெல்லும் கவனித்தோம்.

அப்படிப்பட்ட உயர்ந்த குணம் வாய்க்கப் பட்ட தம்பதிகள் வாழ வகையறியாமல் அடிக்கடி ஊர் ஊராக மாறிச் செல்லுவதை நினைத்து என் மனம் பதைத்தது.

இனி அந்த வீட்டுக்கு யார் குடிவரப் போகிறார்களோ? யார் வந்தாலும் ஹெல்லன்பெக் தம்பதிகளைப் போல் எங்களுடைய ஹிருதயத்தை கவருவதற்கு முடியாது.

யாரோ ஒருவர்

# பிரிட்டானியா

பிஸ்கோத்தை

சாப்பிடுகிறார்கள்



*சிறந்த பிஸ்கோத்து*

## பிரிட்டானியா

BC.3598




"எட்டு மாதங்களாக எனது கீழ் முதுகுப் பாகத்தில் பொறுக்க முடியாத வலி யிருந்தது. சில சமயங்களில் வலியின் கொடுமையால் என்னால் ஒன்றும் முடியாமலும், மிகுந்த க்ஷீண மாயும் இருந்தது. பிறகு "க்ருஷன்" உபயோகித்துப் பார்த்தேன். இரண்டு வாரங்களுக்குப் பின்னர் நான் ஒரு வேற்று மனிதனா யிருக்கிறேன். எனது வலி முழுதுமே விட்டொழிந்து விட்டது.—H.W.S.

மூத்திரக் காய்கள் சரிவரக் கழிவு பதார்த்தங்களை வெளியேற்றாவிடில், ரத்தக் குழாய்களில் விஷச் சத்துக்களில் சேமிக்கப்பட்டு அவை முதுகு வலியை உண்டாக்குகின்றன. "க்ருஷ"னின் ஆறுவித உப்புக்கள் மந்தித்துப்போன மூத்திரக் காய்களை மெதுவாகத் தூண்டி அவற்றைச் சரிவர இயக்கி ரத்தக் குழாய்களை சுத்தமாக்கச் செய்விக்கின்றன. தினந்தோறும் ஒரு சிறு அளவு "க்ருஷன்" உட்கொள்வது உங்களை முதுகு வலியினின்றும் விடுவிக்கும்.

**"க்ருஷன்"** உங்கள் ஆரோக்யத்திற்கும் ஆனந்தத்திற்கும் உற்ற உதவி




**பி**ரபல ஜவுளிக் கடையான 'மகமாயி ஹவுஸ்'ஸில் கொடுத்த மீதிப் பணத்தைச் சரியாக இருக்கிறதா என்று கூடப் பார்க்காமல் பணத்தைத் தன் அழகிய தோல் பையில் திணித்துக் கொண்டு படியை விட்டுக் கீழே இறங்கினாள் வாணி. அவள் அவ்வளவு சீக்கிரமாக வெளியேறி விட்டதைக் கண்ட 'மகமாயி ஹவுஸ்' சிப்பந்திகள் உண்மையில் பிரமித்து விட்டார்கள். வாணி கடைக்கு வந்துவிட்டால் பீரோவிலிருக்கும் அத்தனை புடவைகளும் கீழே இறங்கிவிடும்! அப்படியும் அவளுக்குத் திருப்தி இராது. இப்படிப்பட்டவள் அன்று சீக்கிரம் கடையை விட்டு வெளியேறியதைக் கண்டு சிப்பந்திகள் பிரமித்துப் போனது உண்மையில் ஆச்சரியப்படக் கூடிய விஷயம்தான்.

வாணியின் அவசரத்துக்கு ஓர் முக்கிய காரணம் இருந்தது. அன்று மாதர் சங்கத்தில் நடக்க இருக்கும் ஆண்டு நிறைவு விழாவுக்கு வாணி தலைமை வகிக்கவேண்டி இருந்தது. அதனால் தன்னை அலங்காரம் செய்து கொள்ள நேரம் வேண்டுமே என்பதற்காகத்தான் ஜவுளிக் கடையை விட்டு விரைவில் வீட்டை அடைந்தாள்.

"வாணி, ஒரு ரூபாய் இருந்தால் கொடேன். வேலைக்காரி செல்லம் இருக்கும்போதே அவளைக் கடைத் தெருவுக்கு அனுப்ப வேண்டும்" என்று வரவேற்றாள் அவள் தாயார் மீனாட்சி.

"எப்போ பார்த்தாலும் உனக்கு ரூபாய்தான்" என்று முணு முணுத்துக் கொண்டே தன் அழகிய தோல் பையைத் திறந்து, அதிலிருந்து ஒரு ரூபாய் நோட்டைக் கையில் எடுத்துத் தன் தாயாரிடம் கொடுக்கப் போனாள் வாணி.

என்ன ஆச்சரியம்! அதில் சிறிதளவு வெள்ளையாக இருக்குமிடத்தில் "வாணி என் காதலி. —ராமு" என்று எழுதி யிருந்தது. உண்மையில் அதைக் கண்டு பிரமித்து விட்டாள் வாணி. ஓஹோ இவர் அவ்வளவு தூரத்துக்கு வந்து விட்டாரா! அது சரி, இந்த நோட்டு எப்படி என்னிடம் வந்தது. இம்மாதிரி பலவகை எண்ணங்களால் மனத்தைக் குழப்பிக் கொண்டிருந்தாள். ஆனால் அது சமயம் மேலும் மண்டையை உடைத்துக்கொள்ள அவளுக்கு அவகாசம் இல்லை. வேறு ஒரு ரூபாய் நோட்டு ஒன்றைத் தன் தாயாரிடம் கொடுத்து விட்டு, மாதர் சங்க ஆண்டு விழாவில் என்ன பேசவேண்டும் என்பதைப் பற்றி எண்ண ஆரம்பித்து விட்டாள்.

* * *

**வா**ணியின் தகப்பனார் ஒரு பெரிய கம்பெனியின் மானேஜர். மாதம் பிறந்தால் சொளையாக ஐந்து பச்சை நோட்டுக்களை வாங்குபவர். தன் ஒரே பெண்ணான வாணியைக் கஷ்டம் என்பது என்ன என்று தெரியாமலே வளர்த்து விட்டார். வாணியும் தான் அதிக செல்லமாக வளர்ந்து விட்டோம் என்று பெருமிதம் அடைந்தாளே தவிர, அவள் தன் பெற்றோர்களுக்கு வேறு ஒரு தொந்தரவும் தரவில்லை. காலை பத்து மணிக்குக் கல்லூரிக்குச் செல்வதும், மாலை வந்தவுடன் மாதர் சங்கத்துக்குச் சென்று "டென்னிஸ்" ஆடுவதுமாய்த் தன் காலத்தைக் கழித்து வந்தாள்.

இப்படி அமைதியாய்ச் சென்று கொண்டிருந்த அவள் வாழ்க்கையில் ராமு என்ற ராமசாமி புகுந்தான். திருச்சிராப்பள்ளியிலிருந்து பி. ஏ. வகுப்பில் சேர அவ் வருடம் மதுரைக்கு வந்திருந்தான்.

ஒரு நாள் காலை. வாணி வாசலில் உட்கார்ந்து கொண்டு ஏதோ ஒரு நாவலைப் படித்து கொண்டிருந்தாள். குதிரை வண்டி யொன்று அவள்

வீட்டு வாசலுக்கு நேரே வந்து 'டக்'கென்று நின்றது. தன் வீட்டுக்கு யாரோ வருகிறார்கள் என்று ஆவலுடன் எட்டிப் பார்த்தாள்.

வண்டியிலிருந்து ஒரு இளைஞன் 'தொப்' பென்று கீழே குதித்தான். ஒரு முறை நிமிர்ந்து பார்த்த அவன் வாணியைக் கண்டு திடுக்கிட்டான். பின்னர் தன்னைச் சமாளித்துக் கொண்டு "இது தானே, திவான்பகதூர் வீடு!" என்று கேட்டான்.

"இல்லை, பக்கத்து வீடு" என்று ஏமாற்றமான குரலில் கூறினாள் வாணி. அவ் விளைஞனை வண்டியி லிருந்து குதித்தபோது பார்த்த அவள் சில நிமிஷம் அவனையே பார்த்தபடி இருந்தாள். நெற்றியில் சுருள் சுருளாகத் தொங்கிக் கொண்டிருந்த கருத்த கேசமும் களை பொருந்திய முகமும் விசாலமான நெற்றியும் வாணியை வசீகரித்து விட்டன.

இதற்குள் வண்டி வந்திருப்பதைப் பார்த்த திவான் பகதூர் "ராமுவா, வா! இதுதான் நம்ம வீடு!" என்று அவனை வரவேற்றார்.

ராமு தன் பெரிய பெட்டி படுக்கை முதலிய வைகளை எடுத்துக் கொண்டு வாணியைத் திரும் பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்று விட்டான். அன்று முதல் வாணியின் நினைவுதான் ராமுவுக்கு. ராமுவின் தியானம்தான் வாணிக்கு. அடிக்கடி அவர்கள் கண்கள் பேச ஆரம்பித்தன.

ஒரு நாள் வாணி கல்லூரியிலிருந்து வீட்டுக்கு வந்தவுடன் காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். அப்பொழுது 'ஸார்!' என்று யாரோ கூப்பிடும் சத்தம் கேட்டு வாசலுக்கு ஓடிவந்தாள். வாசலில் ராமு ஒரு புத்தகத்தோடு நின்று கொண்டிருந் தான். ஒரு நிமிஷம் ஒருவரை ஒருவர் பார்த்த வண்ணம் அப்படியே நின்று விட்டனர்.

பின்னர் ராமு, "தங்களை வரவழைத்ததற்கு மன்னிக்கவும். இந்தப் புத்தகம் தெருவில் கிடந் தது. உங்கள் பெயர் இதில் இருந்ததினால் கொண்டு வந்தேன்" என்று அவளிடம் நீட்டினான்.

மிகுந்த ஆச்சரியத்துடன் வாணி அந்தப் புஸ்த கத்தை வாங்கிக் கொண்டாள். எப்படி அந்தப் புத்தகம் கீழே நழுவி விழுந்தது என்பது அவ ளுக்குப் புரியவில்லை. இருந்தாலும் மரியாதைக்காக "வந்தனம்" என்றாள். "அதற்கென்ன, பரவா யில்லை!" என்று ராமு பல்லை இளித்தான்.



பையன் (புதிதாக வேலைக்கு வந்தவன்):— ஐயா, அதோ அவருக்கு நான் முக க்ஷவரம் செய்து விடட்டுமா?

ஊழன்காரர்:—ஜாக்கிரதை! வேலையில் கவனமாயிரு. உன் கையில் காயம் பட்டுக் கொள்ளப் போகிறாய்!

*  *  *

"வாணி இன்னும் வரவில்லையா!" என்று அவள் தந்தை கேட்டு முடிப்பதற்கும் வாணி வீட்டுக்குள்ளே வருவதற்கும் சரியாக இருந்தது.

"இதோ வந்து விட்டேன், அப்பா!" என்று கூறியவண்ணம் வாணி தன் அருமைத் தந்தையின் எதிரில் வந்து நின்றாள்.

"எங்கே போயிருந்தாய், இவ்வளவு நேரம் உன்னைக் காணவில்லை!"

"இன்று மாதர் சங்கத்தின் ஆண்டு விழாவுக்கு என்னைத் தலைமை வகிக்கும்படி கேட்டுக் கொண் டார்கள். விழா முடிவதற்கு நேரமாகி விட்டது, அப்பா!" என்று கூறினாள்.

"சரி, போய்ச் சாப்பிடு. உனக்காக அம்மா காத்துக் கொண்டிருக்கிறாள்!" என்று கூறிவிட்டு மாடியை நோக்கி நடக்கலானார் வாணியின் தந்தை.

சாப்பிட்டு விட்டு அலுப்புத் தாங்காமல் படுக் கையில் புரண்ட வாணிக்கு ஏனோ தூக்கம் வர வில்லை. மத்தியானம் தன்னிடம் வந்த ஒரு ரூபாய் நோட்டை மறு முறையும் எடுத்துப் பார்த்தாள். அந்த எழுத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தால் போதுமென்று இருந்தது அவளுக்கு. அடுத்த கணம் அந்த எழுத்துக்கள் மறைந்துவிட்டன. ராமுவின் எழிலுருவம் அதில் தெரிந்தது. அவன் அவளைப் பார்த்துப் புன்னகை செய்வது தெரிந்தது. மனம் குளிர அந்த மாயத் தோற்றத்தைப் பார்த்து மகிழ்ந்து போனாள் வாணி. சட்டென்று அவன் அழகிய உருவம் மாயமாய் மறைந்து போய்விட்டது.

எதையோ நினைத்துக் கொண்டு அவள் திடீரென எழுந்து வேறொரு புதிய ஒரு ரூபாய் நோட்டை எடுத்தாள். அதில் "ராமு என் காதலன் — வாணி" என்று எழுதினாள். அந்த இரு நோட்டையும் நன்றாகச் சேர்த்து வைத்தாள். அதையே திரும்பத் திரும்பப் பார்த்துக் கொண்டே யிருந்தாள். அப்படியே கண்ணயர்ந்தும் விட்டாள்.

*  *  *

மறு நாள். தான் வழக்கமாகச் செல்லும் புத்தகக் கடைக்கு அன்று முதல் நாள் வந்திருந்த ஒரு புதிய நாவலை வாங்குவதற்காகச் சென்றாள். இரண்டு ஒரு ரூபாய் நோட்டைக் கடைக்காரரிடம் கொடுத்துப் புத்தகத்தைப் பெற்றுக் கொண்டு திரும்பினாள். கடையை விட்டுக் கீழே இறங்கப் போனாள். அப்பொழுது திடுதிடுவென்று உள்ளே நுழைந்தான் ராமு. இருவர் தலைகளும் ஒன்றை ஒன்று மோதிக் கொண்டன. "மன்னிக்க வேணும்" என்று இரண்டு பேரும் ஒரே சமயத்தில் கூறினார்கள். அப்பொழுது அவர்களின் நான்கு கண்களும் ஏதோ பேசிக் கொண்டன. இருவர் முகத்திலும் ஒரு கணம் ஒரு புது மலர்ச்சி தோன்றி மறைந்தது. மறு கணம் கடைக்கார ரிடம் சென்று ஒரு ஐந்து ரூபாயை நீட்டிச் சில் லறையைப் பெற்றுத் திரும்பினான் ராமு.

கடைக்காரன் கொடுத்த சில்லறையையும் நோட்டையும் வாங்கிக் கொண்டு ஒரே தாவலில் தெருவைத் தாவிக் கொண்டு மறைந்து விட்டான். ஓடி வந்த அவசரத்தில் தன் பையிலிருந்து கீழே விழுந்த ஒரு ரூபாய் நோட்டைக் கையில் எடுத்தான். அந்த ஒரு ரூபாய் நோட்டைப்



அம்மா:—ஏண்டா, மாமாவை எழுப்புகிறாய்? அசந்து தூங்கும்போது எழுப்பக் கூடாது!

பையன்:—இல்லை, அம்மா! மாமாவைத் தேள் கொட்டி விட்டது! அதற்காகத் தான் எழுப்புகிறேன்.

பார்த்த அவன் அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டான். ஏனெனில் அதில் "ராமு என் காதலன்—வாணி" என்று எழுதியிருந்தது. ராமு தன்னை மறந்து அந்த ஒரு ரூபாய் நோட்டை மார்போடு அணைத்துக் கொண்டு மகிழ்ந்தான்.

நாட்கள் உருண்டோடின. வாணியின் கல்லூரி கோடை விடுமுறைக்காக மூடப்பட்டது. ஏதோ சிந்தனையில் நடுரோடில் வந்து கொண்டிருந்தாள் வாணி. அவள் பின்னால் ஒரு லாரி வேகமாக வந்து கொண்டிருந்தது. லாரி டிரைவரின் ஹாரன் சத்தம் வாணியின் சிந்தனையைக் கலைத்ததாகத் தெரியவில்லை. வாணி லட்சியம் செய்யாமல் நடு வீதியிலேயே வந்து கொண்டிருந்தாள். லாரி நெருங்கி வந்து விட்டது. எவ்வளவோ முயன்றும் டிரைவரால் லாரியை நிறுத்த முடியவில்லை. பயங்கரச் சத்தத்துடன் வாணி நின்றுகொண்டிருந்த இடத்துக்குப் பத்தடிக்கு அப்பால் லாரி நின்றது. அதற்குள் வாணியை ஒரு வாலிபன் குழந்தை போலத் தூக்கிக் கொண்டு போய் அவளைக் காப்பாற்றி விட்டான். உயிரைத் திரணமாக மதித்த அந்த வாலிபனுக்கு நன்றி கூற அவன் முகத்தை நிமிர்ந்து பார்த்தாள் வாணி. அவன் வேறு யாருமில்லை. சாட்சாத் ராமுதான். அவளால் பேச முடியவில்லை. ஆனால் அவள் கண்கள் பேசின. அவள் உள்ளம், உடல் எல்லாம் பேசின. அகமும் முகமும் மலர அவனுக்குப் பேசாமல் பேசி நன்றி கூறினாள்.

ராமு மட்டும், "வீதியில் ஜாக்கிரதையாக நடக்க வேண்டும்" என்று சொல்லி விட்டுச் சென்றான். அவன் உள்ளம் ஏதோ ஒரு புது இன்பத்தில் மிதந்து கொண்டிருந்தது.

இந்தச் சம்பவங்களையெல்லாம் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்த வாணியின் தகப்பனார் பார்த்து விட்டார்; வாணி வீட்டை அடைந்ததும் "என்ன, வாணி! நடு வீதியில் கவனமில்லாமல் நடந்து வருகிறாயே! இப்பொழுது அந்தப் பிள்ளை இல்லாவிட்டால் உன் கதி என்னவாகியிருக்கும்!" என்று கண்டித்தார்.

அப்பொழுதுதான் வாணியின் வீட்டைத் தாண்டிச் சென்று கொண்டிருக்கும் ராமுவைக் கை தட்டிக் கூப்பிட்டார் அவள் தகப்பனார். ராமு தயங்கியபடியே அங்கே வந்தான்.

"உள்ளே வா, தம்பி! நீதான் என் வயிற்றில் பாலை வார்த்தாய். நீ மாத்திரம் இந்தச் சமயத்தில் இருந்திராவிட்டால்..." என்று இழுத்தாற் போல் சொன்னார்.

"என்ன, ஸார்! இந்த அற்ப உதவிகூட ஆபத்தான சமயத்தில் செய்யா விட்டால் அப்புறம் மனிதன் என்று சொல்லிக்கொள்ள என்ன இருக்கிறது!" என்று கேட்டான் ராமு.

பிறகு, இருவரும் பல விஷயங்களைப் பற்றி வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தனர்.

வாணியின் தகப்பனார் மெதுவாக அவனைப் பற்றித் தெரிந்து கொண்டார். முடிவில் "நான் வரட்டுமா" என்று ராமு கேட்டபோது "கொஞ்சம் இரு, தம்பி! காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாம்!" என்று கூறி வாணியைக் கூப்பிட்டுக் காப்பி கொண்டு வரும்படிக் கூறினார். ஒரு தடவை ராமுவைக் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டே உள்ளே சென்றாள் வாணி.

வீணுக்குக் கதையை வளர்த்துவானேன். வாணியின் தந்தைக்கு ராமுவைப் பிடித்து விட்டது. எப்படியாவது இந்த விடுமுறைக்குள் வாணியின் கல்யாணத்தை முடித்து விட வேண்டும் என்று திட்டம் போட்டிருந்தார். ஒரு வார விடுமுறை பெற்றுக் கொண்டு திருச்சிக்குச் சென்று ராமுவின் தந்தையைப் பார்த்துப் பேசினார். மறு முகூர்த்தத்தில் வாணிக்கும் ராமுவுக்கும் வெகு விமரிசையாகக் கல்யாணம் நடந்தது.

* * *

நிலா பால்போல் பொழிந்து கொண்டிருந்தது. வாணியும் ராமுவும் மொட்டை மாடியில் உட்கார்ந்து கொண்டிருந்தனர். "இதோ பார், வாணி!" என்று தன் சட்டைப் பையிலிருந்து ஒரு ரூபாய் நோட்டை எடுத்துக் காண்பித்தான் ராமு. அதில் 'ராமு என் காதலன்—வாணி" என்று எழுதியிருந்தது. அவள் ஆச்சர்யத்தினால் ஒரு நிமிஷம் சிலையைப் போல் உட்கார்ந்து விட்டாள். பிறகு தன்னைச் சமாளித்துக் கொண்டு "அது சரி! இது உங்களுக்கு எப்படிக் கிடைத்தது!" என்று கேட்டாள்.

"அன்று நீ புத்தகக் கடைக்குள் சென்றபோது நானும் அங்கே ஏதேனும் ஒரு சாக்கை வைத்துக் கொண்டு வரவேண்டும் என்று வந்தேன். வந்ததற்காகச் சில்லறை மாற்றினேன். அந்தப் புத்தகக் கடையில் தான் இந்த ஒரு ரூபாய் நோட்டு கிடைத்தது!" என்றான் ராமு.

வாணி தன்னிடம் இருந்த ஒரு ரூபாய் நோட்டை எடுத்துக் காண்பித்தாள். ராமு அதைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தான். பிறகு, "உனக்கு எப்படி இந்த ஒரு ரூபாய் நோட்டு கிடைத்தது!" என்றான்.

"அதுவா! 'மகமாயி ஹவுஸ்' ஜவுளிக் கடையில் கொடுத்தார்கள்! இது உங்கள் முன் ஏற்பாடு தானே!" என்று கேட்டாள்.

"ஆமாம்!" என்றான் சிரித்துக் கொண்டே.

வாணி அந்த இரண்டு ஒரு ரூபாய் நோட்டுகளையும் தன் மணிபர்ஸில் வைத்து விட்டு, "இதோ பாருங்கள்! இந்த இரண்டு ஒரு ரூபாய் நோட்டுக்களையும் பத்திரமாக வைத்துக் கொள்ளப் போகிறேன். இதுதானே நம்மைச் சேர்த்து வைத்தது!" என்று கூறியவண்ணம் புன்னகை பூத்தாள்.

இந்த இளம் தம்பதிகளுக்கு இடையில் நிற்கக் கூடாது என்று நினைப்பது போலப் பூரணச் சந்திரன் மேகத்துக்குள் மறைந்தான்.


தலை வலியா?
விரைவில் 2 'ஆஸ்ப்ரோ'
வில்லைகள் சாப்பிடவும்
ASPRO


அவனுக்கு ஆனந்தம் அளிப்பதற்கு
கையோடு ஒரு புட்டி வைத்திருங்கள்
குழந்தைக்கு வயிற்றுக் கோளாறு இல்லாதிருப்பதால் அவன் சந்தோஷமாயிருக்கிறான். குழந்தை சந்தோஷமாயிருப்பதால் தாயாரும் சந்தோஷமாயிருக்கிறாள்.
கிரைப் ஸிரப்
தயாரிப்பாளர் :
தி மைசூர் இண்டஸ்ட்ரியல் & டெஸ்டிங் லாபரேட்டரி லிமிடெட், மல்லேஸ்வரம், பெங்களூர்
விற்பனை ஏஜன்டுகள் :
பெஸ்ட் & கம்பெனி லிமிடெட், தபால் பெட்டி நெ 63, சென்னை


3 வாசனைக் கலாரத்னங்கள்
கம் கம் ஜவாஜ் * கம்பால் * கமகர்
அகர்பத்திகள்
டி. எஸ். சுகந்தாலயா,
வாசனைதிரவிய வியாபாரிகள், பெங்களூர்-2

"உன் அப்பா வியாதிக்காரி என்று என்னை ஒதுக்கி வைத்து விட்டு உன் அம்மாவை மணந்து கொண்டது முதல் இந்தத் தனி வாழ்க்கைதான் நடத்தி வருகிறேன்" என்று கண்ணீரும் கம்பலையுமாகத் தன் கதையைக் கூறி முடித்தாள் செல்லம்.

இதுவரை தன் பெரியம்மா கூறிய சோக வரலாற்றைக் கேட்டு மனம் கலங்கியிருந்த பாலு நீண்ட பெருமூச்சு விட்டுத் தன் அனுதாபத்தைத் தெரிவித்துக் கொண்டான்.

"இருபது வருஷம். ஒன்றல்ல இரண்டல்ல...இருபது வருஷம், உங்களுடைய இந்தத் தனிமை வாழ்க்கையை நினைத்துப் பார்க்கவே எனக்குப் பயங்கரமாக இருக்கிறது" பெரியம்மா.

"பயங்கரம்......" மெல்லச் சிரித்துக் கொண்டாள் பெரியம்மாள். "நானும் ஆரம்பத்தில் அப்படித்தான் பயந்து கொண்டிருந்தேன். ஆனால் காலம் என் பயத்தைக் கரைத்து விட்டது."

"பிறந்த வீட்டு மனிதர்கள் என்று உங்களுக்கு அபயமளிக்க ஒருவர்கூட இல்லையா!" என்று கேட்ட பாலு தன் சந்தேகத்தை நிவர்த்தித்துக் கொள்ள விரும்புகிறவனைப் போல் பெரியம்மாவை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்தான்.

"உடன் பிறந்தவன் என்று ஒருவன் இருக்கத்தான் செய்தான். ஆனால் அவனும் எனக்கு அபயமளிக்கும் நிலையில் இல்லை."

"அதிசயமான பேச்சு, பெரியம்மா! சகோதரிக்கு ஆபத்துக் காலத்தில் கைகொடுத்து உதவக் கூடாதா! உதவ முடியாத ஒருவன் உடன் பிறந்தவன்தானா...!" என்று வெறுப்பும் குரோதமும் ததும்பும் குரலில் கூறினான் பாலு.

எதையோ நினைத்துக் கொண்டவளைப் போல் எழுந்து உள்ளே போன செல்லம் கையில் ஒரு கவருடன் சிறிது நேரத்தில் திரும்பி வந்தாள்.

"இதோ இதைப் பார்" என்று நீட்டிய கடிதத்தை மரியாதையுடன் பெற்றுக் கொண்ட பாலு "என்ன!" என்பதைப்போல் தன் பெரியம்மாவை ஏறிட்டுப் பார்த்தான்.

"படித்துப் பார்! அப்பொழுது புரியும்" என்று பெரியம்மாள் கூறவே, படபடக்கும் நெஞ்சுடன் கடிதத்தைப் பிரித்தான்.

எழுத்து மங்கிப் போயிருந்ததிலிருந்து பல வருஷங்களுக்கு முன் வந்த கடிதம் என்பதை ஊகித்துக் கொண்டான். யாரால் எப்பொழுது எழுதப்பட்டது என்பதை அறிந்து கொள்ள ஒரு முறை கடிதத்தைப் படித்தான்.

"உன் தாயார் செய்த கொடுமையின் பலன் நீ இன்று அனுபவிக்கிறாய். தன் வீட்டுக்கு வந்த மருமகளைப் பெண்ணாகப் பாவித்துப் போற்றத் தெரியாத உன் அம்மா என்னைக் கொடுமைப் படுத்தினாள். அந்த இரக்கமற்ற தன்மையின் பலன் இன்று அவள் மகளான உன் தலையில் விடிந்திருக்கிறது. உன் அம்மாவின் கொடுமையிலிருந்து எனக்கு விடுதலை உண்டு. ஆனால் உனக்கு............?"




இப்படி எழுதி யிருந்தாள் அவள் அண்ணனின் மனைவி. அதைப் படித்தபோது துடியாய்த் துடித்தது பாலுவின் மனம்.

"சிறிதும் இரக்கமற்றவள். அவள்தான் அப்படி எழுதினாலும் அவள் கணவன் — உங்கள் சகோதரன், ஒன்றுமே சொல்லவில்லையா!"

"அவருக்குத் தெரிந்தால்தானே!"

"ஏன், பெரியம்மா, நீங்கள் அவருக்குத் தெரியப் படுத்துவதுதானே......!"

"ஒருவர் தவறி நடந்தால் அதற்காக நாமும் தவறு செய்ய வேண்டுமா!"

"பெரியம்மா! உங்கள் செய்கை போற்றத் தகுந்ததாக இல்லை. பழிக்குப் பழி, அன்புக்கு அன்பு, அக்கிரமத்துக்கு அக்கிரமம் செய்து காட்ட வேண்டும். நீங்கள் மட்டும் அதைச் செய்யத் தவறி விட்டீர்கள். நானாக இருந்திருந்தால் அப்படி விட்டிருக்க மாட்டேன்."

"நாமும் அவர்களைப் போல் நடந்து கொண்டால் மனிதத் தன்மையே இல்லையே."

"நீங்கள் எப்படி வேண்டுமானாலும் சொல்லலாம். ஆனால் என் மனம் உங்கள் வாதத்தை ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை......" என்று கூறிவிட்டு எழுந்து போய்விட்டான் பாலு.

அவன் எழுந்து போய்விட்டான். ஆனால் அவன் சொல்லிப் போன வார்த்தைகள் அவள் நினைவைப் பின்னுக்கு இழுத்துச் சென்றன.

★

இல்லறம் என்னும் இன்ப வாழ்வை இனிதாக நடத்திச் சென்ற நாட்களிலெல்லாம் தனக்குத் தனிமை வாழ்க்கை சமீபத்தில் காத்திருக்கிறதென்பதைச் செல்லம் சிந்தித்துக்கூடப் பார்த்ததில்லை. மற்றவர்களைப்போல் தானும் குடியும் குடித்தனமுமாய் வாழப் போகிறோம் என்று கனவு கண்டு கொண்டிருந்தாள். அவள் கனவை நனவாக்க வந்ததைப்போல் ஒரு நற்செய்தி அவளுக்குக் கிட்டியது. இன்னும் ஆறு மாதத்தில் அவள் தாயாகப் போகிறாள் என்பதுதான். முதன் முதலில் தாய்மை எய்தும் பெண்களின் உள்ளத்து மகிழ்ச்சியை அளவிட்டுக் கூற வார்த்தை யில்லை என்றே சொல்லலாம். உலகத்தில் ஒவ்வொருவரும் அனுபவித்த அந்த இன்பத்தைத்தான் நாமும் அனுபவிக்கப் போகிறோம் என்ற என்



"இனிமேல் நான் எந்தப் பந்தயத்துக்கும் போகப் போவதில்லை!"

"உன் பேச்சை நம்ப முடியாது!"

"போகாமல் இருக்கிறேன். என்ன பந்தயம் கட்டுகிறாய்?"

ணமே அவளுக்கு இல்லை. ஒருவருக்குமே கிடைக்காத தனிப் பேறு தனக்குக் கிடைத்து விட்டதைப் போலவே எண்ணி மகிழ்ந்தாள் செல்லம்.

பளுவான பத்து மாதத்தையும் கடந்து நாள் கணக்கை விரல்விட்டு எண்ணிக் கொண்டிருந்து விட்டுப் பிறகு மணி, நிமிடக் கணக்கையும் அளவிடும் நிலைமையில் வந்திருந்தது.

உயிர்போகும் நோவையும் பொருட்படுத்தாமல் தன் செல்வத்தைக் காணத் துடித்துக்கொண்டிருந்தது அவள் மனம். நேரம் வளர்ந்தது. எதிர்பார்த்த கால அளவும் தாண்டிவிடவே பெரிய டாக்டரை அழைக்க வேண்டிய நிலை ஏற்பட்டு விட்டது.

முடிவில் ஆப்பரேஷன் செய்து குழந்தையை—இல்லை உயிரற்ற குழந்தையை எடுக்க நேர்ந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் அவள் உயிர் பிழைத்ததே மறு பிறவி என்றனர் பலர். ஆனால் அவளுக்கு ஏன் தன்னுயிர் மட்டும் பிழைத்ததோ என்று ஆறாத் துயரமாக இருந்தது.

குழந்தையில்லாத வாழ்க்கை வாழவே முடியாதென்ற ஏக்கம் நாளாக ஆக அவள் இதயத்தை அணு அணுவாய் அரிக்கத் தொடங்கியது. வெறும் போஷணையினால் மட்டும் அவள் உடம்பு தேறுவதாய் இருந்தால் அவள் கணவன் வாங்கிக் கொடுத்திருந்த மருந்துகளிலேயே உடம்பு தேறி எழுந்து நடமாடியிருப்பாள்.

அவள் விசனம் அவள் வாழ்க்கையைக் கசப்பாக அடிக்கப் போவது தெரிந்திருந்தால் ஒரு வேளை தன்னைத் திருத்திக் கொண்டிருப்பாள்.

ஏற்கெனவே கஷ்டப் பிரசவத்தால் நைந்து போயிருந்த அவள் உடல் உள்ளத்தைச் சூறையாடும் கவலை என்னும் கரையானும் சேர்ந்து அரிக்கத் தொடங்கவே வியாதியின் உருவாக எலும்பும் தோலுமாக மாறி வந்தாள்.

தன் சக்திக்கு மீறிய வைத்தியம் செய்து அலுத்துப் போன அவள் கணவன் அவளைக் கைவிட்டு விட்டான். தன் எதிர்கால இல்லற வாழ்வு இனிக்க மறுமணம் செய்து கொண்டான்.

பிறந்த இடத்து ஆதரவு தேடி அண்ணனுக்கு எழுதி அனுப்பினாள். என்றோ அவள் தாயார் படுத்திய கொடுமையை மனத்தில் வைத்துப் பொருமியிருந்த அண்ணனின் மனைவி சந்தர்ப்பத்தைச் சாக்காக வைத்து இடித்துக் காட்டிக் கடிதம் வரைந்து விடவே தாயும் மகளும் மட்டும் தனிக் குடித்தனம் வைக்க நேர்ந்தது.

செல்லத்தின் தாயார் வயதான கட்டை. மகளின் ஆதரவற்ற நிலையை எண்ணியெண்ணி ஏங்கியே அவளும் கட்டையைப் போட்டு விட்டாள். அது முதல் தனி வாழ்வு நடத்திவிட்ட செல்லத்தின் பாதையிலே சில தினங்களாக பாலு குறுக்கிட்டிருந்தான். பாலு வேறு யாருமல்ல. செல்லத்தின் கணவனை மணந்து கொண்ட இளைய மனைவி மீனாட்சியின் செல்வப் புதல்வன்.

கணவன் மறுமணம் செய்து கொண்டார் என்பதைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தாளே தவிர அதன் பின்பு அவர்களைப் பற்றியோ அவர்கள் குடும்பத்தைப் பற்றியோ செல்லம் எவ்விதச் செய்தியும் அறியாள்.

திடுதிடுப்பென்று ஒருநாள் அவள் வீட்டு வாசலில் ஒரு வாலிபன் வந்து நின்றான். "யாரப்பா நீ" என்று கேட்கு முன்பாகவே "என்னைத் தெரியவில்லையா பெரியம்மா! நான்தான் உங்கள் மகன் பாலு!" என்று உரிமையோடு கூறிக் கொண்டு படியேறி வீட்டினுள் நடந்தான்.

அவனாயிருக்குமா! என்ற ஐயத்தின் நடுவே, "நீ...நீ..." என்று தடுமாறினாள் செல்லம்மாள்.

"நான் முருகேசம் பிள்ளையின் மகன் பாலு. உங்கள் மகன். சமீபத்தில் தான் தெரிந்து கொண்டேன், நீங்கள் உயிரோடிருப்பதை. பார்த்துப் போகலாமென்று வந்தேன்" என்று கூறிய மைந்தனை ஆர்வம் பொங்க விழித்துப் பார்த்தாள். உச்சி முதல் உள்ளங்கால் வரையும் உன்னிப்பாய்க் கவனித்து அவன் ஒவ்வொரு அங்க அசைவிலும் தன் கணவனது பிரதிபலிப்பைக் கண்டு பூரித்துப் போனாள். ஸ்தம்பித்த நிலையில் நின்ற அவள் அவனுக்கு எவ்வித மறுமொழி அளிப்பதெனவே தெரியாமல் தடுமாறி நின்றாள்.

அதன் பின்பு பலமுறை வந்து போய்விட்டான். அப்படி வந்தபோது தான் அவனுடைய நிர்ப்பந்தத்தின் பேரில் தனது வாழ்க்கை வரலாறு முழுவதையும் விளக்கிக் கூறியிருந்தாள்.

பெரியம்மாவின் சோக சரிதத்தைக் கேட்டது முதல் அவன் மனம் பலப்பல எண்ணங்களால் குழம்பித் தவித்தன. ஒரு பெண்ணை அநியாயமாய்த் தவிக்கவிட்ட பாதகரின் மகனா நான் என்று நினைந்து அவன் நெஞ்சம் குமுறுவான். அப்படிப்பட்ட தந்தையின் முகத்தில் விழிக்கவும் விரும்பாதவனாய்த் தனியாக வசிக்கத் தொடங்கி விட்டான். அதோடு அவன் மனம் திருப்தி அடையவில்லை. தன் பெரியம்மாவைக் கொடுமைப் படுத்தியவர்களையெல்லாம் பழிக்குப் பழி வாங்கக் கருதியது அவன் மனம்.

"பெரியம்மா, உங்களுக்கு ஒரு சகோதரன் இருப்பதாகக் கூறினீர்களே! அவர் எங்கிருக்கிறார் தெரியுமா!" என்று கேட்டு வைத்தான் பாலு.

"இங்கிருந்து பத்து மைல் தூரத்திலுள்ள கிராமத்தில்தான். அவருக்குக் கூடக் கல்யாணத்துக்கு ஒரு பெண் இருக்கிறது. அதற்காக வரனுக்கு அலைந்து கொண்டிருப்பதாகக் கேள்வி."

அப்பொழுது அவன் கேள்விப்பட்ட விஷயம் அவன் மனத்துக்குச் சரியான யோசனையைத் தேடிக் கொடுத்தது.

"அப்படியா!" என்று கேட்டவன் சிறிது நேரம் பலமான சிந்தனையில் மூழ்கிப் போனான். "ஏன் பெரியம்மா, அந்தப் பெண்ணை நான் மணந்து கொண்டால் உங்களுக்குச் சந்தோஷம் தானே!" என்று கேட்டான்.

"கரும்பு கசக்குமா! என்று கேட்பது போலிருக்கிறதப்பா, உன் கேள்வி. எனக்குக்கூட உன்னைப் பார்த்தது முதல் அதே சிந்தனை தான். ஆனால்..."

"ஆனாலென்ன, பெரியம்மா! அப்பாவிடம் கூறி நானே முடித்துவிட்டு வந்து விடுகிறேன். விலாசம் மட்டும் எழுதிக் கொடுங்கள்" என்று கேட்டு வாங்கிக் கொண்டான்.

*

அலையாமல் திரியாமல் வரன் தானாகவே வீட்டு வாசலில் வந்து முடிந்ததை நினைந்து உள்ளம் மகிழ்ந்தார் சொக்கலிங்கம். தம் மகள் குமுதாவின் அதிர்ஷ்டம் எந்தப் பெண்ணுக்குமே இருக்க முடியாதென்று மனைவியிடம் ஆயிரம் தடவை கூறிக் கொண்டார். அதுவும் தன் தங்கையின் பிள்ளைக்கே! அவள் பிள்ளையானால் என்ன அவள் சக்களத்தியின் பிள்ளையானால் என்ன! எல்லாம் ஒன்றுதான் என்பது அவரது அப்போதைய வேதாந்தம்.

அவள் பிள்ளைக்குத் தன் பெண்ணைக் கொடுப்பதன் மூலம் ஆதியில் தங்கைக்குச் செய்த தீமைக்குப் பரிகாரமாகவும் இருக்குமென்பது அவரது உள்ளூற எண்ணம். அதை வாய்விட்டு மனைவியிடம் கூறிவிட முடியுமா!

அவளுக்கும் மாப்பிள்ளைப் பிள்ளையாண்டானிடம் பரம திருப்தி. கண்ணுக்கு லட்சணமாக இருந்ததோடு படித்து உத்தியோகம் என்று ஒன்றையும் ஏற்றுக் கொண்டிருக்கிறான். அத்துடன் சொத்து வகையிலும் மோசமில்லை. மேலும் ஆதி நாளில் மாமியார் மகளுக்கு அதிகப்படியாக வாரிக் கொடுத்துப் பொருளை நஷ்டப்படுத்தி விட்டாள் என்று வருத்தப்பட்டதுண்டு. இப்பொழுது தன் மகள் அதே வீட்டில் போய் அதே பொருள்களை ஆளப் போகிறாள் என்பதை நினைந்து ஒருவாறு திருப்தி அடைந்திருந்த அவள் மனம் அதற்காக வேறும் அந்த வீட்டிலேயே சம்பந்தம் முடிய வேண்டுமென்று படாதபாடு பட்டாள்.

"பெரியம்மா! அந்தப் பெண்ணையே தீர்மானித்து விட்டேன். இப்பொழுதுதான் என் மனம் திருப்தி அடைந்தது" என்று கூறிக் கொண்டே அங்கிருந்த கட்டிலில் அமர்ந்தான் பானு.

"உனக்குப் பெண் கொடுக்க யார்தான் மறுக்கப் போகிறார்கள்! அப்படியே இந்தப் பெண் முடியாவிட்டால் கூட வேறு பெண்ணே அகப்படாதா என்ன!" என்று கேட்ட செல்லம் ஒரு கணம் அர்த்த புஷ்டியோடு தன் சக்களத்தியின் மகன் பானுவைப் பார்த்தாள்.

"வேறு பெண் கிடைக்கும், பெரியம்மா! ஆனால் பழி வாங்கும் சந்தர்ப்பம் கிடைக்காது அல்லவா!" என்று பானு கூறவும் செல்லம் திடுக்கிட்டு நின்றாள்.

"என்ன சொன்னாய்!" என்று தடுமாறி விழித்த பெரியம்மாவுக்கு ஆறுதலளிக்கும் முறையில் ஆத்திரத்தோடு பேசினான் பானு.

"ஆமாம், பெரியம்மா! உங்கள் கஷ்டத்தையும் தனிமையையும் பழித்துக் காட்டிய அவர்கள் பெண்ணை நான் மணந்து கொண்டு அவளை வாழாவெட்டியாக்கிப் பழி தீர்த்துக் கொள்ளப் போகிறேன்" என்று பானு கூறியதைக் கேட்டதும் தூக்கி வாரிப் போட்டது, செல்லத்துக்கு.

"அதெல்லாம், கூடாதப்பா! பெண் பாவம், ஒருபொழுதும் சும்மா விடாது!"

"பாவமாவது புண்ணியமாவது. அவர்கள் பாவ புண்ணியம் நினைத்து நடந்து கொண்டார்களா! பெண் பாவம். ஒப்புக் கொள்ளுகிறேன். அப்படியானால் நீங்கள் பெண்ணில்லையா! உங்கள் பாவம் அவர்களைச் சும்மா விட்டுவிடுமா!"

ஏதோ பேசினான் பானு. ஒன்றுமே பதியவில்லை அவள் மனத்தில். 'தன் அண்ணனின் பெண் வாழா வெட்டியாகி வாழ்க்கை முழுவதும் அவதியுறுவதா! கூடாது; கூடவே கூடாது. அதற்குக் காரணம் நாமாகவே இருக்க வேண்டுமா! கடவுளே இது என்ன சோதனை!' என்று மனம் கலங்கினாள். எப்படியும் இந்தக் கல்யாணம் நடக்காமல் தடுத்து விடவேண்டியது தான். தன்னுடைய கடமை என்ற எண்ணம் உந்தவே காலம் தாழ்த்தாமல் கடமையைச் செய்ய விரைந்தாள். வெள்ளம் பெருகிப் போகுமுன் அணை போட்டுத் தடுத்து விடக் கருதி விஷயத்தைச் சுருக்கமாக எழுதி அண்ணனுக்கு அனுப்பினாள்.

"உங்கள் தங்கைக்கு இருக்கும் துர் எண்ணம் யாருக்குமே இருக்க முடியாது. தான் கெட்டது மல்லாமல் பிறர் வாழவும் சகிக்க மாட்டாமல் தடங்கல் செய்கிறாளே!" என்று வசை மாரி பொழிந்து கொண்டிருந்தாள் சொக்கலிங்கம் பிள்ளையின் மனைவி காசியாரம்மாள்.

"அட ஏன் சும்மா குதிக்கிறே! ஏதாவது விஷயமில்லாமல் என் தங்கை எழுதாது!"

"தங்கை விஷயத்தை அண்ணன்தான் மெச்சிக்கணும். அண்ணன் மகள் நல்ல இடத்தில் வாழ்க்




மானேஜர்: நான் அப்போதே நினைத்தேன்! மேஜையின் மேல் 'பைல்'களை அடுக்கிக் கொண்டு, அதன் மறைவில் அசோகாவோடு வெற்றிலை போட்டுக் கொண்டு ஆனந்தமாக வேலை செய்யாமல் உட்கார்ந்திருப்பீர்கள் என்று!

Adrst

கைப் பட்டு நன்றாக இருக்கலாமா என்ற கெட்ட எண்ணம் வேறென்ன !" என்று ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்தாள் நாச்சியார்.

தன் விவாக விஷயமாய்க் கலந்து பேச வந்த பாலு தற்செயலாக அவர்கள் சம்பாஷணையைக் கேட்க நேர்ந்தது. விஷயம் முழுவதையும் அறிய முடியாவிட்டாலும் பெரியம்மா ஏதோ கடிதம் எழுதி யிருக்கிறார்கள் என்பதை மட்டும் அவனால் அறிய முடிந்தது. அந்தக் கடிதம் என்னவா யிருக்கலாம். ஒருவேளை தன் கல்யாணத்துக்குத் தடையாக எழுதி அனுப்பி யிருக்கலாமோ! அப் படித்தான் ஊகிக்க முடிந்தது, அவர்கள் சம்பா ஷணையின் மூலம். வந்த சுவடே தெரியாமல் அவ் விடம் விட்டகன்று நேராகத் தன் பெரியம்மாவின் வீட்டை நோக்கி நடந்தான்.

" உங்கள் அண்ணாவுக்கு நீங்கள் ஏதாவது எழுதி னீர்களா, பெரியம்மா !" என்ற கேள்வியுடன் உள்ளே நுழைந்த பாலுவைக் கண்டு திகைத்து விட்டாள் செல்லம்.

" கடிதமா ! யார் சொன்னது !" இவனுக்கு எப்படி அது தெரிந்தது என்ற யோசனையில் ஆழ்ந் தது அவள் மனம்.

" என்னிடம் மறைக்க வேண்டாம், பெரியம்மா! நான் அங்கிருந்த சமயம் உங்கள் கடிதம் கிடைத்தது. ஆனால் என்ன எழுதி இருக்கிறீர்கள் என்பதை மட்டும் தெரிவித்து விடுங்கள் " என்று பாலு கூறி முடித்ததும் ஒரு வித முடிவுக்கு வந்தாள் செல்லம்.

இனியும் மறைத்துப் பயனில்லை என்று உண் மையைக் கூறத் துணிந்தாள் செல்லம்.

" அப்பா பாலு ! நீ என்னை எப்படி நினைத்துக் கொண்டாலும் சரி என் செய்கைக்காக என்னை வெறுத்து உதறித் தள்ளினாலும் சரி. அநியாய மாக ஒரு பெண்ணின் வாழ்வு பாழாவதை அறிந் தும் அதைத் தடுக்க முயற்சி செய்யாமலிருக்க என்னால் முடியவில்லை. நம்மால் உதவி செய்ய முடியும் என்று தெரிந்தும் செய்யாமலிருந்தால் அது மனிதத் தன்மைக்குப் புறம்பானது என்று என் மனத்துக்குப் பட்டதால் நான் செய்ய வேண் டிய கடமையைச் செய்து முடித்து விட்டேன். என் அண்ணனின் மனைவி என்னை ஏளனம் செய்து என் மனத்தைப் புண் படுத்தினாள் என்பது உண்மைதான். ஆனால் அதற்காக ஒரு குற்றமு மறியாத அவள் பெண் தண்டனை அநுபவிப்பதை என் மனம் ஒப்பவில்லை. ஆகவே விஷயத்தை அவர்களுக்கு எழுதி விட்டேன். அதற்காக நீ என்னை மன்னித்துவிடு. மன்னிக்கத்தான் வேண் டும். உன் பெரியம்மாவின்மீது உண்மையான அன்பிருக்குமானால் நீ மன்னிப்பாயென்றே எதிர் பார்க்கிறேன் " என்று கூறினாள் செல்லம்.

" மன்னிக்க வேண்டுமா ! நீங்கள் அல்லவா பெரியம்மா என்னை மன்னிக்க வேண்டும்! உங்க ளுக்கிருக்கும் பெருந்தன்மையில் ஒரு துளி எனக் கில்லாமல் போய்விட்டதே என்பதுதான் என் வருத்தமெல்லாம். உங்களை அலட்சியம் செய்த அவர்களை நீங்களே மன்னிக்கத் துணிந்து விட்ட பிறகு என் மனம் மட்டும் அப்படியே இருக்குமா, பெரியம்மா ! என் போக்குக்கும் அநுசரணை காட்டி என்னை மிருகமாக்காமல் மனிதனாக்கிய பெருமை உங்களையே சாரும், பெரியம்மா" என்று கூறிய பாலுவை அன்பும் ஆதரவும் பொங்க நோக்கினாள் செல்லம்.

" எப்பொழுது தவறை யுணர்ந்து மனம் திருந்து கிறோமோ அப்பொழுதே மனிதர்களாகி விடுகிறோம் பாலு ! நீ மட்டும் இதற்கு விதிவிலக்கல்ல. எனக்கு ஒன்று தோன்றுகிறது, பாலு ! பேசிய பெண் விட்டுப் போகாமல் அவளையே நீ மணந்து நீங்கள் சுக வாழ்வு வாழ்வதைக் கண்ணால் காண வேணுமென்பது எனது ஆவல். நீ விரும்பினால்..."

" என் விருப்பம் என்ன பெரியம்மா ! உங்கள் விருப்பம் எதுவோ அதுவேதான் என் விருப்பமும்" என்று பாலு கூறிவிடவே அப்பொழுதே அந்தச் சந்தோஷச் செய்தியை அறிவிக்க அண்ணன் வீட் டைத் தேடிப் புறப்பட்டு விட்டாள் செல்லம்.

## பம்பாயில் புது ஆலயம்

வடக்கு பம்பாயில் உள்ள ஆஸ்திக சமாஜம் ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி யின் ஆலயமாக மாறி யிருப்பது அங்குள்ள பக்தர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சி யைக் கொடுத்திருக்கிறது. மேற்படி சமாஜத்தினர் 1924ம் வருஷத்திலிருந்து மத, கலாச்சார, சமூதாய அபிவிருத்தி அலுவல்களில் ஈடுபட்டு எல்லோ ருடைய நன்மதிப்புக்கும் பாத்திரமாகி வந்திருக்கிறார்கள். அவர்கள் இப் போது சமாஜ மண்டபத்துக்குள்ளேயே கர்ப்பகிருஹத்தை நிர்மாணித்து, அதில் ஸ்ரீ ராமர், சீதை, லக்ஷ்மணர், ஹநுமார் விக்கிரகங்களைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். அவர்களுடைய இந்தப் புனித முயற்சிக்கு காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சார்ய சுவாமிகளின் ஆசீர்வாதமும் கிடைத்திருக்கிறது. மார்ச் 2-ந் தேதி ஆரம்பமாகி யுள்ள பிரதிஷ்டை வைபவம் 23-ந் தேதி ஸ்ரீராம நவமி யன்று முடிவுறும்.

சாஸ்திர ரத்னாகர மகா மஹோபாத்யாய எஸ். அனந்தகிருஷ்ண சாஸ்திரிகள், சாஸ்திர ரத்னாகர பண்டிதராஜ டி. ஏ. வெங்கடேசுவர தீக்ஷிதர் முதலிய பிரபல பண்டிதர்களின் மேற்பார்வையில் வேத, சாஸ்திர ஆகமங் களின்படி சென்ற ஐந்தாம் தேதி கும்பாபிஷேக வைபவம் நடைபெற்றது. அதை ஒட்டி இருபத்திரண்டாம் தேதி புருஷ ஸூக்த ஹோமம் நடைபெறும்.

# நாள் முழுவதும்

காலை வேளையில்



# புத்துணர்ச்சி

பிற்பகலில்



# அளிக்க...

இரவில்






குளுமையான நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கே பௌடர்களை உபயோகியுங்கள்

இரண்டு நேர்த்தியான அளவில் பௌடர்கள்




ஹிமாலயா புக்கே ஸ்னோ எல்லா சீதோஷ்ண நிலைகளிலும்
சருமத்தைப் பாதுகாக்கிறது.

இராஸ்மிக் கம். லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தவை HBP. 8-X30 TM

# மருந்து எங்கே?

கடகம்

நான் புதிதாக அந்த ஊருக்கு மாற்றுதலாகிப் போனேன். குடியிருக்க வீடு வேண்டுமென்று நான் அலையாத தெரு எதுவும் பாக்கியில்லை. ஊரெல்லாம் சல்லடை போட்டுச் சலித்துப் பார்த்து, ஒன்றும் கிடைக்காமல் அலுத்துப் போனேன். வீடு பார்க்கும் எண்ணமும் தானாகவே என்னிடமிருந்து நழுவிக் கொண்டது.

அப்பொழுதுதான் ஒரு சிறிய அதிர்ஷ்டம் என்னைத் தேடி வந்தது. ஓட்டலில் காப்பி சாப்பிடப் போனபோதுதான். அங்கே ஒருவருக்கு எதிரில் உட்கார்ந்தேன். அவரைப் பார்த்ததும், அவரிடம் எனக்குக் குடியிருக்க வீடு கிடைக்காத குறையைச் சொல்லி ஒரு குரல் அழவேண்டும் போல் தோன்றியது.

நல்ல வேளை! எனக்கு அழுகை வரவில்லை. அதற்குப் பதிலாக, அவரைப் பார்த்து "சார், இந்த ஊரில் எங்கேயாவது வீடு காலியிருந்தால், உங்களுக்குத் தெரிந்திருந்தால், சொல்லுங்கள்" என்று கூறினேன்.

"என் காலியிருக்கும் வீட்டுக்கே வந்து விடுங்கள். எனக்கும் மாற்றலாகி விட்டது. இன்னும் இரண்டு மூன்று நாட்களில் போய் விடப் போகிறேன்" என்றார் அவர்.

கண்ணில்லாதவன் கண் பெற்றால், அடையும் இன்பம் என்று சொல்வார்களே, அதை விடப் பன்மடங்கு எனக்கேற்பட்ட இன்பத்தை விவரிக்க வார்த்தைகளில்லை.

அடேயப்பா, அந்த வீட்டை எனக்குக் கொடுக்க அந்த வீட்டுக்காரர் என்னென்ன தகராறு, கிராக்கி பண்ணினார் தெரியுமா?

அந்த வீட்டை வர்ணிக்கத் தொடங்கினால், இப்படி, அப்படி என்று எந்த உபமான, உபமேயங்களைக் கொண்டும் சொல்லிவிட முடியாது. வீடு அத்தனை அறுந்த பழசு. ஓடு மாற்றி மாமாங்கக் கணக்காகத்தானிருக்கும். மழை காலத்தில் வீடெல்லாம் ஒரே ஒழுக்கு. வெய்யில் காலத்தில் ஒரே புழுக்கம். எந்த க்ஷிமிஷமும் நம் தலையில் விழுந்து விடுமோ என்ற பயம் வேறு.

எனக்கு முன்பு குடியிருந்தவர் ஒரு எச்சரிக்கையையும் சொல்லிப் போனார்.

"ஸார், ஏதாவது உயரே இருந்து பொத்தென்று விழுந்தால், அலட்சியமாக இருந்து விடாதீர்கள். இந்த வீட்டில் தேள் பயம் அதிகம். இரவில் கையில் ஒரு டார்ச்சு லைட்டு இருப்பது நல்லது" என்று அவர் சொன்னதும், அதைக் கேட்டுக் கொண்டிருந்த என் மனைவி என்னைச் சும்மா விடவில்லை.

"போயும், போயும் இதை விடென்று பார்த்தீர்களே, ரொம்ப சமர்த்துதான் போங்கள்" என்று கூறி அவள் தன் தலையைத் தோளில் அடிக்கடி இடித்துக் கொள்வாள்.

"பேயிருக்கும் வீட்டில் வேண்டுமானாலும், இருந்து விடுவேன். தேளிருக்கும் வீடு என்றால் பயமாயிருக்கிறது. முதல் வேலையாக இதைக் காலி பண்ணப் பாருங்கள். இந்தக் குழந்தை குட்டிகளை வைத்துக் கொண்டு, எப்படி இதில் காலந் தள்ளுவது? நம்மைத் தேள் கொட்டி விட்டாலும் பரவாயில்லை. குழந்தைகளைக் கொட்டி விட்டால், துடி துடித்துப் போய் விடுவார்களே"— இதைச் சொல்லும்போது என் மனைவி துடித்ததைப் பார்த்தால், அவளைத் தேள்தான் கொட்டி விட்டதோ என்று எண்ணிப் பயப்படும்படியிருந்தது.

"நமக்கென்று, புது வீடு கட்டி வைத்துக் கொண்டு, 'வாருங்கள், வாருங்கள்' என்று வெற்றிலை பாக்கு வைத்து அழைப்பவர்களைத்தான் நானும் தேடிக் கொண்டிருக்கிறேன். யாரும் கண்ணில் படமாட்டேன் என்கிறார்களே, நான் என்ன செய்வது? இதை விட்டால், இதைவிட வேறு பழம் வீடு கூடக் கிடைக்காது போயிருக்கிறதே! என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?" என்று கொஞ்சம் கடுமையாகவே சொன்னேன்.

"சொல்லுகிறது என்னவாம், வேறு வீடு பார்க்கிறது. கிடைக்காவிட்டால், கடைக்குப் போகிறது. நல்ல தேள் கடி மருந்தாய் வாங்கிக் கொண்டாவது வருகிறது. கையில் மருந்து இருந்தால் ஆபத்துக்கு உதவும். கொஞ்சம் தைரியமாக இருக்கலாம்" என்றாள்.

"நல்ல வேளை மருந்தோடு விட்டாளே, உங்களுக்கு வேறு வீடு கிடைக்கும் வரையில், நானும் குழந்தைகளும், என் பிறந்த வீட்டுக்குப் போயிருக்கிறோம். ஓட்டலில் சாப்பிட்டுக் கொண்டு சுகமாக இருங்கள்" என்று சொல்லிப் பிறந்த வீட்டுக்குப் புறப்படாமல் இருந்தாளே, அதுவரை எனக்குத் திருப்திதான்.



குமாஸ்தா:—உம்முடைய கேஸுக்காக நம்ம வக்கீல் சீக்கிரம் ஆஜராக வேண்டும் என்னும் அவசரத்தில் கோர்ட்டுக்குத் தலையில் ஒன்றும் இல்லாமல் புறப்பட்டு விட்டார், பார்த்தீரா?

கட்சிக்காரர் (கோபத்துடன்):— தலையிலே ஒன்றும் இல்லாமல் கோர்ட்டுக்குப் போனால் அங்கே போய் என்னத்தை ஐயா, பேசப் போகிறார்? என்னுடைய கேஸ் அல்லவா தோற்றுப் போய் விடும்!



ஒருவர் :-ஐயா, அந்த எலிப் பொறியைச் சீக்கிரம் ஒருவிலை சொல்லிக் கொடுங்கள்! எனக்கு அவசரமாக ரயிலைப் பிடிக்கணும்!

கடைக்காரன் :—ரயிலைப் பிடிக்க அது உபயோகப் படாதுங்க! அதில் எலியைத்தான் பிடிக்கலாம்!

வேறு வீடு தேடி நான் அலைந்ததுதான் மிச்சம். எந்தப் புண்ணியாத்மாவும் எனக்கு வீடு தருகிறேன் என்று முன் வரவில்லை.

அடுத்தபடியாக, தேள் கடி மருந்து வாங்குவதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை. நல்ல மருந்தாகப் பார்த்து வாங்கலாம் என்றாலும், நம்பிக்கையான மருந்து வியாபாரியும் கிடைக்கவில்லை. எனக்குத் தெரிந்த இங்கிலீஷ் மருந்துக் கடையில் விசாரித்தும், நான் கோரிய நல்ல தேள் கடி மருந்து கிடைக்காது என்பதுதான் தெரிந்தது. தெருவில் கூட்டம் கூட்டி, பாம்புக்கடி மருந்து, தேள் கடி மருந்து விற்கும் சாமர்த்தியக்காரர்களிடம் மருந்து வாங்கவும் எனக்கு நம்பிக்கை ஏற்படவில்லை.

இரவில் சாப்பிட்டு விட்டு, படிப்போம் என்று உட்கார்ந்தால், "என்னமோ பொத்தென்று கீழே விழுந்தது. கொஞ்சம் டார்ச் லைட்டை அடித்துப் பாருங்கள். தேளாக இருக்கப் போகிறது?" என்று என் மனைவி பயம் காட்டி விடுவாள்.

போய்ப் பார்த்தால், பல்லி கீழே விழுந்து ஊர்ந்து கொண்டிருக்கும். இப்படி இந்தப் பல்லி எத்தனையோ தடவை விழுந்து, எங்களைப் பயம் காட்டிக் கொண்டிருந்தது.

அந்த நண்பர் சொன்னதுதான் பொய்யோ, அல்லது ஏதாவது சத்தியத்துக்குக் கட்டுப்பட்டோ, எந்தத் தேளும் எங்கள் கண்ணில் படவில்லை. அந்த மட்டும் பிழைத்தோம் என்று நானிருந்தேன். ஆனால் என் மனைவியோ "இன்னுமா உங்களுக்குத் தேள் கடி மருந்து கிடைக்கவில்லை?" என்று என்னைத் தினமும் நச்சரித்துக் கொண்டிருந்தாள்.

மறுபடியும் மருந்தைத் தேடியலைந்தேன். ஒருநாள், எனக்கு மிகத் தெரிந்த மருந்துக் கடைக்குப் போயிருந்தேன். "தேள் கடிக்கு நிவாரணம். கைகண்ட மருந்து' என்று கொட்டை அச்சு எழுத்துக்களுடன் தொங்கிய போர்டு என் கண்ணில் பட்டது. சஞ்சீவி மலையைக் கண்டவன் போல எனக்கேற்பட்ட மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது.

ஒரு ரூபாய் கொடுத்து மருந்தை மனத் திருப்தியோடு வாங்கிக் கொண்டேன்.

அந்த மருந்தைப் பார்த்த என் மனைவிக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி எல்லையைக் கடந்து, அதற்கு அப்பாலும் போய்விட்டது.

ஒரு நாள் இரவு, சாப்பாடு முடிந்து, நான் சுவாரஸ்யமாய்ப் பாதியில் விட்டு வந்த நாவலை மறுபடியும் படித்துக் கொண்டிருந்தேன். குழந்தைகள் தூங்கிக் கொண்டிருந்தன. அவள் மட்டும் சமையலறையில் ஏதோ வேலையாக இருந்தாள்.

திடீரென்று என் மனைவி "உஸ்" கொட்டுவது என் காதில் வந்து விழுந்தது. அதைத் தொடர்ந்து அவள், "அப்பாடி, அம்மாடி, உஸ், உஸ், ஐயோ, அம்மாடி" என்று அலறியதைக் கேட்டு, நான் எழுந்து போனேன்.

"என்ன, என்ன?" என்று பரபரப்புடன் கேட்டேன், "கால் கண்டு விரலில் தேள் கொட்டி விட்டது, பாழும் தேள்" என்று அழ ஆரம்பித்து விட்டாள்.

"இரு, மருந்து எடுத்து வருகிறேன்" என்று அலமாரியில் போய்ப் பார்த்தேன். மருந்து சீசா காணப்படவில்லை.

"எங்கே வைத்தாய் மருந்தை?" என்று என் மனைவியிடம் கேட்டேன். "அங்கே தான் வைத்தேன். சரியாகப் பாருங்கள்" என்று கத்தினாள்.

அலமாரியில் ஒரு இடம் பாக்கியில்லாமல் தேடினேன். அறையிலும் தேடினேன். கடைசியில் ஒரு மூலையில் அந்த அருமைத் தேள் கடி மருந்து சீசா உடைந்து கிடந்தது.

"என்ன இது, மருந்து சீசா இங்கே உடைந்து கிடக்கிறது? இது யார் வேலை?" என்று இரைந்து கத்தினேன்.

"சின்னப் பையன் சீனு, சாயந்திரம் அலமாரியைக் குடைந்து கொண்டிருந்தான். அவனுடைய வேலை போல இருக்கிறது" என்றாள் அவள் உஸ் போட்டுக் கொண்டே.

"இரு, டாக்டரிடம் மருந்து வாங்கி வருகிறேன்" என்று நான் டாக்டரிடம் ஓடினேன்.

டாக்டர் கொடுத்த மருந்தைப் போட்டேன். அவளும் "உஸ், உஸ்" என்று போட்ட சத்தத்தை நிறுத்திக் கொண்டாள்.

நல்ல தேள் இது! மருந்து வீட்டில் இல்லாத வரைக்கும் யாரையும் கொட்டவில்லை. மருந்து வந்தவுடன், தன் கைவரிசையைக் காண்பித்தது. தேள் அந்த மருந்தைப் பரீட்சை செய்து பார்க்க நினைத்ததோ என்னவோ? எனக்குத் தெரியவில்லை. அந்த மருந்துக்கும் என் சாமர்த்தியத்துக்கும் என் மனைவியிடம் நல்ல பெயர் வாங்க முடியாமல் போய்விட்டதே என்று வருந்தினேன்.

அது நல்ல மருந்தோ, இல்லையோ மறுநாளே இன்னொரு சீசா வாங்கிவிட்டேன். மேலும் ஒரு ரூபாய் தண்டம்!

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 53. சந்தேக விளக்கம்

**கேள்வி:** வயிற்றில் காஸ்டிரிக் தொந்தரவு உள்ளவர்கள் எந்தெந்த ஆசனங்களைச் செய்ய லாம்! உணவுப் பத்தியமுண்டா!

**பதில்:** இந்த வியாதி ஆசனங்களால் குண மடையுமென்றாலும், முக்கியமாய் உணவுப் பத்தி யம் கட்டாயம் அனுசரித்துத்தான் வரவேண்டும். முக்கியமாய் வாயுவை உண்டாக்கும் ஆகாரங் களைச் சாப்பிடக் கூடாது. காரம், மசாலை, பெருங்காயம், கடுகு தாளிப்பு முதலிய உறுத்தும் வஸ்துக்களைச் சேர்க்கக் கூடாது. புளிக்குப் பதில் எலுமிச்சை சேர்க்கலாம். நெய், எண்ணெய் முதலியவைகளில் வெந்த, பொறித்த பலகாரங் களைச் சாப்பிடக் கூடாது. ஆவியில் வெந்தது சாப்பிடலாம். முழுத் தவிட்டுடன் கூடிய அரிசி யைக் கஞ்சி வடிக்காமல் சமைத்துச் சிறிதளவும் மற்றும் காய்கறி கீரை வகைகள் அதிகமாயும் சாப்பிட வேண்டும். முதன் முதலில் இவைகளை ஜீரணமாகும் அளவு சாப்பிட்டு, ஆசனப் பயிற்சி களால் உடலில் தெம்பு ஏற்பட்டபின் அளவை அதிகமாக்கலாம். பால் அருந்துவது நல்லது. இப் பத்தியங்களுடன் புஜங்காசனம், பஸ்சிமோத் தானாசனம், சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், சிரசாசனம், அர்த்த மத்ஸ்யேந்திராசனம், திரி கோணாசனம், சாந்தி ஆசனம் இவைகளைச் செய்ய வேண்டும். நாடி சுத்தியும் செய்ய வேண்டும்.

**கேள்வி:** முழுத் தவிட்டுடன் கூடிய அரிசியை உபயோகிக்க வேண்டும் என்று சொல்லியிருக் கிறீர்கள். அப்படியென்றால் முழுத் தவிட்டுடன் கூடிய அரிசியை அப்படியே மென்று சாப்பிடுவது என்று அர்த்தமா! அல்லது அம்மாதிரி அரிசியைச் சாதமாகச் சமைத்து உபயோகிப்பது என்று அர்த்தமா என்பதை விளக்க வேண்டும்.

**பதில்:** நல்ல கேள்வியே! அன்பர் தவிட்டுடன் கூடிய அரிசியை உபயோகிக்க வேண்டும் என்று ஆரோக்கிய ரகசியத்தில் பல இடங்களில் வருவ தைப் படித்து, அவர் தின சரி தவிட்டுடன் கூடிய அரிசியை ஒரு பிடி எடுத்து மென்று மென்று சாப்பிடு கிறாராம். இவருடைய ஆரோக்கிய ஆர்வத்துக்கா கச் சந்தோஷமும், தப்பர்த் தம் செய்து கொண்டதற் காக வருத்தமும் அடை கிறேன். அரிசியை நாம் எப் பொழுதும் அப்படியே உப யோகிப்பதில்லை. சாதமாகச் சமைத்துத்தான் உபயோ கிக்கிறோம். அந்த அர்த்தத் துடன்தான் சொல்லப் பட் டது. எனவே முழுத் தவிட் டுடன் கூடிய அரிசியைக் கஞ்சி வடிக்காமல் அப்ப டியே பொங்கிச் சாப்பிட்டு வரவேண்டு மென்பதைத் தெரிந்து கொள்ளவும்.

**கேள்வி:** நான் 'கல்கி'யில் வரும் ஆரோக்கிய ரகசியக் கட்டுரைகளைப் படித்து ஆசனங்களைச் செய்து பல குணங்கள் கண்டிருக்கிறேன். ஆனால் உணவில் தாங்கள் சொல்வதைப் போல முழுத் தவிட்டுடன் அரிசியைக் கஞ்சி வடிக்காமல் சமைத்துச் சாப்பிடத்தான் முடியவில்லை. என் மனைவியிடம் சொல்லிச் சில சமயம் அம்மாதிரியும் கஞ்சி வடிக்காமல் சமையல் செய்தாள். சாதம் ஒரே மொத்தையாய்ப் போய் விடுகிறது. சில சமயம் ஒன்றும் பாதியும் வேகிறது. அடி பிடித் துக் கொள்ளுகிறது. எனவே என் மனைவி மறுபடி யும் தன் வழியே அதாவது கஞ்சி வடிக்கும் வழியையே கடைப்பிடித்து வருகிறாள். எனக்கு வடித்த கஞ்சியைப் பார்க்கும் போதெல்லாம் சத்து வீணாகி விடுகிறதே என்று வருத்தமாய் இருக்கிறது. தாங்கள் தயவு செய்து சாதம் சமைக்கும் விதத்தைப் படமுடன் ஒரு தடவை வெளியிட்டால் நானும், மற்றும் என்போன்ற பல்லாயிரக் கணக்கானவர்களுக்கும் உபயோக மாய் இருக்கும் என்பது என் கோரிக்கை.

**பதில்:** நம் தென்னாட்டில் அநேகமாய் எல்லோர் வீட்டிலும் இட்டிலி அண்டா இருக்கத்தான் செய்யும். அதன் உள்ளே தாராளமாய் வைத்து எடுக்கக் கூடிய பாத்திரம் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டும். உதாரணமாக, அப்பாத்திரம் இரண்டு படி ஜலம் கொள்ளும் என்றால் அதில் அரைப்படி அரிசியும் ஒரு படி ஜலமும் விட்டு, மீதி அரைப்படி கொள்ளக் கூடிய இடத்தைக் காலியாக விட்டு விடவேண்டும். அதாவது கால் பங்கு அரிசியும் அரைப் பங்கு ஜலமும் கால் பங்கு காலியாகவும் விட்டுவிட வேண்டும். அரிசியை ஒரு தரம் மட்டும் தண்ணீர் விட்டுக் கழுவி மேலே சொன்ன அளவு தண்ணீர் விட்டு அப் பாத்திரத்தை ஒரு தட்டு போட்டு மூடி இட்டிலி பானைக்குள் வைத்துவிட வேண்டும். இட்டிலிப் பானையில் நாலு ஐந்து அங்குல உயரம் ஜலம் விடவேண்டும். சித்திரத் தைக் கவனியுங்கள். இட்டி லிப் பானைக்குள் அதிகமாய் ஜலம் விட்டால் அடுப்பில் வைத்துக் கொதிக்கும் போது உள்ளே வைத்திருக் கும் அரிசிப் பாத்திரத்திற் குள் ஜலம் போய்விடும். அதனால் சாதத்திற்கு ஜலம் அதிகமாய் விடும். ஆனால் இட்டிலி அண்டாவில் விடக் கூடிய தண்ணீர் அதிகம் குறைந்து விட்டாலோ சாதம் வேகாததற்கு முன் தண்ணீர் கண்டி, அடி பிடித்து விடும். ஆகையால் ஒரு கணிசமான அளவில், கொதித்தாலும் அரிசியிருக் கும் பாத்திரத்துக்குள் சென்று விடாதபடி தண் ணீர் விடவேண்டும். அடுப் பில் ஏற்றிக் கொதிக்க ஆரம்பித்த பின் ஒரு மணி நேரம் அப்படியே கொதிக்க




1. அரிசி. 2. ஜலம். 3. இட்டிலி அண்டா ஜலம். 4. பாத்திரத்தில் காலி இடம். 5. ஜ இட்டிலி அண்டாவில் காலி இடம். 6. பாத்திரத்தின் மேல் தட்டு.



“என்னைக் கிணற்றிலிருந்து எடுத்துக் காப்பாற்றி விட்டதாக உங்களுக்கு ஐந்து ரூபாய் கொடுக்கலாம் என்று நினைத்தேன். ஆனால் என்னிடம் பத்து ரூபாய் நோட்டாக இருக்கிறது!”

“அதற்கென்ன! இன்னொரு தடவை கிணற்றில் விழுந்து விடுங்களேன்!”

விட்டுப் பிறகு இறக்கிக் கொள்ளலாம். அல்லது ஒரு மணி நேரம் ஆனபின் விறகை இழுத்து அணைத்துவிட்டு அப்படியே அனலில் வைத்திருந்து வேண்டியபோது எடுத்துச் சாப்பிட்டால் சூடாக இருக்கும். இதைக் கரி அடுப்பிலும் சமைக்கலாம். கரி அடுப்பில் வேண்டிய கரி போட்டு விட்டால், அது எரிந்து தணிவதற்கும், சாதம் வேகுவதற்கும் சரியாய் இருக்கும். எப்படியும் ஒரு மணி நேரம் வேக வேண்டும். இம்மாதிரி வேகும் போது, இடையிடையில் கிளறி விடவேண்டிய அவசியமில்லை. வெந்ததா என்று பார்க்க வேண்டியதுமில்லை. ஒரு மணி வரை கொதித்து இறக்கினால் கட்டாயம் நன்கு வெந்திருக்கும். மிகப் பழைய அரிசியா யிருந்தால் ஒன்னேகால் ஒன்னரை மணி நேரம் வேக வைப்பது நல்லது. இந்த முறைப்படி சாதம் சமைத்தால் சகோதரிகளுக்கு மிக்க சௌகரியமுண்டு. மற்ற வேலைகளை நிம்மதியாய்க் கவனிக்க முடியும். கஞ்சி வடிக்கும் வேலையில்லாததால், கஞ்சி கையில் சில சமயம் வடிந்து விடுமே என்ற பயமுமில்லை. வாய்க்கும் இந்த சாதம் ருசியா யிருக்கும். இப்படிச் சாப்பிட்டுப் பழக்கமானவர்கள், மெஷினில் நன்கு தீட்டிய அரிசிச் சாதத்தைச் சாப்பிடப் பிரியப்பட மாட்டார்கள். மிஷின் அரிசிச் சாதமானது, ஏதோ சவ்வரிசிச் சாதம் போலப் பிசு பிசுப்பாய்த் தோன்றும். இம்மாதிரி முழுத் தவிட்டுடன் அரிசியைக் கஞ்சி வடிக்காமல் சாப்பிடுவதால், ஆரோக்கியத்துக்கு ஆரோக்கியமும் கிடைக்கும். மருந்துகளுக்காகச் செலவிடும் பணமும் மிச்சமாகும். வீட்டில் சந்தோஷமும் நிலவும்.

**கேள்வி:**—எனக்குப் பிரசவமாகி ஒரு மாதமாகிறது. கர்ப்பமாய் இருந்தபோது முதுகு வலி, நெஞ்சில் வலி இருந்து பல மருந்துகள் சாப்பிட்டேன். பிரசவமானபின் வலிகள் போய் விடும் என்றனர். ஆனால் அப்படிப் போய்விடவில்லை. முன்புபோல் அவ்வளவு அதிகமாய் வலி இல்லாவிடினும், அவ்விடங்களில் வலி என்னவோ இருக்கிறது. எனக்கு இருதயம், நுரை ஈரல், ரத்தம், சிறு நீர் முதலியவைகள் எல்லாம் நன்றாய் இருக்கின்றன. இந்த வலியைப் போக்க எந்த ஆசனங்களைச் செய்யலா மென்பதைத் தெரிவித்தால், மற்றும் என் போன்றுள்ள சகோதரிகளுக்கும் உபயோகமாய் இருக்கும்.

**பதில்:**—பிரசவமான மூன்று மாதங்களுக்குப் பின்தான் ஆசனங்களைத் துவங்கலாம். அதற்கு முன் செய்யக்கூடாது. அதுவும் ஆரம்பத்தில் கடினமான ஆசனங்களைச் செய்யக் கூடாது. வயிறு நசுங்கும்படியான ஆசனங்களைச் செய்யக் கூடாது. முதலில் புஜங்காசனம், பஸ்சிமோத்தானாசனம், விபரீத கரணி, மத்ஸ்யாசனம், திரிகோணு, சாந்தி ஆசனம், நாடி சுத்தி முதலியவைகள் மட்டும்தான் செய்யலாம். இவைகள் செய்து உடல் சற்று உறுதியடைந்த பின் சலபாசனம், தனுராசனம், சிரஸாசனம், அர்த்த மத்ஸ்யேந்திராசனம், யோக முத்ரா முதலியவைகளைச் செய்யலாம். சிலர் அவசரப்பட்டு வயிறு சிறுக்க வேண்டும் என்று தனுராசனத்தைச் செய்து விடுவார்கள். அப்படிச் செய்தால் கருப்பப்பை நசுங்கி அழுத்திச் சிலருக்கு வயிற்று வலி போவதற்குப் பதில் வயிற்று வலி வந்து விடும். சிலருக்குப் படிக்கட்டிலிருந்து சாதாரணமாகக் கீழே இறங்கினாலும்கூட வலிக்கும்.

ஒரு சகோதரி தன் வயிறு சென்ற பிரசவத்திற்குப் பின் பெரிதாய் விட்டதென்ற பயத்தினால், இந்தப் பிரசவத்தின் போதாவது வயிற்றைச் சரி செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணத்துடன் ஒரு நர்ஸிடம் ஆலோசனை கேட்டாள். அந்த நர்ஸ் பிரசவித்த ஏழாம் நாளிலிருந்தே, தினமும் பஸ்சிமோத்தானாசனம் செய்வதுபோல் செய்யச் சொல்லி இருக்கிறாள். இந்தம்மாளும் வயிறு சிறுக்க வேண்டும் என்ற ஆசையில் ஏழாம் நாளிலிருந்தே இப் பயிற்சியைப் பல தடவைகள் செய்தாள். இதற்குப் பலன் என்ன தெரியுமா! எந்நேரமும் சதா உதிரம் பட்டுக் கொண்டேயிருக்க ஆரம்பித்தது. ஒரு மாதம் ஆயிற்று. மூன்று மாதங்கள் ஆயிற்று. ஆறு மாதங்களாயிற்று. ஒரு வருஷமும் ஆயிற்று. நிற்பதாய்க் காணவில்லை. பல மருந்து, பல ஊசிகள், மற்றும் பெரிய ஆப்பரேஷன் எல்லாம் பார்த்தாய் விட்டது. எதற்கும் நிற்காத நிலைமையில் என்னை நாடி வந்தார். என் மனைவி எல்லாவற்றையும் தீர விசாரித்தாள். வெறும் விபரீதகரணி, மத்ஸ்யாசனம் மட்டும் ஒரு மாதம் செய்து விட்டுப் பின் புஜங்காசனம், பஸ்சிமோத்தானு, திரிகோணாசனம் செய்யும்படி சொல்லப்பட்டது. இவைகளைச் செய்த இரண்டு மாதத்திலேயே சிறிது குணம் ஆயிற்று. ஆறு மாதத்துக்குப் பின் பூரண குணமாகி மாதா மாதம், சரியாய் வீட்டு விலக்காகத் துவங்கினாள்.

ஆகையால் யாரும் அவசரப்பட்டுப் பிரசவித்த உடனேயே ஆசனம் ஆரம்பிக்கக் கூடாது. அதுவும் மூன்று மாதங்களுக்குப் பின், முன் சொன்னபடி ஆசனங்களைச் செய்து, வயிற்று உறுப்புகள் கெட்டியான பின்தான் வயிற்றை நசுக்கக்கூடிய ஆசனங்களைச் செய்யலாம்.

வயிற்று வலி, முதுகு வலி போக மேற்படி ஆசனங்களை செய்து கொண்டு, கடலைப் பருப்பு, துவரம் பருப்பு, உருளைக் கிழங்கு, வள்ளிக் கிழங்கு, முற்றின வாழைக்காய், பூசணி போன்றவைகளை அதிகம் சேர்க்காமல் இருக்க வேண்டும். வாரத்துக்கு ஒரு தடவை மிளகு, சீரகம் வறுத்து, அதில் சிறிது சுக்கு தட்டிப் போட்டு, பனங்கற்கண்டு போட்டுக் கஷாயம் வைத்துச் சாப்பிட்டால் மிகவும் நல்லது. (தொடரும்)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

# "இது உண்மை...
## லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்தால் நீங்கள் அதிக அழகோடு விளங்குவீர்கள்"

என்று கூறுகிறார்

மங்களம்



மங்களம் கூறுவதாவது: "லக்ஸ் டாய்லட் சோப்பின் சருமத்திற்கு ஊட்டமளிக்கும் சக்தி என் சருமத்தில் அற்புத மாறுதலை ஏற்படுத்தியிருப்பதைக் காண்கிறேன். இந்த சுத்தமான, வெண்மையான டாய்லட் சோப்பை நான் தினமும் உபயோகிப்பதால் என் சருமம் மிகவும் மென்மையாக இருக்கிறது."




# லக்ஸ் டாய்லட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 375-X 30 TM

Regd. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*

